# கல்லெழுத்துக் கலை




நடன. காசிநாதன், எம். ஏ.







மணிவாசகர் பதிப்பகம்
55, லிங்கி தெரு, சென்னை-600 001.

முதல் பதிப்பு : நவம்பர் 14, 1989



விலை : ரூ. 32-00

கிடைக்குமிடம்

மணிவாசகர் நூலகம்

12-B, மேல சன்னதி, சிதம்பரம்-608001
14, சிங்கராம் தெரு, பாரிமுனை, சென்னை-600001
55, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை-600001
28-A. வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625001
3/4 ராஜ வீதி கோயமுத்தூர்-641001
20, நந்தி கோயில் தெரு, திருச்சி-620002

சென்னை போன் : 512996, சிதம்பரம் போன் : 2799

அச்சிட்டோர் : கற்பகம் அச்சகம், 6, நல்லதம்பி தெரு.
சென்னை-600 002,

6-5

# புதுவகைக் கருவி நூல்


## டாக்டர் ச. மெய்யப்பன்

### அண்ணாமலைப் பல்கலைக்கழகம்


இன்றைக்கு 2500 ஆண்டுகட்கு முன்பிருந்து தமிழ்நாட்டு மலைகளிலும் குகைத்தளங்களிலும் பொறிக்கப்பட்டுள்ள பண்டைத் தமிழ்க் கல்வெட்டுகளை முறையாக ஆய்வு செய்து அக்கல்லெழுத்துக்களின் வளர்ச்சி நிலைகளை வரிசையாக வகைப்படுத்திக் கூறுகிறது இந்நூல்.

தென் இந்திய பிராமி என முன்பு அழைக்கப்பட்ட 'பண்டைத் தமிழி' எழுத்து அசோகன் பிராமி எழுத்தில் இருந்து எவ்வாறு வேறுபடுகிறது என்பதைத் தக்க சான்றுகளோடு விளக்குகிறது இந்நூல்.

இதுகாறும் தமிழ்நாட்டில் கிடைத்துள்ள 'பண்டைத் தமிழி' எழுத்துக்களின் அடிப்படையில் படிப்போருக்கு எளிதில் விளங்கும் வகையில் அட்டவணை தயாரிக்கப்பட்டு இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. அவ்வாறு பண்டைத் தமிழி எழுத்திலிருந்து 'வட்டெழுத்து', 'தமிழ் எழுத்து' என்ற இருவகை எழுத்துகள் வளர்ச்சி பெற்று வளர்ந்த விதத்தையும் அட்டவணைகள் தெளிவாக விளக்குகின்றன.

சங்க கால மன்னர்களான நெடுஞ்செழியன், சேரலிரும்பொறை, பெருங்கடுங்கோ, இளங்கடுங்கோ, அதியமான் ஆகியோர்களின் பெயர்களையும் அவர்கள் அளித்த அறக்கொடைகளையும் தெரிவிக்கும் மதுரை அருகில் உள்ள மாங்குளம் கல்வெட்டு,புகழூர் கல்வெட்டு, ஜம்பைக் கல்வெட்டு முதலியன பண்டைத் தமிழி எழுத்தில் முதன்முதலில் எழுதப்பட்டன என்பதைச் சுட்டிக்காட்டி இதே எழுத்தில்தான் நமது பண்டைய இலக்கியங்களும் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று உறுதியாகக் கூறும் ஆசிரியரின் திறன் போற்றத்தக்கது.

சங்க இலக்கியச் செய்திகளை கல்வெட்டுகள் உறுதிப்படுத்துவதை ஆசிரியர் ஆராய்ச்சி செய்து நிறுவுகிறார். சான்றாக சங்க காலத்தில் வழக்கில் இருந்த 'காவிதி' போன்ற பட்டப்பெயர் சித்தன்னவாசல் கல்வெட்டில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. பதிற்றுப்பத்தில் குறிக்கப்பெறும் சேர மன்னர்கள் மூவர் பெயரே புகழூர் கல்வெட்டில் குறிக்கப்பெறும் மன்னர்களாவர். தகடூரை ஆண்ட அதியமான் நெடுமான் அஞ்சியே தென்னாற்காடு மாவட்டம் திருக்கோவிலூர் வட்டம் ஜம்பைக் கல்வெட்டில் குறிக்கப்பெறும் மன்னன் என்றும் இவனே மௌரியப் பேரரசன் அசோகர் கல்வெட்டில் குறிக்கப்படும் 'சத்யபுத்ரர்' எனவும் அறிகிறோம். மேலும் அதியமான் நெடுமான் அஞ்சி திருக்கோயிலூரை ஆண்ட மலையமான் திருமுடிக்காரியோடு போரிட்டு வெற்றி கண்டான் என்ற இலக்கியச் செய்தி ஜம்பைக் கல்வெட்டால் உறுதியாகிறது.

சிலப்பதிகாரக் காலத்தில் இசையும், நாட்டியமும், கூத்தும் ஏற்றம் பெற்றிருந்தன என்ற காப்பிய காலச் செய்திக்கு அரண் செய்யும் வகையில் அரச்சலூர் இசைக் கல்வெட்டு அமைந்துள்ளதை ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார்.

தமிழக வரலாற்றில் இருண்ட காலத்தின் ஒளிவிளக்காக விளங்கும் பூலாங்குறிச்சி கல்வெட்டு இறைவன் உறையும் திருக்கோயிலை தேவகுலம் எனக் குறிப்பிடுகிறது. இவ்வழக்கு அறிய வேண்டிய வழக்கு. இலக்கியங்கள் திருக்கோயிலை தேவகுலம் என்று குறிப்பிடுவது இங்கு இணைத்து சிந்திக்கத் தக்கது.

பூலாங்குறிச்சிக் கல்வெட்டு கி.பி. 4-5 ஆம் நூற்றாண்டு வாக்கில் இருந்த நாடுகளையும் கூற்றங்களையும் குறிப்பதோடு மட்டுமல்லாமல் குடும்பியர், நாடு காப்பார், புறம் காப்பார், நெறி அறம் செய்வார் போன்ற அரசு அலுவலர்களையும் குறித்துச் செல்கின்றது. அறத்தை நெறிப்படுத்துவோரை 'நெறி அறம் செய்வார்' எனக் குறிப்பது அசோகர் காலத்திய தர்ம மகாமாத்தர் என்ற வழக்கினை நினைவூட்டுகிறது. இக் காலம் தமிழகத்தில் சிறந்த அரசியல் நிர்வாக அமைப்பு நிலவிய காலம் என அறிய முடிகிறது.

தமிழக வரலாற்றில் இருண்ட காலம் என இதுவரை கருதப் பட்ட காலக்கட்டத்தை ஒளிமயமான காலம் என ஆசிரியர் நிறுவி உள்ள திறம் போற்றுதற்கு உரியது. அதற்கு நூல் இறுதியில் இணைத்துள்ள ஆங்கில ஆய்வுக் கட்டுரை அரண் செய்கிறது.

பொதுவாக தமிழ்க் கல்வெட்டுகளில் இடம்பெற்றுள்ள செய்திகள் குறைவாக இருப்பினும் அவை வரலாற்று முக்கியத் துவம் வாய்ந்தவை. இலக்கியச் செய்திகளுக்கு அரணாக அமைபவை. சங்க காலச் சமுதாயச் சூழலை வெளிக் காட்டுபவை. சங்க மன்னர்களின் அறக்கொடையை அறிவிப் பவை. சமண சமய செல்வாக்கினைச் சுட்டிக் காட்டுபவை. வணிகர், மற்றும் வணிக மக்களின் வியாபாரக் குறியீடுகளை விளக்குபவை. மதுரை, கருவூர் போன்ற புகழ்பூத்த பண்டைய நகரங்களின் பெருமையினைப் பறைசாற்றுபவை. அந்துவன், இளங்கீரன் முதலிய சங்க காலப் பெயர்களை நினைவூட்டுபவை. அரட்டகாயபன், செங்காயபன் போன்ற சில முனிவர் பெயர் களைத் தெரிவிப்பவை, என்பதையெல்லாம் இந்நூலாசிரியர் அரிதின் முயன்று விளக்கியுள்ளார்.

'கல்லெழுத்துக் கலை' எனும் இந்நூல் பண்டைத் தமிழி எழுத்து, வட்டெழுத்து, தமிழ் எழுத்து, கிரந்த எழுத்து ஆகிய பண்டைய எழுத்துகளை எளிதில் படித்துப் பயன் பெறுவதற்கு ஏற்ற வகையில் எழுதப்பட்டுள்ளது.

தொல்லியல் துறைக்கு இது ஒரு கருவி. கல்வெட்டுத் துறைக்கு இது ஒரு கைவிளக்கு. கல்வெட்டை ஒருவர் தானே கற்றுக்கொள்ள இதுவொரு வழிகாட்டி. கல்வெட்டு எழுத்து களின் அமைப்பினை அறிந்தோர் செப்பேட்டு எழுத்துகளைப் பயில்வதற்கு வழிவகைகளை ஆசிரியர் எடுத்துக் கூறியுள்ள திறம் மிகுந்த பயனைத் தருகிறது.

கல்வெட்டுப் படி எடுக்கும் முறையினை அறிவியல் அணுகு முறையோடு அழகாகச் சொல்லி உள்ளார். கல்வெட்டியல் கல்வியில் இதுவொரு வளர்ச்சி நிலையைக் காட்டும் நிலை.

எட்டாம் வகுப்பு பயின்றவர்களே இந்நூலினைப் படித்து பண்டையத் தமிழ் எழுத்தினைக் கற்க முடியும் என்ற தன்னம்பிக்கையை உருவாக்குகிறது.

சித்த வைத்தியம் போல் சிலரிடம் சிக்கிக் கொண்டிருந்த கல்வெட்டு ஆய்வு விடுதலைக்குப்பின் விடுதலை பெற்றது. அதுபோல் கல்வெட்டுப் பயிற்சி பயில்வோர் தொகை பெருகியது. கோடைக்காலக் கல்வெட்டுப் பட்டறை சான்றிதழ் வகுப்புகள், முதுநிலைப் பட்டயப்படிப்புகள் மற்றும் கல்வெட்டுப் பயிற்சி கொடுக்கும் முறையும் பல வகைகளில் வளர்ந்தது.

ஆர்வம் மிக்க இளைஞர்கள் உழைத்து இன்று இத்துறையில் புகுவதற்கு இருந்த அச்சம் நீக்கப்பட்டுள்ளது. இந்நிலையில் தாமே கல்வெட்டு எழுத்துகளை படிப்பதோடும், புரிந்து கொள்ளவும், ஆய்வு செய்யவும் இவ்வகை நூல்கள் பெரும் துணையாக அமையும் என்பது என் நம்பிக்கை.

இந்நூலாசிரியர் அறிஞர் நடன காசிநாதன் அவர்கள் நுண்ணறிவோடு பட்டறிவு மிக்கவர். ஆதலால் பயிற்றுவித்தல் முறைகளில் மிக எளிய வழி வகைகளில் பாடங்களை அமைத்துச் சொல்கிறார்.

அகமுடையான், அடைக்காய், அதிகாரிச்சி, அம்மான், அறுவை, வாணியச்சேரி, இலையமுது, இறை, ஈரங்கொல்லி, உவச்சன், ஊர்க்கல், கடையிறுக்கும் கோல், கடைப்பூ, கீழோலை, கீழ்க்கணக்கு, குங்குலியம், குதம்பை, கூறை முதலிய தீந்தமிழ்ச் சொற்கள் கல்வெட்டுகளில் பயின்று வந்துள்ளமை யினை ஆசிரியர் பட்டியலிட்டு காட்டியிருப்பது இந்நூலுக்கு வலிமை சேர்க்கிறது. மேலாய்வுக்கு வழி வகுக்கிறது. அறிஞர் நடன காசிநாதன் கல்வெட்டுத்துறையில் கல்வெட்டாய் வாளர், பதிவு அலுவலர், துணை இயக்குநர், இயக்குநர் ஆகிய பதவிகளைப் படிப்படியாகக் கடந்து வந்தவர். நேரு பெருமானால் மேற்கோள் காட்டப்பட்ட புகழ் பெற்ற வரலாற்றுத்துறைப் பேராசிரியர், சத்தியநாத ஐயரிடம் பயின்றவர். அவரால் பயிற்றுவிக்கப்பட்டவரிடமும் பயின்றவர். பல்நூல் ஆசிரியர். கல்லெழுத்துக் கலையில் தேர்ந்தவர். வட்டெழுத்தைப் படிப்பதில் வல்லவர். வரலாற்றுச் சிறப்பு மிக்க உறையூர், கொற்கை, காஞ்சி, கங்கைகொண்ட சோழபுரம் ஆகிய இடங்களில் நடந்த அகழ்வாய்வில் பங்கு கொண்டவர்.

இப்புதிய துறையில் கல்வெட்டு எழுத்துகளைக் கற்கும் நெறியினை உணர்த்தி பல்வகையில் ஆசிரியர் ஒரு சாதனை யாளர் ஆகிறார். வளர்கல்விக்கு வழிவகுத்தார். ஆதலால் இத்துறை இவருக்குக் கடமைப்பட்டுள்ளது. துறைதொறும் தமிழுக்கு ஆக்கம் சேர்க்கும் மணிவாசகர் பதிப்பகம் இந்த நல்ல நூலை வெளியிடுவதின் மூலம் தன் பெருமையினை கல்லெழுத்துக்களில் பதித்துக் கொள்கிறது.

# அணிந்துரை

டாக்டர் ஔவை நடராசன்
தமிழ் வளர்ச்சி—பண்பாட்டுத்துறைச் செயலாளர்

கல்வெட்டு என்பது, கல்லில் வெட்டப்பெறும் எழுத்துகள் என்று பொருள்படும். இவ்வெழுத்துப் புனைவையே கல்லெழுத்துக் கலை என்ற பெயராக்கி இவ்வழகிய நூல் அமைகிறது. வாகை சூடிய வென்றிப் பெருமிதம், வள்ளன்மை சுட்டும் கொடைத் திறம், தறுகண்மை முதலிய சீர்த்திகளைக் கல்லாய்ந்து பொறிப்பது தமிழ் வழக்கமாகும். தொல்காப்பியம் போலவே ''பீடும் பெயரும் எழுதி அதர்தொறும் பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்'' என்ற அகநானூற்றுச் செய்யுளும், அந்நாளில் 'கல்காப்பியம்' அமையும் வழக்கைச் சுட்டிக் காட்டிற்று. சங்க காலம் தொடங்கிய இம்மரபு 'பட்டோர் பெயரும் ஆற்றலும் எழுதி நட்ட கல்லும் மூதூர் நத்தமும்' என்ற திருவாரூர் மும்மணிக் கோவையின் தொடராலும் காலந்தொறும் தொடர்ந்து வந்திருப்பதைக் காணலாம்.

ஆண்ட மன்னரின் நீண்ட புகழை நிலை நிறுத்தும் 'கல்லிலக்கியம்' பெருகியதைக் கண்ட புலவர்கள் மெய்க்கீர்த்தி புனைதற்கென்றே இலக்கணமும் கூறலாயினர்:

'' சீர் நான் காகி யிரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப்புக ழெல்லாஞ் சொல்லியும்
அந்தத் தவன்வர லாறு சொல்லியும்
அவளுடன் வாழ்கெனச் சொல்லியு மற்றவன்
இயற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்
திறப்பட வுரைப்பது சீர்மெய்க் கீர்த்தி ''

என்பது பன்னிருபாட்டியற் சூத்திரமாகும்.

செவிப் புலனாகும் ஒலியினைக் கட்புலனாக்கும் முயற்சியின் விளைவால் எழுத்து வடிவங்கள் தோன்றின.

எழுதத் தொடங்கிய காலத்தில் எழுதுகளமாகவும் எழுது பொருளாகவும் எவை பயன்பட்டனவெனத் தெளிவாகத் தெரியவில்லை. தாழை மடலில் பித்திகை அரும்பு கொண்டு எழுதியதாக இளங்கோவடிகள் புனைந்து மகிழ்ந்தார். ''எழுத்து'' என்றாலே அழியாதது என்றும் வடமொழியாளர் பொருள் கூறுவர். வாய்ச்சொல்லைவிட வரிவடிவம் பெறும் எழுத்து நிலைத்ததாகும். 'கல்லின் மேல் எழுத்து' என்றால் காலத்தால் அழியாதது என்பதன்றோ கருத்து! 'கல்மேல் எழுத்துப்போல் காணுமே' என்ற வழக்கும் கருதத்தக்கது.

எழுத்துகளின் தோற்றமும், வளர்ச்சியும் நுணுகி ஆராயத்தக்கன. இந்நிலையில் ஆய்வுணர்வுகள் பல்கிப் பெருகி வருகின்றன. தமிழக அரசின் தொல்பொருளாய்வுத் துறையின் இயக்குநர் அறிஞர் நடன காசிநாதன் தம் துறை பழுத்த ஆய்வுப் புலமையின் விளைவாக இவ்வரிய படைப்பை வழங்குகிறார்கள். ஆர்வம் மிகுந்த புலமையும், அன்பு கனிந்த நெஞ்சும், அயராத உழைப்புத் திறமும் அணிகலனாகப் பூண்ட அறிஞர் நடன. காசிநாதன் இளமைதொட்டே கல்வெட்டாய்வைப் பயின்று தேர்ந்தவர். பல்லாண்டுகளாகக் கல்லாய்ந்த அறிஞர் பலர் துறை நுணுக்கம் வாய்ந்தவரா யிருந்தும் தமிழ்க் கலை நுணுக்கம் அறியாது இடர்ப்பட்டதை நாம் அறிவோம். நண்பர் நடன. காசிநாதன் அவர்கள் இரு துறைகளையும் பழுதறத் தெரிந்த புலமைப் பான்மைய ராவார். இது நமக்கு வாய்த்த பேறு. தமிழ் எழுத்துகளின் தொன்மையை ஆராயும் நூலாசிரியர்,

''தமிழகத்தில் பழந்தமிழ் எழுத்துப் பொறித்த கல்வெட்டுகள் மலைக்குகைகளில் மட்டுமல்லாமல் பானை ஓடுகள், காசுகள் ஆகியவற்றிலும் கிடைத்துள்ளன. அரிக்க மேடு, கொற்கை, உறையூர், காஞ்சிபுரம், கரூர், வல்லம், கொடுமணல் ஆகிய இடங்களில் நடைபெற்ற அகழ்வாய்வு களில் பானை ஓடுகளில் இவ்வெழுத்துகள் பொறிக்கப் பட்டிருப்பது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. வடார்க்காடு மாவட்டம் செங்கத்துக்கு அருகில் உள்ள ஆண்டிபட்டியில் கிடைத்த ஈயக் காசுகளில் இவ்வெழுத்து பொறிக்கப்பட்டிருக் கிறது. இது அக்காலத்தில் மக்களிடத்தில் இவ்வெழுத்து பெற்றிருந்த செல்வாக்கைப் புலப்படுத்துவதாகவுள்ளது. குறிப்பிட்ட ஒரு மதத்தார்தான் இவ்வெழுத்தைப் பரப்பினர் என்ற கருத்தை உடைத்தெறிவதாக இதைக் கருதலாம். அனைத்து மக்களும் நன்கு அறிந்த ஒரு எழுத்தாக இது நிலவி

வந்திருக்கிறது. அவ்வாறெனில் தொன்றுதொட்டே இது வழங்கி வந்திருத்தல் வேண்டும் என்று நாம் ஊகிக்கலாம். பானை ஓடுகளிலும் குறிப்பாக — கறுப்பு, சிவப்பு பானை ஓடு களில் இவ்வெழுத்து எழுதப் பெற்றிருப்பது இவ்வெழுத்து களின் பழமை கி.மு. 5 — 4 ஆம் நூற்றாண்டு என்று கொள் வதற்கு மேலும் ஆதாரமாக அமைகிறது'' என்று ஆராய்ந்து கூறுவது நமக்கு ஊக்கம் தரும் பொருண்மையாகும்.

இந்நூலின் தொடக்கத்திலிருந்தே தமிழ் எழுத்துக்கும், வட்டெழுத்துக்கும் அமைந்த கூறுகளை, வட்டெழுத்துகளின் வளர்ச்சி முறையை எடுத்துக் காட்டுவது, வரி வடிவ வளர்ச்சியைக் காட்டுவதாகவே அமைகின்றது. கல்வெட்டு களின் அமைப்பு, மொழிநடை, இலக்கியச் சாயல், வரலாற்றுக் குறிப்பு ஆகிய பல்வேறு இயல்புகளை ஆசிரியர் நன்கு ஆராய்ந் துள்ளார். கல்வெட்டுச் சொற்களின் தொகுப்புப் பெரிதும் பயன் தருவதாகும். வடசொல் விரவிய தமிழாகக் கல்வெட்டுச் சொற்கள் அமைந்திருந்தாலும், இனிய தமிழ்ச் சொற்களும், சொல்லாக்க மரபுகளும் போற்றத் தக்கனவாக இடையிடையே அமைவதனை இத்தொகுப்பு எடுத்துக்காட்ட வல்லது. கல்லெழுத்துகளைக் கண்டுணர்வது எல்லோர்க்கும் எளிதில் இயலாது. அரியதொரு கலை என்பதனை நூலின் பெயரிலேயே எழிலுறத் தெரிவித்த ஆசிரியர், கல்லெழுத்துக் கலையில் தாம் பெற்ற தெளிவைக் கவினிய கட்டுரைகளாக்கித் தமிழுலகுக்கு வழங்கிய திறம் அருமைப்பாடுடையது. சுருங்கச் சொன்னால், கல்லெழுத்துக் கலையினைப் பயில விழை வோர்க்கு இந்நூல் கைவிளக்காகி மெய்ம்மைகளை உணர்த்த வல்லதாகும். தொல்லாய்வுத் துறையின் தலைமை தாங்கும் அறிஞர் நடன. காசிநாதன் இத்தகைய அரிய நூல்கள் பலவற்றைப் படைத்துத் தொல்லாய்வுக் கலைக்குப் புகழ் சேர்க்க வேண்டுமென்பது தமிழ் மக்களின் விழைவாகும். விழுமிய கருத்துக்களின் விளக்கமாகத் திகழும் இந்நூலை இரு கை நீட்டித் தமிழகம் வரவேற்று மகிழ்வதில் ஐயமில்லை.

# முன்னுரை

தமிழகத்தில் கோயில்களிலும் பாறைகளிலும் காணப் பெறும் கல்வெட்டுகள் தமிழ்நாட்டு வரலாறு எழுதுவதற்குச் சான்றுகளாக அமைபவை என்பதை ஆங்கிலேயர் சென்ற நூற்றாண்டிலேயே உணர்ந்து அவற்றையெல்லாம் தக்க முறையிலே படியெடுத்துத் தற்காலத்திய எழுத்திலே நூல் களாக வெளியிடுவதற்கு ஆர்வம் காட்டினார்கள். அவ்வாறு படியெடுக்கப்பட்ட கல்வெட்டுக்களின் ஆண்டறிக்கை 1887 முதல் வெளியிடப்பட்டு வருகிறது.

இச்சூழ்நிலையில், இக்கல்வெட்டுக்களைப் படித்து அறிந்து கொள்பவர்கள் மிகவும் குறைந்த அளவிலேயே இருந்து வந்தனர். பண்டைய எழுத்துகளைப் படிப்பதற்கு ஒரு முறை யான பயிற்சியளித்தல் வேண்டும் என்ற தமிழக அரசின் விருப்பத்திற்கேற்ப 1970 ஆம் ஆண்டு முதல், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை தமிழகத்தில் உள்ள கல்லூரி மற்றும் பள்ளி ஆசிரியப் பெருமக்களுக்குக் கோடைக்காலப் பயிற்சி நடத்தி, பண்டைய எழுத்துகளைப் படித்துப் புரிந்து கொள்ளும்படி செய்து வருகிறது. இக்கல்வெட்டுப் பயிற்சியில் பங்குகொண்டு பயிற்சி பெற்ற ஆசிரியப் பெருமக்கள் தங்கள் ஊர்ப்பகுதிகளிலிருந்து பல புதிய கல்வெட்டுக்களைக் கண்டு பிடித்து இத்துறைக்குத் தெரியப்படுத்தியிருக்கின்றார்கள். அதன்மூலம் தமிழக வரலாற்றுக்குப் பல புதிய சான்றுகள் கிடைத்துள்ளன. குறிப்பாக வடஆர்க்காடு செங்கம் பகுதியில் பல நடுகற்கள் இத்துறையால் கண்டுபிடிக்கப்பட்டதற்கு மேற் காணும் பயிற்சியில் பங்குபெற்ற ஒரு ஆராய்ச்சி மாணவரின் உதவி இத்துறைக்குப் பேருதவியாக அமைந்தது.

ஆண்டுதோறும் இப்பயிற்சி நடைபெற்று வந்தாலும் பயிற்சியில் பங்கு பெறுகின்ற ஆசிரியர்களுக்குப் பண்டைய தமிழ் எழுத்துகளைக் கற்றுத் தருவதற்கு இதுவரையில் யாதொரு நூலும் எழுதப்படவில்லை. அந்தத் தேவையை நிறைவு செய்யும் வண்ணம் இக்''கல்லெழுத்துக் கலை'' என்ற நூல் எழுதப்பட்டுள்ளது.

இந்த நூல் இரண்டு பகுதிகளைக் கொண்டு விளங்குகிறது. முதல் பகுதியில் பண்டைத் தமிழ் எழுத்து (தமிழி), வட்டெழுத்து, தமிழ் எழுத்து, கிரந்த எழுத்து ஆகிய எழுத்துகளின் அட்டவணைகளும், ஒவ்வொரு எழுத்தும் வளர்ச்சி பெற்ற பாங்கும் படத்துடன் காட்டப்பட்டுள்ளது. இப்பகுதி இத்துறையால் நடத்தப்பெறும் கல்வெட்டுப் பயிற்சியில் பங்கு பெறும் ஆசிரியப் பெருமக்களுக்கும் மற்றும் கல்வெட்டுகளைத் தாமாகவே படித்துத் தெரிந்துகொள்ளவேண்டும் என்று விழையும் சாதாரண பொதுமக்களுக்கும் ஒரு வழிகாட்டியாக அமையும்.

இரண்டாம் பகுதி ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தாங்கி வரும் பகுதியாகும். இப்பகுதியில் உருவ எழுத்து, எழுத்துக் கலை, பண்டைத் தமிழ் எழுத்து - ஓர் ஆய்வு, மற்றும் பல்லவர், பாண்டியர், சோழர் காலச் செப்புப் பட்டயங்கள் ஆகியவை பற்றி விரித்துக் கூறப்பட்டுள்ளன. மேலும் இரு கட்டுரைகள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன. இறுதியாகக் கல்வெட்டில் காணப்பெறும் சொற்களின் பட்டியல் பொருளுடனும், இடக் குறிப்புடனும் தரப்பட்டுள்ளன. மேற்காணும் கட்டுரைகளும் கல்லெழுத்துச் சொல்பொருளும் ஆராய்ச்சியாளர்களுக்கு மிகவும் பயனுடையதாக அமையும். மேற்காணும் கட்டுரைகள் பல்வேறு காலங்களில் என்னால் எழுதப்பட்டவை என்ற காரணத்தினால் ஒரு சில இடங்களில் ஒரே கருத்து திரும்பவும் கூறப்பட்டு இருக்கலாம். அது கால இடைவெளியால் ஏற்பட்ட இடையூறு மேலும் இந்நூல் கம்பிரிண்ட் (Cumprint) என்ற புதிய அச்சு முறையில் அச்சாக்கப்பட்ட காரணத்தினால் ஒரு சில கட்டுரைகளில் அடிக்குறிப்புக்குத் தரப்பட்டுள்ள எண்கள் வரிகளிலேயே காணப்படுகின்றன. அடிக்குறிப்புகள் இடம் பெறவில்லை. மேற்காணும் குறைகளைப் பொருத்தருள வேண்டுகிறேன். மற்றபடி இந்நூல் ''கல்லெழுத்துக் கலை'' என்ற பெயருக்கேற்ப கல்லெழுத்துக் கலையைப் பற்றி ஓரளவுக்கு முழுமையான செய்தி தாங்கி வெளிவருகிறது எனத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அச்சாக்குவதற்கு அனுமதியளித்த தமிழ்நாடு அரசுக்கு என்னுடைய பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் இந்நூலுக்கு அணிந்துரை வழங்க வேண்டுமாய் எம் துறைச் செயலாளர் டாக்டர் ஔவை நடராசன் அவர்களை அணுகி வேண்டியபோது சிறிதும் தயங்காமல் உயரிய அணிந்துரை நல்கியமைக்கு என்னுடைய உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை நான் எழுதிய காலத்தில் என்னை ஊக்குவித்த முன்னாள் இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி அவர்களுக்கும், இந்நூலின் அட்டைப் படத்தையும் மற்றும் எழுத்துப் படங் களையும் வரைந்துதவிய நண்பர் திரு. முரளீதரன் அவர் களுக்கும், இந்நூலை அச்சுவடிவில் காண ஆர்வம் காட்டிய தினமலர் நிருபர் திரு. நூருல் மற்றும் நண்பர் திரு. மா. சந்திர மூர்த்தி ஆகியோருக்கும், இந்நூலை முதலில் அச்சிடுவதற்கு முனைந்த தமிழ்க்கடல் பதிப்பக நிறுவனத்தைச் சேர்ந்த திரு. சுவாமி அவர்களுக்கும், சிறந்த முறையில் அச்சிட்டு வெளிக்கொணர்ந்துள்ள மணிவாசகர் பதிப்பக பதிப்பாசிரியர் டாக்டர் ச. மெய்யப்பன் அவர்களுக்கும் என்னுடைய உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் அச்சிடுவதில் பெரும் தொகை செலவு ஏற்படும் என்று மிக நன்றாகத் தெரிந்திருந்தும் மணிவாசகர் பதிப்பகத்தார் இந்நூலை வெளியிட்டே ஆகவேண்டும் என்ற வேட்கையோடு அச்சிட்டு வெளியிட்டதற்கு, இந் நிறுவனப் பதிப்பாளருக்கும், அந்நிறுவனத்தில் பணிபுரியும் திரு. குருமூர்த்தி அவர்களுக்கும் என்னுடைய நெஞ்சார்ந்த நன்றியையும், பாராட்டுதல்களையும் தெரிவித்துக் கொள் கிறேன்.

இந்நூலின் துணை கொண்டு பண்டை எழுத்துகளைத் தம்மால் பயில முடிந்தது என்று எவரேனும் ஒருவர் கூறினால் கூட அதுவே யான் இந்நூலை எழுதியதற்குக் கிடைத்த பெரும் கைம்மாறாகக் கருதுவேன்.

அன்பன்

நடன. காசிநாதன்

## உள்ளுறை

# எழுத்தின் தோற்றம்

இவ்வுலகில் தோன்றிய மனித இனம் பேசும் ஆற்றல் பெற்றதாக ஆரம்பத்தில் இருக்கவில்லை. அவர்களும் ஆடு, மாடுகளைப் போன்றே 'ஆ' 'ஊ' என்றே ஒலிகள் எழுப்பித் தங்களது விருப்பத்தைப் பிறரிடம் தெரியப்படுத்தினர். வாயினால் ஒலிகள் எழுப்பியும், கைகளால் சைகைகள் காட்டியும் தங்களது கருத்துக்களைப் பிறருக்குத் தெரியப்படுத்தியவர்கள், காலப் போக்கில் படங்கள் வரைந்து தங்களது எண்ணங்கள் யாவை என்று புலப்படுத்தினர். உதாரணமாகப் 'பகல்' என்பதற்கு 'சூரியனது' படத்தை வரைந்தனர். அச்சூரியனது படமே நாளாவட்டத்தில் 'பகல்', வெப்பம்', 'கோள்' ஆகிய எல்லாவற்றையும் அறிவிப்பனவாக அமைந்தது.

காலம் மாற மாற 'சூரியன்' உருவம் 'சூ' என்ற எழுத்தையும் அறிவிப்பதாக ஆகியது. மேற்கூறப் பெற்ற இந்த வகையில்தான் இன்று காணப்படும் எல்லா எழுத்துக்களும் உருவாகியுள்ளன.

இந்தியாவில் மொஹஞ்சோதரோ, ஹரப்பா என்னுமிடங்களில் கிடைத்துள்ள களிமண் தகடுகளில் சில உருவங்கள் காணப்படுகின்றன. அவை அக்காலத்தில் வாழ்ந்த மக்கள் பயன்படுத்திய எழுத்துக்கள். ஒவ்வொரு படமும் ஒரு கருத்தைத் தெரிவிப்பனவாக உள்ளது. தற்காலத்தில் உள்ள உயிர் எழுத்து, மெய் எழுத்து, உயிர்மெய்யெழுத்து ஆகிய எந்த எழுத்திலும் அவை சேராதவை.

ஆனால், அவ்வுருவ எழுத்துக்கள் மேலும் மேலும் சீரடைந்து தற்கால எழுத்துக்களைத் தோற்றுவிக்கக் காரணமாக அமைந்தன.

## இந்திய எழுத்து

இந்தியாவில் இன்று வழங்கப்பெறும் எல்லா வகை எழுத்துக்களும் 'பிராமி' எழுத்திலிருந்துதான் வளர்ச்சியடைந்தன என்று கூறுவர். அந்த பிராமி எழுத்து மொஹஞ்சோதரோ, ஹரப்பா களிமண் தகடு களில் காணப்படும் உருவ எழுத்துக்களிலிருந்து வளர்ச்சி பெற்றிருக்கலாம் என்று கருதப்படுகிறது.



பிராமி எழுத்து இந்தியாவில் வழங்கிய காலத்தில் பதினெட்டு வகையான எழுத்துக்கள் இருந்திருக்கின் றன என்பது கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த 'சமவயங்கசுத்த' என்னும் சமண நூலினால் தெரிய வருகிறது. இப்பதினெட்டு வகை எழுத்துக்களும் ஒரே எழுத்தின் பல்வேறு மாறுபட்ட வடிவங்களாகவே இருந்திருக்கலாம்.

இப்பதினெண் வகை எழுத்துக்களுள் ஒன்றாகத் 'தமிழி' என்னுமொரு எழுத்து குறிக்கப்படுகிறது. அவ் வெழுத்துத்தான் தமிழகத்தில் வழங்கி வந்த மிகப் பழமையான எழுத்து என்று கருதப்படுகிறது. அவ் வெழுத்தைப் பழந்தமிழ் எழுத்து என்றே கூறலாம்.

தமிழ் நாட்டு எழுத்துக்கள்

தமிழ் நாட்டில் 'தமிழி' எழுத்து கி.மு. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 3-ஆம் நூற்றாண்டு வரை, ஏறக்குறைய 600 ஆண்டுகட்டு வழங்கி வந்திருக்கிறது.

இவ்வெழுத்துக்களை மலைக் குகைகள்ல் காணப் பெறும் கல்வெட்டுக்களிலும், பானை ஓடுகளின் மீதும், சில காசுகளிலும் காண முடிகிறது.

தமிழ்நாடு முழுவதும் இவ்வெழுத்து பழக்கத்தி லிருந்திருக்கிறது. தமிழகத்தின் வடபகுதியான வடார்க் காடு மாவட்டத்தில், செங்கம் பகுதியில், காசுகளில் இவ்வெழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. தமிழ் நாட்டின் மையப் பகுதியான உறையூர், கரூர் ஆகிய பகுதிகளில், பானை ஓடுகளில் இவ்வெழுத்துக்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. தமிழகத்தின் மேற்குப் பகுதியான புகழூரிலும், தென் பகுதியான மதுரை யைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் மலைக் குகைகளில் இவ்வெழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

குறிப்பாக மதுரையைச் சுற்றியுள்ள பகுதியில்தான் இவ்வெழுத்திலுள்ள கல்வெட்டுக்களை அதிக அளவில் காண முடிகிறது. தமிழ் வளர்த்த பாண்டியர்கள் ஆட்சி செய்த பகுதியல்லவா! ஆதலால் இப்பகுதி

யில் மிகுந்த அளவில் பழமையான எழுத்துக்களைக் கொண்ட கல்வெட்டுகள் கிடைப்பதில் வியப்பேது மில்லை.

இவ்வெழுத்தும் நாளாவட்டத்தில் இரு வகை எழுத்துக்களாக வளர்ச்சி பெறலாயின. ஒன்று 'வட்டெழுத்து', மற்றொன்று இன்றைய 'தமிழ்' எழுதது. இந்த வளர்ச்சி இன்றைக்கு ஏறக்குறைய 1700 ஆண்டு கட்கு முன்பாக ஏற்பட்டது.

வட்டெழுத்து, தமிழ் எழுத்து ஆகியவை பழக்கத்திலிருக்கையிலேயே வேறொரு எழுத்தும் தமிழகத்தில் நிலவியிருக்கிறது. அவ்வெழுத்து 'கிரந்த' எழுத்து என்று கூறப்படும்.

சமஸ்கிருத மொழியின் ஒலிகளைச் சரியாக எழுது வதற்குக் கிரந்த எழுத்து பயன்படுத்தப்பட்டது. பல்லவர் காலம் முதல் இவ்வெழுத்தைக் கல்வெட்டுகளில் காண முடிகிறது.

வேற்று நாட்டார்களின் படையெடுப்பால் வேறு பல எழுத்துக்கள் உள்ள கல்வெட்டுகள் தமிழகத்தில் காண நேரிட்டாலும், சிறப்பாக மேலே கூறப்பெற்ற நான்கு வகையான எழுத்துக்களில்தான் கல்வெட்டுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஆதலால் அவ்வெழுத்துக்களை நாம் தெளிவாகக் கற்றுக் கொள்ளுதல் இன்றியமையாததாக அமைகிறது.

### தமிழி எழுத்து

இன்றைக்கு வழக்கில் உள்ள தமிழ் எழுத்தின் பழைய வடிவத்தைத்தான் 'தமிழி' எழுத்து என்கிறோம். சங்க கால நூல்கள் அனைத்தும் இந்த எழுத்தில்தான் எழுதப் பெற்றிருத்தல் வேண்டும். இவ்வெழுத்து எளிதில் கற்றுக் கொள்ளக்கூடிய வகையில் அமைந்துள்ளது.

இவ்வெழுத்துக்கள் நேர்க்கோடுகளையும், பக்கக் கோடுகளையுமே கொண்டு விளங்குகின்றன. தமிழ் மொழிக்கே உரிய சிறப்பெழுத்துக்களான 'ழ' 'ள' 'ற' 'ன' ஆகிய நான்கு எழுத்துக்களையும் பெற்றிருக் கிறது. இந்த வகையில் இவ்வெழுத்து அசோகன் காலத்திய 'பிராமி' எழுத்தில் இருந்து வேறுபடுகிறது. அசோகன் காலத்திய 'பிராமி' எழுத்தில் மேற்கூறப் பெற்ற சிறப்பெழுத்துக்கள் காணப்படவில்லை.

இதன் காரணமாகத் 'தமிழி' எழுத்தை முன்பெல் லாம் 'தென் இந்திய பிராமி' என்று அழைத்தனர்.

இதுவரை தமிழ்நாட்டில் கிடைத்துள்ள 'தமிழி' எழுத்துக்களின் அடிப்படையில் ஒரு அட்டவணை தயாரிக்கப்பட்டு அது கீழே தரப்படுகிறது.

'தமிழி' எழுத்து அட்டவணை

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 𑀅 | 𑀆 | 𑀇 | 𑀈 | 𑀉 | 𑀊 | 𑀏 | 𑀏 | | 𑀑 | |
| க | 𑀓 | 𑀓𑀸 | 𑀓𑀺 | 𑀓𑀻 | 𑀓𑀼 | 𑀓𑀽 | 𑀓𑁂 | 𑀓𑁂 | 𑀓𑁃 | 𑀓𑁄 | 𑀓𑁄 |
| ங | 𑀗 | 𑀗𑀸 | 𑀗𑀺 | 𑀗𑀻 | 𑀗𑀼 | 𑀗𑀽 | 𑀗𑁂 | 𑀗𑁂 | 𑀗𑁃 | 𑀗𑁄 | 𑀗𑁄 |
| ச | 𑀘 | 𑀘𑀸 | 𑀘𑀺 | 𑀘𑀻 | 𑀘𑀼 | 𑀘𑀽 | 𑀘𑁂 | 𑀘𑁂 | 𑀘𑁃 | 𑀘𑁄 | 𑀘𑁄 |
| ஞ | 𑀜 | 𑀜𑀸 | 𑀜𑀺 | 𑀜𑀻 | 𑀜𑀼 | 𑀜𑀽 | 𑀜𑁂 | 𑀜𑁂 | 𑀜𑁃 | 𑀜𑁄 | 𑀜𑁄 |
| ட | 𑀝 | 𑀝𑀸 | 𑀝𑀺 | 𑀝𑀻 | 𑀝𑀼 | 𑀝𑀽 | 𑀝𑁂 | 𑀝𑁂 | 𑀝𑁃 | 𑀝𑁄 | 𑀝𑁄 |
| ண | 𑀡 | 𑀡𑀸 | 𑀡𑀺 | 𑀡𑀻 | 𑀡𑀼 | 𑀡𑀽 | 𑀡𑁂 | 𑀡𑁂 | 𑀡𑁃 | 𑀡𑁄 | 𑀡𑁄 |
| த | 𑀢 | 𑀢𑀸 | 𑀢𑀺 | 𑀢𑀻 | 𑀢𑀼 | 𑀢𑀽 | 𑀢𑁂 | 𑀢𑁂 | 𑀢𑁃 | 𑀢𑁄 | 𑀢𑁄 |
| ந | 𑀦 | 𑀦𑀸 | 𑀦𑀺 | 𑀦𑀻 | 𑀦𑀼 | 𑀦𑀽 | 𑀦𑁂 | 𑀦𑁂 | 𑀦𑁃 | 𑀦𑁄 | 𑀦𑁄 |
| ப | 𑀧 | 𑀧𑀸 | 𑀧𑀺 | 𑀧𑀻 | 𑀧𑀼 | 𑀧𑀽 | 𑀧𑁂 | 𑀧𑁂 | 𑀧𑁃 | 𑀧𑁄 | 𑀧𑁄 |
| ம | 𑀫 | 𑀫𑀸 | 𑀫𑀺 | 𑀫𑀻 | 𑀫𑀼 | 𑀫𑀽 | 𑀫𑁂 | 𑀫𑁂 | 𑀫𑁃 | 𑀫𑁄 | 𑀫𑁄 |
| ய | 𑀬 | 𑀬𑀸 | 𑀬𑀺 | 𑀬𑀻 | 𑀬𑀼 | 𑀬𑀽 | 𑀬𑁂 | 𑀬𑁂 | 𑀬𑁃 | 𑀬𑁄 | 𑀬𑁄 |
| ர | 𑀭 | 𑀭𑀸 | 𑀭𑀺 | 𑀭𑀻 | 𑀭𑀼 | 𑀭𑀽 | 𑀭𑁂 | 𑀭𑁂 | 𑀭𑁃 | 𑀭𑁄 | 𑀭𑁄 |
| ல | 𑀮 | 𑀮𑀸 | 𑀮𑀺 | 𑀮𑀻 | 𑀮𑀼 | 𑀮𑀽 | 𑀮𑁂 | 𑀮𑁂 | 𑀮𑁃 | 𑀮𑁄 | 𑀮𑁄 |
| வ | 𑀯 | 𑀯𑀸 | 𑀯𑀺 | 𑀯𑀻 | 𑀯𑀼 | 𑀯𑀽 | 𑀯𑁂 | 𑀯𑁂 | 𑀯𑁃 | 𑀯𑁄 | 𑀯𑁄 |
| ழ | 𑀵 | 𑀵𑀸 | 𑀵𑀺 | 𑀵𑀻 | 𑀵𑀼 | 𑀵𑀽 | 𑀵𑁂 | 𑀵𑁂 | 𑀵𑁃 | 𑀵𑁄 | 𑀵𑁄 |
| ள | 𑀴 | 𑀴𑀸 | 𑀴𑀺 | 𑀴𑀻 | 𑀴𑀼 | 𑀴𑀽 | 𑀴𑁂 | 𑀴𑁂 | 𑀴𑁃 | 𑀴𑁄 | 𑀴𑁄 |
| ற | 𑀶 | 𑀶𑀸 | 𑀶𑀺 | 𑀶𑀻 | 𑀶𑀼 | 𑀶𑀽 | 𑀶𑁂 | 𑀶𑁂 | 𑀶𑁃 | 𑀶𑁄 | 𑀶𑁄 |
| ன | 𑀷 | 𑀷𑀸 | 𑀷𑀺 | 𑀷𑀻 | 𑀷𑀼 | 𑀷𑀽 | 𑀷𑁂 | 𑀷𑁂 | 𑀷𑁃 | 𑀷𑁄 | 𑀷𑁄 |

உயிர் எழுத்து பன்னிரண்டுக்குப் பதிலாக எட்டு எழுத்துக்களே மேலே தரப்பட்டுள்ளன. எ, ஐ, ஒ, ஔ, ஆகிய எழுத்துக்கள் தரப்படவில்லை. இதுவரையில் அவ்வெழுத்துக்கள் கிடைக்கப் பெறாமையே அதற்குக் காரணமாகும். ''மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையில், எகர ஒகரத் தியற்கையும் அற்றே'' என்ற தொல்காப்பிய சூத்திரத்துக்கிணங்க இங்கே தரப்பெற்றுள்ள ஏகார ஓகார எழுத்துகளே புள்ளி பெற்று எகர ஒகரமாக (குறில்) விளங்கியிருக்கலாம்.

''அகர இகரம் ஐகாரம் ஆகும்''
''அகர உகரம் ஔகாரம் ஆகும்''

என்னும் சூத்திரங்களுக்கேற்ப தமிழி எழுத்துகள் வழங்கப்பெற்ற காலக்கட்டத்தில் 'அஇ' சேர்ந்து 'ஐ'யாகவும், 'அஉ' சேர்ந்து 'ஔ'வாகவும் எழுதப்பட்டிருக்கலாம்.

''அகரத்து இம்பர் யகரப் புள்ளியும்
ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத்தோன்றும்''

என்னும் சூத்திரத்துக்கொப்ப 'அய்' சேர்த்து 'ஐ'யாகவும், 'அவ்' சேர்த்து 'ஔ'வாகவும் எழுதப்பெற்றிருக்கலாம்.

மெய்யெழுத்துக்கள் பதினெட்டும் கிடைத்திருக்கின்றன. எல்லா உயிர் மெய் எழுத்துக்களும் கிடைக்கவில்லையென்றாலும் கிடைத்துள்ள எழுத்துக்களின் அடிப்படையில் மேலே தந்துள்ள அட்டவணை தயாரிக்கப்பட்டுள்ளது.

தமிழி எழுத்துக்களை நன்கு ஆராய்ந்து பார்த்தால் ஒவ்வொரு எழுத்தின் வேற்றுமையும் மிக எளிதில் விளங்கும். அகர ஆகார இகர ஈகார வேற்றுமைகளைக் காண்பிப்பதற்கு மேலும் கீழும் பக்கவாட்டிலுமாகக் கோடுகள் சேர்த்தே பகுத்துள்ளனர். இக்கோடுகளின் அடிப்படையைப் புரிந்து கொண்டால் இவ்வெழுத்தை மிக விரைவில் கற்றுக் கொள்ளலாம்.

- இது ககரம் உயிர் ஏறிய மெய் (க்+அ).
- இது காகாரம், ககரத்திலிருந்து வேறு பிரித்துக் காட்டுவதற்காக எழுத்தின் மேற்பகுதியில் வலப்பக்கத்தில் பக்கக் கோடு ஒன்று சேர்க்கப்பட்டுள்ளது.
- இது கிகரம். காகாரத்தினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதற்காகப் பக்கக் கோட்டிலிருந்து மேல் நோக்கி ய நேர்க்கோடு இடப்பட்டுள்ளது.

இது கீகாரம். கிகரத்திலிருந்து வேறு படுத்துவதற்காக மேலும் ஒரு மேல் நோக்கிய கோடு சேர்க்கப்பட்டிருக் கிறது.

- இது குகரம். இங்கு எழுத்தின் கீழ்ப் பகுதியில் வலப்பக்கத்தில் பக்கக் கோடு சேர்க்கப்பட்டுள்ளது.
- இது கூகாரம். குகரத்திலிருந்து வேறு படுத்திக் காட்டுவதற்காக மேலும் ஒரு கோடு கீழ்ப்பகுதியில் பக்கவாட்டில் சேர்க்கப்பட்டுள்ளது.
- இது கெகரம். இங்கு எழுத்தின் மேற் பகுதியில் இடப்பக்கத்தில் பக்கக் கோடு சேர்க்கப்பட்டிருக்கிறது. 'கே' காரமும் இதே வடிவில்தான் எழுதப் பட்டிருக்கிறது. கெகாரம் கேகாரம் வேற்றுமைக்காக கெகாரம் புள்ளி யிட்டு எழுதப் பெற்றிருக்கலாம்.
- இது கைகாரம். கெகர கேகாரத்தி லிருந்து வேறுபடுத்துவதற்காக எழுத் தின் மேற்பகுதி இடப்பக்கத்தில்

மேலும் ஒரு கோடு சேர்க்கப்பட்
டுள்ளது.

இது கொகரம். இங்கு எழுத்தின் மேற்
பகுதியில் வலப்பக்கமும் இடப்பக்
கமும் பக்கக்கோடு இடப்பட்டிருக்
கிறது. கோகாரமும் இதே வடிவில்
தான் உள்ளது. கொகரம் கோகாரம்
வேற்றுமைக்காக கொகரத்தைப் புள்
ளியிட்டு எழுதியிருக்கலாம்.

தமிழி எழுத்தின் உயிர் மெய் எழுத்துக்களை எழுது வதற்கு மிகவும் எளிதான முறையானது, அகர நெடிலுக்கு எழுத்துக்கு மேல் பகுதியில் வலப்பக்கப் பக்கக் கோடு ( )

இகாரத்துக்கு எழுத்து வளைவான எழுத்தாக இருந் தாலும் மேலே பக்கக்கோடு உடையதாக இருந்தாலும் ( , ) எழுத்துக்கு மேல் பகுதியில் மேல் நோக்கிய நேர்க்கோடு ( , ). பக்கக்கோடு இல் லாது நேரான கோடுகளால் ஆன எழுத்தாக இருந் தால் வலப்பக்கம் பக்கக்கோடு இழுத்துப் பின்னர் மேல் நோக்கிய நேர்க்கோடு ( , )( )

ஈகாரத்துக்கு மேற்கூறப்பட்ட முறையிலேயே மேலும் ஒரு மேல்நோக்கிய நேர்க்கோடு ( )

உகாரத்துக்கு நேர்க்கோட்டால் ஆன எழுத்தென் றால் ( , ) எழுத்தின் கீழ்ப் பகுதியில் வலப்பக்கம் பக்கக்கோடு, ( ). வளைவாகவோ அல்லது படுக்கைக் கோடுகளாலான எழுத்தாகவோ இருந்தால் எழுத்தில் கீழ்ப்பகுதியில் கீழ் நோக்கிய நேர்க்கோடு ( )( )

ஊகாரத்துக்கும் மேற்கூறப்பட்ட முறையிலேயே ஆகும். ஆனால் மேலும் ஒரு கோடு சேர்க்கப்படுதல் வேண்டும் ( ).

எகர ஏகாரத்துக்கு எழுத்தின் மேல் பகுதியில் இடப்பக்கம் ஒரு படுக்கைக்கோடு ( ) எகரத்துக்கு அக்கோட்டோடு அதே பக்கத்தில் ஒரு புள்ளியும் இட்டு எழுதப்பட்டிருக்கலாம் ( )

ஐகாரததுக்கு எழுத்தின் மேல்பகுதியில் இடப்பக்கத்தில் இரு படுக்கைக்கோடுகள் ( ) ஒகர ஓகாரத்துக்கு எழுத்தின் மேற்பகுதியில் இடப்பக்கம் ஒரு படுக்கைக்கோடும் வலப்பக்கம் ஒரு படுக்கைக்கோடும், ( ). ஒகரத்தை வேறு படுத்த எழுத்தின் இரு படுக்கைக் கோடுகளோடு இடப் பக்கத்தில் ஒரு புள்ளியும் இட்டு எழுதப் பெற்றிருக்கலாம் ( ).

தமிழி எழுத்தில் மிகுந்த அளவில் காண முடியாத வர்க்க எழுத்துக்கள் பிராமியில் காணப்படுகின்றன. இப்பிராமி எழுத்து மௌரியப் பேரரசன் அசோகனது கல்வெட்டுகளில் நல்ல வளர்ச்சியடைந்த நிலையில் உள்ளன. அசோக மன்னனது கல்வெட்டுக்களைப் படிக்க விரும்புவோர்க்கு வர்க்க எழுத்துக்களைப் பற்றியும் தெரிந்து கொள்வது நல்லது. ஆதலால் அவ் வர்க்க எழுத்துக்களும் இங்கு தரப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| க 1 | க 2 | க 3 | க 4 |
| ச 1 | ச 2 | ச 3 | ச 4 |
| ட 1 | ட 2 | ட 3 | ட 4 |
| த 1 | த 2 | த 3 | த 4 |
| ப 1 | ப 2 | ப 3 | ப 4 |

| | | | |
|---|---|---|---|
| ஜ | ஷ | ஸ | ஹ |

தமிழி எழுத்தில் கிடைத்துள்ள மிகப் பழமையான கல்வெட்டு மதுரைக்கு அருகில் உள்ள மாங்குளத்தில் கிடைத்துள்ளதாகும். இக்கல்வெட்டின் காலத்தை கி.மு. 2 அல்லது முதலாம் நூற்றாண்டு என்று கூறுகின்றனர். இக்கல்வெட்டில் பாண்டிய மன்னன் நெடுஞ்செழியன் குறிக்கப் பெறுகிறான். இக்கல்வெட்டில் காணப் பெறும் எழுத்துக்களில் ஒரே வகையானவைகளில் சில வற்றை உயிரில்லா மெய்யாகவும், சிலவற்றை உயிர் ஏறிய மெய்யாகவும் படிக்கப்படுதல் வேண்டும்.

இக்கல்வெட்டுக்கு அடுத்த நிலையில் புதுக் கோட்டை மாவட்டத்தில் உள்ள சித்தன்னவாசல் குகைக் கல்வெட்டைக் கூறலாம். 'எருமி நாட்டுக் குமிழூர் பிறந்த காவுதி ஈதென்கு சிறுபாவில் இளயர் செய்த அதிட்டனம்' என்று அக்கல்வெட்டில் எழுதப் பட்டிருக்கிறது. காலத்தில் வழக்கில் இருந்த 'காவிதி' போன்ற பட்டப் பெயர் இக்கல்வெட்டிலும் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. கி.பி. 1, 2-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது இக்கல்வெட்டு என்பர்.

சற்றேறக்குறைய இதே காலத்தைச் சார்ந்த புகளூர்க் கல்வெட்டு மிக முக்கியத்துவம் வாய்ந்த கல்வெட் டாகும். இக்கல்வெட்டில்தான் முதன் முதலில் மூன்று சேர மன்னர்களது பெயர்கள் காணப்படுகின்றன. கோ ஆதன் செல்லிரும்பொறை, அவன் மகன் பெருங் கடுங்கோன், அவன் மகன் இளங்கடுங்கோன் ஆகி யோர் குறிக்கப் பட்டுள்ளனர். இம்மூன்று மன்னர் களும் ஒருவருக்குப் பின் மற்றொருவர் என்ற தன்மை யில் ஆட்சி செய்தவர்களாவர்.

பதிற்றுப்பத்தில் 7-ஆம் பத்திலும், 8-ஆம் பத் திலும், 9-ஆம் பத்திலும் குறிக்கப் பெறும் செல்வக் கடுங்கோ வாழி ஆதன், பெருஞ்சேரல் இரும்பொறை, இளஞ்சேரல் இரும்பொறை ஆகிய மன்னர்களே இக் கல்வெட்டில் குறிக்கப் பெறும் மன்னர்களாவர்

என்று கருதப் படுகிறது. பெருஞ்சேரல் இரும்பொறை தான் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்றும், இளஞ் சேரல் இரும்பொறைதான் மருதம் பாடிய இளங் கடுங்கோ என்றும் ஒரு வழிவழிக் கருத்து உண்டு. அவ் வாறெனில் கல்வெட்டில் காணப் பெறும் பெருங்கடுங் கோதான் பாலை பாடிய பெருங்கடுங்கோவாகவும், இளங்கடுங்கோதான் மருதம் பாடிய இளங்கடுங்கோ வாகவும் இருத்தல் வேண்டும். இவ்விளங்கடுங்கோ இளவரசு பட்டம் ஏற்ற பொழுதுதான் இக்கல்வெட்டு வெட்டப் பெற்றுள்ளது. யாற்றூரைச் சேர்ந்த செங்கா யபன் என்ற சமண முனிவருக்கு இளங்கடுங்கோ படுக்கை அமைத்துத் தந்ததை இக்கல்வெட்டு குறிக் கிறது. சேரன் செங்குட்டுவனின் இளவல் இள்ங்கோ சமண சமயத்தைச் சார்ந்தவராக இருந்தார் என்று சிலப்பதிகாரத்தின் வாயிலாக அறிய முடிகிறது. இக் கல்வெட்டின் மூலமும் சேர மன்னர்கள் சமண சமயத் தையும் ஆதரித்து வந்தார்கள் என்பதை உணர முடி கிறது.

இதே காலத்தைச் சேர்ந்தது என்று கருதப்படும் மற்றொரு கல்வெட்டு அண்மையில் தென்னார்க்காடு மாவட்டம், திருக்கோயிலூர் வட்டம், ஜம்பையில் கண்டு பிடிக்கப்பட்டது. இக்கல்வெட்டு தகடூரைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி புரிந்த அதியமான் நெடுமான் அஞ்சியின் காலத்ததாகும். அதியமான் நெடுமான் அஞ்சி படுக்கை அமைத்துத் தந்ததைக் குறிக்கும் கல்வெட்டாகும். இக்கல்வெட்டின் சிறப்புத் தன்மை யாதெனில் அதியமான் நெடுமான் அஞ்சி 'சதியபுதோ' என்று குறிக்கப் படுவதாகும்.

இந்தியாவின் வட பகுதியில் மௌரியப் பேரரசன் அசோகன் தமது கல்வெட்டில், தம் பேரரசை ஒட்டிய அண்டை நாடுகளை ஆண்டவர்கள் என்று சோழர், பாண்டியர், சத்யபுத்ரர், கேரளபுத்ரர் ஆகியோரைக்

குறிப்பிட்டுள்ளான். இங்கு குறிக்கப் பெற்றுள்ள சத்ய புத்ரர் என்பார் அதியர்தான் என்று இதுவரை ஊகித்து எழுதப்பட்டது. ஆனால் இக்கல்வெட்டு தெளிவாக அதியமான் நெடுமான் அஞ்சியை 'சத்ய புதோ அதியமான் நெடுமான் அஞ்சி' என்று காட்டி யுள்ளது. ஆதலால் கி.மு. மூன்றாம் நூற்றாண்டளவி லேயே அதியமான் வமிசத்தினர் மற்ற சேர, சோழ, பாண்டிய மன்னர்களுக்கு இணையாக செல்வாக் கோடு வாழ்ந்திருக்கிறார்கள் என்பது தெரிய வரு கிறது. இந்த அதியமான் நெடுமான் அஞ்சியே கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன்தானோ என்ற ஐயத்தையும் ஏற்படுத்துகிறது. ஆம் எனில் மற்ற தமிழிக் கல்வெட்டுக்களின் காலம் மேலும் பழமை யானதாகக் கருத வேண்டிய நிலை ஏற்படும்.

இக்கல்வெட்டின் மற்றொரு சிறப்புத் தன்மை திருக் கோயிலூர்ப் பகுதியில் கிடைத்திருப்பதாகும். அதிய மான் நெடுமான் அஞ்சி திருக்கோயிலூரை ஆட்சி புரிந்த மலையமான் திருமுடிக்காரியோடு போரிட்டு வெற்றி பெற்றான் என்று தமிழ் இலக்கியங்கள் பேசும். அவன் திருமுடிக்காரியை வெற்றி பெற்றதும், அவனது திருக்கோயிலூர்ப் பகுதியைத் தம் ஆளுகைக் குக் கீழ் கொண்டு வந்திருக்கிறான் என்பதும் இக்கல் வெட்டின் மூலம் மேலும் உறுதியாகிறது.

இதற்கடுத்து பெரியார் மாவட்டம் அரச்சலூரில் கிடைத்துள்ள இசைக் கல்வெட்டைக் குறிப்பிடுதல் வேண்டும். 'எழுத்துப் புணருத்தான் மணிய வண்ணக் கன் தேவன் சாத்தன்' என்பது வாசகம். இக்கல் வெட்டின் அருகிலேயே 'த', 'தை', 'தா' என்று ஐந்து வரிகளில் எழுதப் பட்டிருக்கிறது. இவை 'இசைத் துறையிலும், கூத்துத் துறையிலும் பாடப் பெறும் எழுத்துக்களை நினைவுறுத்துவதாகக் கருதப் படுகிறது.

முதல் கல்வெட்டில் குறிக்கப் பெறும் மணிய வண்ணக்கன் இவ்விசை எழுத்துக்களைத் தொகுத்துக் கல்லில் பொறித்திருக்கலாம்.

சிலப்பதிகாரக் காலத்தில் கூத்தும், நாட்டியமும், இசையும் எழிலுற வளர்ந்தோங்கியிருக்கிறது என்பதை நாம் அறிவோம். ஏறக்குறைய அதே காலத்தைச் சார்ந்த இக்கல்வெட்டு அக்காலத்தில் இசை எய்தியிருந்த மேன்மையை எடுத்தியம்பும் மற்றொரு மணி விளக்காக அமைந்துள்ளது.

இக்கல்வெட்டின் மற்றொரு சிறப்புத் தன்மை யாதெனில் தமிழ் எழுத்து எவ்வாறு தமிழாகவும், வட்டெழுத்தாகவும் வளர்ச்சியுறத் தொடங்கியது என்பதற்குச் சான்றாகச் சில தமிழ், வட்டெழுத்துக்களும் இதில் காணப் படுவதாகும். இக்கல்வெட்டில் உள்ள 'எகரம்', 'மகரம்' ஆகியவை வட்டெழுத்தின் தொடக்கமாகவும், மற்றவை தமிழ் எழுத்தின் தொடக்கமாகவும் விளங்குகின்றன.

அரச்சலூர்க் கல்வெட்டுக்குச் சுமார் ஐம்பது ஆண்டுகட்குப் பின்பு பொறிக்கப் பட்டதாகக் கருதப் படும் பூலாங்குறிச்சிக் கல்வெட்டுகள் தமிழக வரலாற்றில் புத்தொளியைப் பரப்பிய பெருமை பெறும். தமிழக வரலாற்றில் இதுவரை இருண்ட காலம் என்று கருதப் பட்ட காலக் கட்டம் எந்த அளவுக்கு எல்லா சிறப்புத் தன்மைகளையும் பெற்றுத் திகழ்ந்திருக்கிறது என்பதைத் தெள்ளத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளன. (இது பற்றிய தனிக் கட்டுரை இணைப்பில் தரப்பட்டுள்ளது.)

இராமநாதபுரம் மாவட்டம், திருமயம் வட்டத்திலுள்ள பூலாங்குறிச்சி என்னும் சிற்றூரை ஒட்டிய மலையின் சரிவில் வெட்டப் பட்டிருக்கும் இக்கல்வெட்டுகள் தமிழகத்தில் இதுவரை கிடைத்திருக்கின்ற அனைத்துக் கல்வெட்டுக்களிலும் அளவில் பெரிய

வையாகும். 15 மீட்டருக்கும் மேற்பட்ட அளவுக்கு நீள முடையதாகவும், 2 மீட்டர் அளவுக்கு உயரமுடைய தாகவும் உள்ள இடப் பரப்பில் எழுதப் பட்டிருக்கின் றன. கல்வெட்டின் முதற் பகுதியும், கடைப் பகுதியும் நல்ல நிலையில் உள்ளது. இடைப் பகுதி சிதைந்து காணப்படுகிறது.

இக்கல்வெட்டுகள் தமிழி வட்டெழுத்தாக மாறும் காலக் கட்டத்தில் பொறிக்கப் பட்டிருக்கின்றன. 'கோச்சேந்தன் கூற்றற்கு யாண்டு தொண்ணூற்றிரண்டு' என்று ஒன்று தொடங்குகிறது. தேவ குலங்களையும், பிரமதாயங்களையும், தபோதப் பள்ளிகளையும் குறிக்கின்றன. முத்தூற்றுக் கூற்றம், ஒல்லையூர்க் கூற்றம், வெண்ணாடு, கூடலூர் நாடு, பாண்டி நாடு, கொங்கு நாடு ஆகிய நாட்டுப் பிரிவுகளையும் கூறு கின்றன. சேவுகர், விருமச் சாறிகள், உலவியப் பெருந் திணை, பிரமதாயக் கிழவர், குடும்பியர், நாடு காப் பார், புறம் காப்பார், முப்பூரு காப்பார் மற்றும் நெறி அறம் செய்வார் போன்ற அரசு அலுவலர்களை யும் புலப்படுத்துகின்றன. நிலங்களின் வகைகளை நீர் நிலம், புன்செய், தோட்டம் என்று தெரிவிக்கின்றன. அது மட்டுமல்லாமல் நல்லங் கிழான் இனங்கு மான், கண்ணன், வெண்ணாட்டான் நரியங்காரி போன்ற மனிதர்களின் பெயர்களையும் காண முடிகிறது. இப் பெயர்கள் சங்க இலக்கியங்களில் காணப் பெறும் பெயர்களை நினைவுபடுத்துகின்றன.

கோயில்களைத் தேவகுலம் என்று குறிப்பிடுவதும், பிராமணர்க்கு அளிக்கப்பட்ட நிலக்கொடையைப் மதாயம் என்று குறிப்பிடுவதும் ஈண்டு நோக்கத் தக்கது. தேவகுலம் என்ற சொல் இதற்கு முன்பு செங் கற்பட்டு மாவட்டம் வல்லம் கல்வெட்டில் காண முடிந்தது. வல்லம் கல்வெட்டின் காலம் கி.பி. 7-ஆம் நூற்றாண்டு. கி.பி. 4 - 5-ஆம் நூற்றாண்டில் வழக்கி

லிருந்த சொல் கி.பி. 7-ஆம் நூற்றாண்டு வரை தொடர்ந்து வழங்கி வந்திருக்கிறது என்பது இதனால் புலனாகிறது.

பிரமதாயம் என்ற சொல் சங்க இலக்கியமான பதிற்றுப்பத்தில் காண முடிகிறது. அதே போன்று முற்காலப் பல்லவர்களின் செப்புப் பட்டயங்களிலும், முற்காலப் பாண்டியர்களின் செப்புப் பட்டயங்களிலும் ஆளப்பட்டிருக்கிறது. அதாவது கி.பி. 2-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 8-ஆம் நூற்றாண்டு வரை வழங்கி வந்திருக்கிறது என்பதை உணரலாம்.

'குடும்பு ஆடல்' என்ற சொல்லையும் பூலாங்குறிச்சி கல்வெட்டு தந்துள்ளது. இச்சொல் முதலாம் ப்ராந்தகன் காலத்து உத்தரமேரூர் கல்வெட்டில் ஆளப்படும் 'குடும்பு' என்ற சொல்லை நினைவுபடுத்துகிறது. உத்தரமேரூர் 30 குடும்புகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு குடும்பிலிருந்து ஒரு உறுப்பினரைச் சபைக்குத் தேர்ந்தெடுத்ததாக உத்தரமேரூர் கல்வெட்டு கூறும். திருப்பரங்குன்றம் கல்வெட்டு 'ஈழக் குடும்பிகனைப்' பற்றி தெரிவிக்கிறது. ஆகவே இவ்வாறு உறுப்பினர்களைச் சபைக்குத் தேர்ந்தெடுக்கும் வழக்கம் கி.பி. 2-ஆம் நூற்றாண்டு முதலே தமிழகத்தில் நிலவியிருக்கிறது என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் அரசு அலுவலர்கள் சிலர் குறிக்கப்பட்டிருப்பதை முன்னரே கண்டோம். குறிப்பாக, வருவாய்த்துறை அதிகாரிகளைக் குறிப்பிடலாம். 'கூற்றம் தொழில் செய்வார்' என்று ஒரு அதிகாரி குறிக்கப்படுகிறார். இவர் இப்பொழுதுள்ள வட்ட ஆட்சியர் (தாசில்தார்) போன்றவராக இருக்கலாம். 'உலவிய பெருந்திணை' என்று மற்றொரு அதிகாரி காணப்படுகிறார். தற்போதுள்ள மாவட்ட வருவாய் அதிகாரி போன்றவராக இருக்கலாம். இவ்வதிகாரி

'உலவிய பெருந்திணை' என்று குறிக்கப்படுவதால் அடிக்கடி ஒவ்வொரு பகுதிக்கும் நேரடியாகச் சென்று வரி வசூலிக்கும் அதிகாரியாக இருந்திருக்கலாம்.

மற்றொரு முக்கிய அதிகாரி 'நெறி அறம் செய்வார்' என்று குறிக்கப்படுகிறார். இவ்வதிகாரி மௌரியப் பேரரசன் அசோகன் காலத்திலிருந்த 'தர்ம மஹாமாத்ரர்'களைப் போன்றவராக இருந்திருக்கலாம். தர்ம மஹாமாத்ரர்களின் பணி, 1. சமயவாதிகளை எல்லாவித இன்னல்களினின்றும் காப்பாற்றுதல், 2. நேர்மையற்ற வகையில் வழங்கப்படும் சிறைத் தண்டனை மற்றும் பிற வகை தண்டனைகளைத் தடுத்து நிறுத்துதல் போன்றவைகளாகும். அதே போன்ற பணியைத்தான் 'இந்நெறி அறம் செய்வாரும்' செய்திருப்பார்கள் போன்று தெரிகிறது. பிற்காலக் கல்வெட்டுகளில் 'ஊடு போக்கு' என்று ஒரு அதிகாரி குறிக்கப்படுகிறார். அவரும் மேற்கூறப் பெற்ற பணியைத்தான் புரிந்திருப்பார் என்று ஊகிக்க முடிகிறது.

மேற்கூறப்பெற்றவைகளை ஆழ்ந்து நோக்குகையில் கி.பி. 4 - 5-ஆம் நூற்றாண்டு அளவில் தமிழகத்தில் சிறந்த அரசியல் நிர்வாக அமைப்பு இருந்திருக்கிறது என்பதைத் தெளிவாக உணரலாம். ஆனால் அந்த கால கட்டத்தை இதுவரை வரலாற்றாசிரியர்கள் 'இருண்ட காலம்' என்ற பெயரிட்டு அழைத்து வந்தனர். அது இருண்ட காலம் அல்ல. நல்ல அரசியல் நிர்வாகம் நிலவிய காலம் என்பதை இக்கல்வெட்டு நமக்குப் புலப்படுத்தி விட்டது.

இதுவரையில் கிடைத்திராத சில புதிய உயிர்மெய்யெழுத்துக்களையும் இதில் காண முடிகிறது. இக்கல்வெட்டில் குறிக்கப் பெறும் ஆண்டு, மன்னனின் ஆட்சி ஆண்டாக நிச்சயமாக எடுத்துக் கொள்ள முடியாது. காரணம் நூற்றுத்தொண்ணூற்று இரண்டு

ஆண்டுகள் எந்த ஒரு மன்னனும் ஆண்டிருக்க முடி யாது என்பதால். அவ்வாறெனில் இது கலி ஆண் டையோ, சக ஆண்டையோ, கொல்லம் ஆண் டையோ அல்லது வேறு எந்த ஆண்டையோ குறிப்பதாக இருத்தல் வேண்டும். கலி ஆண்டு என்று பார்த்தால் மிகவும் பண்டைய காலத்தைச் சேர்ந்த தாக இக்கல்வெட்டு இருத்தல் வேண்டும். அதாவது கி.மு. 2909 என்ற காலத்தைச் சார்ந்ததாக ஆகும். எழுத்தமைதி அந்த காலக் கட்டத்திற்கு இடம் தர வில்லை. கொல்லம் ஆண்டு என்று எடுத்துக் கொண் டால் கல்வெட்டு கி.பி. 11-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக ஆகி விடும். அதுவும் ஏற்புடைத்து அன்று. ஆகவே சக ஆண்டு என்று கொண்டால் கி.பி. 270 அதாவது கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த தாகக் கொள்ள வேண்டும். இதையும் சிலர் சந்தேகிக் கின்றனர். அதற்கு அவர்கள் கூறும் காரணம் பின் வருமாறு. இக்கல்வெட்டில் ஆண்டோடு நாள் முப்பத் தாறு என்று கூறப்பட்டுள்ளது. அம்முப்பத்தாறாவது நாள் தைப்பிறை என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறெனில் மார்கழி முதல் நாளில் அவ்வாண்டு தொடங்கியிருத்தல் வேண்டும். ஆனால் சக ஆண்டின் தொடக்கம் சித்திரை முதல் நாள்தான். ஆகவே இது சக ஆண்டாக இருத்தல் முடியாது. வேறு ஒரு தமிழ் ஆண்டாக இருக்கலாம் என்கின்றனர். இவ்வாண்டு களப்பிரர்கள் பயன்படுத்திய ஆண்டாக இருக்கலாம். எது எவ்வாறு இருப்பினும் இக்கல்வெட்டு கி.பி. 4 - 5-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பது எழுத்தமை தியைக் கொண்டு உறுதியாகக் கூறலாம்.

தமிழிக் கல்வெட்டுகளில் சிலவற்றில் அக்கல் வெட்டுக்களோடு சில குறியீடுகளையும் காண முடி கின்றன. இதே போன்று இலங்கையில் கிடைத்துள்ள சில பிராமிக் கல்வெட்டுக்களோடும் குறிப்பிடத்தக்க

அளவில் சில குறியீடுகள் காணப்படுகின்றன. இக்குறியீடுகள் இடப்பட்டதின் நோக்கம் என்ன? அவைகள் கூறும் விளக்கம் யாது? என்பது முழுமையாகப் புரிந்து கொள்ள முடியாத நிலையிலேயே உள்ளன.

இலங்கையிலுள்ள பிராமிக் கல்வெட்டுக்களைத் தொகுத்து வெளியிட்டுள்ளவர்கள் ஒரு சில குறியீட்டின் பொருளை உணர முயற்சித்துள்ளார்கள். அவர்கள் கொண்டுள்ள பொருளையும் தந்திருக்கிறார்கள். இறுதியாக அக்குறியீடுகளுக்கும், மொஹஞ்சோ தரோ, ஹரப்பாவில் கிடைத்திருக்கின்ற களிமண் தகடுகளில் காணப் பெறும் உருவ எழுத்துக்களுக்கும் தொடர்பு இருக்கலாம் என்ற கருத்தையும் வெளியிட்டிருக்கிறார்கள்.

தமிழ் நாட்டில் கிடைத்துள்ள குறியீடுகளோடு கூடிய கல்வெட்டுக்களை எல்லாம் தொகுத்து ஆய்வு செய்கையில் அக்குறியீடுகள் வணிகர்களின் தொழிலையும், தச்சர், கொல்லர் போன்ற கைவினைஞர்களின் தொழிலையும் குறிப்பவைகளாகக் காணப்படுகின்றன. இவற்றுக்கு ஆதாரமாக சங்க கால இலக்கியங்களை மேற்கோள் காட்டலாம். சங்க காலத்தில் வணிகர்கள் தங்கள் பண்டங்களை வேறுபடுத்திக் காட்டும் வகையில் தனித் தனிக் குறியீடுகள் பொறித்த கொடிகளை நாட்டிக் கொண்டு வியாபாரம் நடத்தினர் என்ற செய்தி அகநானூறு, மதுரைக் காஞ்சி, சிலப்பதிகாரம் போன்ற நூல்களில் காணப்படுகின்றன.

'பெரும்பொளி வெண்நார் அழுந்து படப் பூட்டி
நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்'

(அகம் 83, வரி 6 - 7)

'ஓவுக் கண்டன்ன இருபெரும் நியமத்து
சாறு அயர்ந்து எடுத்த உருவப்பல்கொடி'

(மதுரை, வரி 365 - 366)

''கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
வேலைவானுலகத்து விரிதிரைப் பரப்பிற்
கூல மறுகிற் கொடியெடுத்து நுவலும்
மாலைச் சேரி மருங்கு சென்றெய்தி''
(சிலம்பு, கடலாடு காதை 130 - 133)

உப்பு வணிகர் எனில் அவருக்கென தனி குறியீட்டை யும், அறுவை வணிகர் என்றால் அவருக்கு என்ற குறியீட்டையும் பெற்றிருக்கின்றனர். தற்காலத்திய 'வியாபாரக் குறியீடு' (டிரேடு மார்க்) போன்றதாக அவை இருந்திருக்கும். அதைத்தான் தமிழிக் கல்வெட் டுக்களில் சிலவற்றோடு காண முடிகிறது. தச்சுத் தொழில் புரிந்தோரும், கூரை வேய்தல் தொழில் புரிந்தோரும் கூட தனித் தனிக் குறியீட்டைப் பெற் றிருந்தார்கள் என ஊகிக்க வேண்டியிருக்கிறது.

தமிழிக் கல்வெட்டுகளிலிருந்து தெரிந்து கொள் ளக் கூடிய செய்தி குறைவாகத்தான் இருக்கிறது என் றாலும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக உள்ளன. சங்க இலக்கியச் செய்திகளுக்குத் துணை புரிவதாகச் சில செய்திகள் அமைந்துள்ளன. சங்க காலச் சமுதாயச் சூழ்நிலைமைகளுக்கேற்பவே கல் வெட்டுச் செய்திகளும் காணப் படுகின்றன.

தமிழிக் கல்வெட்டுகள் பெரும்பாலும் சமண முனிவர்களுக்குப் பாழி (படுக்கை) அமைத்துத் தந்த செய்தியைத்தான் தெரிவிக்கின்றன. அவ்வாறு பாழி அமைத்துத் தந்தவர்களின் பெயரையும், தொழிலை யும், ஊரையும் குறிப்பிடுகையில் சில முக்கிய விவரங் களை நாம் தெரிந்து கொள்ள முடிகிறது. மதிரை அறுவை வாணிகன், கருவூர் பொன் வாணிகன் போன்ற செய்திகளைக் காண்கையில் மதிரையில் அறுவை வாணிகர்களும், கருவூரில் பொன் வாணிகர் களும் அந்தக் காலக் கட்டத்திலேயே இருந்திருக்கிறார் கள் என்பதை உணர முடிகிறது. மேலும் யாற்றூர்

செங்காயபன் போன்ற சில முனிவர்களின் பெயரை யும் அறிய இயலுகிறது. அந்துவன், ணாகன் இளங் கிரன், கிரனோறி போன்ற சங்க காலப் பெயர்களை யும், குடும்பிகன், சடிகன் போன்ற பண்டைய சொற் களையும் புரிந்து கொள்ள ஏதுவாக அமைந்துள்ளது.

சங்க கால மன்னர்களான நெடுஞ்செழியன், சேர லிரும்பொறை, பெருங்கடுங்கோ, இளங்கடுங்கோ, அதியமான் ஆகியோர்களின் பெயர்களையும் அவர் கள் அளித்த அறக் கொடைகளையும் தெரிவிக்கும் இக்கல்வெட்டுகள் தமிழி எழுத்தில் எழுதப் பெற் றுள்ளன. இதே எழுத்தில்தான் நமது பண்டைய இலக் கியங்களும் எழுதப் பெற்றிருத்தல் வேண்டும் என்று நாம் உறுதியாக நம்பலாம்.

## வட்டெழுத்து

கி.பி. 3-ஆம் நூற்றாண்டு அளவில் தமிழி எழுத்தி லிருந்து (பண்டைத் தமிழ் எழுத்து) 'வட்டெழுத்து', 'தமிழ் எழுத்து' என்று இரு வகை எழுத்துக்கள் வளர்ச் சியுறத் தொடங்கிற்று. அரச்சலூர், பிள்ளையார்பட்டி, திருநாதற் குன்று ஆகிய இடங்களில் காணப் பெறும் கல்வெட்டுகளில் இத்தகைய வளர்ச்சியைத் தெளி வாக உணரலாம்.

நூற்றாண்டு தோறும் சிறு சிறு மாற்றம் பெற்று முழு அளவில் வளர்ச்சி பெற்ற வட்டெழுத்தாகவும், தமிழ் எழுத்தாகவும் எவ்வாறு மாறியது என்பதைக் கீழே தந்துள்ள அட்டவணை நன்கு விளக்கும்.

வட்டெழுத்தாகவும் தமிழ் எழுத்தாகவும் மாற்றம் பெற்றதை விளக்கும் படம்

| வட்டெழுத்தாக வளர்ந்த விதம் | | | | | | தமிழ் எழுத்து | தமிழாக வளர்ந்த விதம் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கி.பி 17.நூ.டு | கி.பி 15.நூ.டு | கி.பி 10-12 நூ.டு | கி.பி 9. நூ.டு | கி.பி 7.நூ.டு | கி.பி 3.நூ.டு | கி.மு 2.அ.நூ.டு கி.பி 3. நூ.டு | கி.பி 3.நூ.டு | கி.பி 7.நூ.டு | கி.பி 9.நூ.டு | கி.பி 11.நூ.டு | கி.பி 16.நூ.டு | கி.பி 20.நூ.டு |
| | | | | | | | | | | | | க |
| | | | | | | | | | | | | ங |
| | | | | | | | | | | | | ச |
| | | | | | | | | | | | | ஞ |
| | | | | | | | | | | | | ட |
| | | | | | | | | | | | | ண |
| | | | | | | | | | | | | த |
| | | | | | | | | | | | | ந |
| | | | | | | | | | | | | ப |
| | | | | | | | | | | | | ம |
| | | | | | | | | | | | | ய |
| | | | | | | | | | | | | ர |
| | | | | | | | | | | | | ல |
| | | | | | | | | | | | | வ |
| | | | | | | | | | | | | ழ |
| | | | | | | | | | | | | ள |
| | | | | | | | | | | | | ற |
| | | | | | | | | | | | | ன |

ஆராய்ச்சியாளர் வட்டெழுத்தின் வளர்ச்சியை மூன்று கட்டமாகப் பிரிப்பர். கி.பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் 7 - 8-ஆம் நூற்றாண்டு வரை வளர்ந்த வளர்ச்சி முதல் கட்ட வளர்ச்சியாகவும், கி.பி. 8-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 13-ஆம் நூற்றாண்டு வரை வளர்ந்த வளர்ச்சி இரண்டாம் கட்ட வளர்ச்சியாகவும், கி.பி. 13-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு வரை வளர்ந்த வளர்ச்சி மூன்றாம் கட்ட வளர்ச்சியாகவும் கொள்ளப்படுகிறது.

முதற்கட்ட வளர்ச்சியில் வட்டெழுத்துக்களும் தமிழி எழுத்துக்களைப் போன்றே நேர் நேராக எழுதப் பெற்றுள்ளன. அண்மையில் இராமநாதபுரம் மாவட்டம் பூலாங்குறிச்சியில் கண்டுபிடிக்கப் பட்டுள்ள கல்வெட்டு இதற்குச் சிறந்த உதாரணமாகும். மேலும் இத்தகைய எழுத்துகள் உள்ள கல்வெட்டுகள் வடார்க்காடு, தருமபுரி மாவட்டங்களில் கண்டுபிடிக்கப் பட்டுள்ள நடுகற்களில் காணப் படுகின்றன. இவ்வெழுத்துகளில் உள்ள சில கல்வெட்டுகளில் எகர ஒகரத்துக்குப் புள்ளி உள்ளன. பூலாங்குறிச்சி கல்வெட்டில் புள்ளியிட்டு எழுதியிருப்பதைத் தெளிவாகக் காணலாம்.

இரண்டாம் கட்ட வளர்ச்சியில் இவ்வெழுத்து இடப் பக்கம் சிறிது சாய்ந்து வட்டம் வட்டமாக எழுதப் பெற்றிருக்கிறது. இத்தகைய எழுத்து வடார்க் காடு, கோவை, தருமபுரி, திருச்சி, தஞ்சை (சங்கு ஒன்றில் காணப்படுவது), மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களில் காணக் கிடைக்கின்றன. இந்த எழுத்தில் அதிக அளவில் கல்வெட்டுகள் கன்னியாகுமரி மாவட்டத் தில்தான் எழுதப் பட்டுள்ளன. கேரளப் பகுதியிலும் இவ்வெழுத்துதான் இந்தக் காலக் கட்டத்தில் பழக்கத் தில் இருந்திருக்கிறது.

கேரளாவில் இவ்வெழுத்தை 'நானா மோனா' என்றும், 'தெக்கண் மலையாள' என்றும், 'கோலெழுத்து' என்றும் பெயரிட்டழைத்திருக்கின் றனர்.

இவ்வாறு வட்டம் வட்டமாக எழுத வேண்டி நேர்ந்தது ஓலையில் எழுதிய காரணத்தினால் இருக்க லாம் என்று கருதப் படுகிறது. ஓலையில் இவ் வெழுத்தை எழுதுகையில் எழுதும் கோலால் (எழுத் தாணி) எழுதியிருப்பர். ஆதலால்தான் இவ்வெழுத்து 'கோலெழுத்து' என்ற பெயரைப் பெறுவதாயிற்று.

மூன்றாம் கட்ட வளர்ச்சியில் பல எழுத்துக்கள் ஒன்று போலவே எழுதலாயின. எழுத்தின் அழகு குன்றியது. விரைவாக எழுத விரும்பியதன் காரணத் தினால் இந்த மாறுபாடு ஏற்பட்டிருக்கலாம். இந்த வகை எழுத்திலுள்ள கல்வெட்டுகளையோ, ஓலைச் சுவடிகளையோ படிப்பது மிகவும் கடினம்.

இவ்வெழுத்திலுள்ள கல்வெட்டுகள், ஓலைச் சுவ டிகள் கேரளம், கன்னியாகுமரி மாவட்டம் ஆகிய பகுதிகளில் கிடைத்துள்ளன.

இங்கே இடப் பக்கத்தில் தமிழி எழுத்தும், வலப் பக்கத்தில் முதற்கட்ட வளர்ச்சி வட்டெழுத்தும் தரப் படுகிறது.

உயிர் எழுத்துக்கள்

அ
ஆ
இ
ஈ
உ
ஊ
எ
ஏ
ஐ
ஒ
ஓ

மெய்யெழுத்துக்கள்

க
ங
ச
ஞ
ட
ண
த
ந
ப
ம
ய
ர
ல
வ
ழ
ள
ற
ன

பெற்றுள்ள மாற்றம் (உயிரெழுத்தில்)

தமிழி 'அ'வில் காணப் பெறும் நேர்க் கோடு அப் படியே வட்டெழுத்து 'அ'விலும் உள்ளது. தமிழி 'அ'வில் உள்ள இரு குறுக்குக் கோடுகள் வட்டெழுத்தில் ஒருங்கி ணைந்த இரு வளைவு களாக மாறியுள்ளன.

தமிழி எழுத்தில் எழுத் தின் மேற் பகுதியில் நெடி லுக்குக் காணப்படும் பக்கக் கோடு வட்டெ ழுத்திலும் எழுத்தின் மேல் பகுதியில் காணப் படுகிறது.

தமிழி எழுத்தில் உள்ள மூன்று புள்ளிகளையும் இணைத்து ஒரு வளைவு உண்டாக்கப் பட்டிருக் கிறது.

தமிழி எழுத்திலிருந்த அதே எழுத்து எந்த வித வளர்ச்சியும் இல்லாது வட்டெழுத்திலும் பயன் படுத்தப் பட்டிருக்கிறது.

தமிழி 'உ'வில் நேர்க் கோடும், படுக்கைக் கோடும் சிறிதே வளை யத் தொடங்கியிருக் கிறது.

மேலே கூறப்பட்ட மாற் றம்தான் இவ்வெழுத்துக் கும்.

தமிழி எழுத்து 'ஏ'வில் உள்ள முக்கோணம் வட் டமாக வட்டெழுத்தில் மாற்றம் பெற்றுள்ளது.

தமிழி எழுத்து 'ஓ'வில் உள்ள மேல் படுக்கைக் கோடும், நேர்க் கோடும் வட்டெழுத்தில் வளைக் கப் பெற்று, கீழ் படுக் கைக் கோடு கீழ் நோக் கிய நேர்க் கோடாக மாற்றமடைந்திருக்கிறது.

பெற்றுள்ள மாற்றம் (மெய்யெழுத்தில்)

தமிழியிலே உள்ள அதே வடிவம்தான் வட்டெழுத்திலும் காணப்படுகிறது. மாற்றம் ஏதும் ஏற்படவில்லை.

தமிழி எழுத்தின் மேல் படுக்கைக் கோடும், நேர்க் கோடும் குறைக்கப்பட்டு, கீழ்ப் படுக்கைக் கோடு வளைவாக்கப்பட்டு விட்டது வட்டெழுத்தில்.

தமிழி எழுத்தின் வடிவம் அப்படியே மாற்றம் ஏதும் இல்லாது வட்டெழுத்திலும் காணப்படுகிறது.

தமிழி எழுத்து 'ஞ' வட்டெழுத்தில் வளைவாக்கப் பட்டிருக்கிறது.

தமிழி எழுத்தின் வடிவம் எந்த வித மாறுபாடும் இல்லாது வட்டெழுத்திலும் பயன்படுத்தப் பட்டுள்ளது.

தமிழி எழுத்தின் படுக்கைக் கோடுகள் வளைவுகளாகவும், நேர்க் கோடு குறுக்குக் கோடாகவும் வட்டெழுத்தில் மாற்றம் பெற்றுள்ளது.

தமிழி எழுத்தில் உள்ள குறுக்குக் கோடு வட்டெழுத்தில் வளைவாக மாற்றம் அடைந்திருக்கிறது.

தமிழி எழுத்தின் நேர்க் கோடும், படுக்கைக் கோடும் சிறிது வளைவு பெற்றுள்ளன வட்டெழுத்தில்.

தமிழி எழுத்தின் இரு பக்க நேர்க் கோடுகளும் சம அளவுக்குக் கொண்டு வரப் பட்டிருக்கின்றன வட்டெழுத்தில்.

தமிழி எழுத்தில் உள்ள இடைக் கோடு குறைக்கப்பட்டு, வட்டெழுத்தில் வலப் பக்க நேர்க் கோட்டில் மட்டும் சிறிய அளவில் காணப்படுகிறது.

தமிழி எழுத்து, வட்டெழுத்து ஆகியவற்றில் எவ்வித மாறுபாடும் இல்லை.

இவ்வெழுத்தும் அவ்வாறே.

தமிழி எழுத்தின் இடப் பக்கப் படுக்கைக் கோடு வளைவாக்கப் பட்டு, வலப் பக்க நேர்க் கோடு குறைக்கப் பட்டுள்ளது வட்டெழுத்தில்.

தமிழி எழுத்தின் நேர்க் கோட்டோடு ஒட்டியுள்ள வளையத்தில் நேர்க் கோடு இல்லாது செய்து, வளையத்தில் வாய் திறக்கப் பட்டுள் ளது வட்டெழுத்தில்.

தமிழி எழுத்து 'ழ'வில், மேற் பகுதியில், இடப் பக்கத்தில் சிறிய வாய் திறக்கப் பட்டிருக்கிறது வடடெழுத்தில்.

தமிழி எழுத்தின் இடப் பக்கக் கோடு மேலும் வளைந்தும், நடுக் கோடு முழுதும் குறைந்தும் வட் டெழுத்தில் காண முடி கிறது.

தமிழி எழுத்தின் மேல் பகுதி வளைவு சிறிதாக் கப் பட்டு, கீழ்ப் பகுதி குறுக்குக் கோடு வளை வாக்கப் பட்டுள்ளது வட்டெழுத்தில்.

தமிழி எழுத்தின் உயரம் குறைக்கப் பட்டு, வளைவு நீட்டிக்கப்பட்டு காணப் படுகிறது வட்டெழுத்தில்.

பயிற்சி

| | | | |
|---|---|---|---|
| [illegible] | அன்பு | [illegible] | கல்வி |
| [illegible] | ஆர்வம் | [illegible] | சங்கு |
| [illegible] | இனிப்பு | [illegible] | சட்டம் |
| [illegible] | ஈதல் | [illegible] | பஞ்சம் |
| [illegible] | உறவு | [illegible] | டமாரம் |
| [illegible] | ஊக்கம் | [illegible] | வண்ணம் |
| [illegible] | எளிமை | [illegible] | தமிழ் |
| [illegible] | ஏழ்மை | [illegible] | நன்றி |
| [illegible] | ஐயம் | [illegible] | படிப்பு |
| [illegible] | ஒற்றுமை | [illegible] | மகிழ்வு |
| [illegible] | ஓதுதல் | [illegible] | வியப்பு |
| [illegible] | வீரம் | [illegible] | உழவு |
| [illegible] | பல்லவர் | [illegible] | வெள்ளம் |
| [illegible] | பன்மை | [illegible] | கொற்றம் |
| [illegible] | வடிவு | [illegible] | மன்னன் |

ஒரு சில ஆண்டுகள் முன்பு வரை தமிழி எழுத்துக்கும், வட்டெழுத்துக்கும் எந்த விதத் தொடர்பும் கிடையாது என்ற ஒரு கருத்தும் நிலவி வந்தது. மேலே விளக்கப்பட்டுள்ள முதற்கட்ட வளர்ச்சி வட்டெழுத்தைக் காணுவார்க்கு அவ்வித ஐயம் ஏற்படாது என்பது உண்மை.

கல்வெட்டு பிளாக்



இரண்டாம் கட்ட வளர்ச்சி வட்டெழுத்து மேலும் அதிக அளவில் வளைவு பெற்று இடப் பக்கம் சாய்த்தே எழுதப் பட்டுள்ளது. ஓலையில் எழுத வேண்டி நேர்ந்ததாலும், ஒரு எழுத்தோடு மற்றொரு எழுத்தைச் சேர்த்து விரைவாக எழுத வேண்டி இருந்ததாலும் இம்மாற்றம் பெற்றது போலும்.

**இரண்டாம் கட்ட வளர்ச்சி
வட்டெழுத்தின் அட்டவணை**

அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ

க
ங
ச
ஞ
ட
ண
த
ந
ப
ம
ய
ர
ல
வ
ழ
ள
ற
ன

ஒவ்வொரு எழுத்தின் தொடக்கத்திலும் சிறு கோடு காணப் பெறும். இது ஒரு எழுத்தோடு மற்றொரு எழுத்தைச் சேர்த்து விரைவாக எழுதியதன் காரண மாக ஏற்பட்ட வளர்ச்சி என்று கூறலாம்.

கற்க என்னும் சொல்லை +S+ 7SA என்று சேர்த்து எழுதி யிருக்கலாம். அவ்வாறு எழுதும் போது ஒரு எழுத் தோடு மற்றொரு எழுத்தைச் சேர்க்கப் பயன்படுத்தும் சிறு கோடு தொடர்ந்து தனித் தனியாக எழுதும் போதும் அமைந்து விட்டது.

முதற்கட்ட வளர்ச்சியில் நெடிலைக் குறிக்கவும், எகர, ஒகரத்தைக் குறிக்கவும் சேர்க்கப் பட்டிருந்த பக்கக் கோடுகள் இரண்டாம் கட்ட வளர்ச்சியில் வளைவுக் கோடுகளாக மாற்றம் பெற்றுள்ளன.

'ஐ'யைக் குறிக்க பயன்படுத்தப்பட்ட இரு லேசான வளைவுகள் இரண்டாம் கட்ட வளர்ச்சியில் சற்று. விரிந்த வளைவுகளாக மாறியிருக்கின்றன. 'ஐ'காரத் துக்கென தனி எழுத்து இந்த கட்ட வளர்ச்சி எழுத்தில் காணப்படுகிறது.

ன, த, ற போன்ற எழுத்துக்களுக்குள்ள வேற்றுமை யும், ப, ம, வ போன்ற எழுத்துக்களுக்குள்ள வேற்று மையும் மிகவும் குறைந்து காணப்படுகின்றன.

வேள்விக்குடி, தளவாய்புரம், சின்னமனூர் ஆகிய ஊர்களில் கிடைக்கப் பெற்ற செப்பேடுகளில் தமிழ்ப் பகுதி இரண்டாம் கட்ட வளர்ச்சி வட்டெழுத்தில்தான் எழுதப்பட்டிருக்கிறது.

அறிவைப்பெருக்கு
ஆசை அடக்கு
இரப்பது தீது
ஈவது நன்று
உண்மை பேசு
ஊழியம் செய்
எண் எழுத்து
ஐயம் போக்கு
ஒன்றே குலம்
ஓவியம் வரை
ஏட்டுக் கல்வி

மேலே தரப்பட்டுள்ள உதாரணத் தொடர்களில் உள்ள எழுத்து வடிவங்களைப் பார்க்கலாம். உண்மை பேசு என்பதிலுள்ள 'பே' எழுத்தையும், ஒன்றே குலம் என்பதிலுள்ள 'றே' எழுத்தையும் ஊன்றிக் கவனித் தால் 'ஏ'காரத்துக்கான வளைவை உணர முடியும். இவ்வளைவுகள் ஓலைகளில் எழுத வேண்டியிருந்த தால் ஏற்பட்டிருக்கலாம். அதே போன்று உண்மை என்பதிலுள்ள 'மை'யையும், வரை என்பதிலுள்ள 'ரை'யையும் கவனித்தால் 'ஐ'காரத்தைக் குறித்த இரு கோடுகள் எவ்வாறு வளைவுக் கோடுகளாக மாறி யுள்ளன என்பது தெரிய வரும்.

வட்டெழுத்தின் மூன்றாம் கட்ட வளர்ச்சியைப் பார்க்கையில் பெரும் குழப்பமே ஏற்படும். ஏனெனில் சில எழுத்துக்களைக் கவனித்தால் அவை அனைத்தும் ஒன்று போலவே காணப்படும்.

உதாரணமாகக் க, ச ஆகிய எழுத்துக்களையும், ண, த, ற ஆகிய எழுத்துக்களையும், ந,ப,ம,வ ஆகிய எழுத்துக்களையும் காட்டலாம்.

இரண்டாம் கட்ட வளர்ச்சியில் இருந்த சிறு சிறு வேற்றுமைகூட மூன்றாம் கட்ட வளர்ச்சியில் இல்லாது ஆகியிருக்கிறது. அக்காலக் கட்டத்து மக்கள் வட் டெழுத்தைப் புரிந்து கொள்ளுவதில் நல்ல பழக்கம் பெற்றுவிட்ட காரணத்தினால் சில எழுத்துக்களை ஒரே மாதிரி எழுதலாயினர். ஒரே மாதிரியாக அவை கள் இருந்தாலும் அவர்களால் எளிதில் வேறுபடுத்தி புரிந்து கொள்ள முடிந்திருக்கிறது.

(ண) (த)

(ற) இவை இரண்டாம் கட்ட வளர்ச் சியில் உள்ள எழுத்துக்கள்.

(ண) (த)

ր   ם
ɔ   (ற) இவை மூன்றாம் கட்ட வளர்ச்சி யில் காணப்படுபவை. இந்த மூன்று எழுத்துக்களிலும் வேறுபாடு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. அந் தந்த இடத்துக்கேற்பத்தான் அதை அதை என்ன என்ன எழுத்து என்று புரிந்து கொள்ள முடியும். இதன் காரண மாகத்தான் பிற்காலத்தில் இவ்வெழுத்து வழக்கில் இல் லாமல் ஆகிவிட்டது.

வட்டெழுத்தில் குறிப்பிடத்தக்க அளவில் கல்வெட் டுக்கள் கிடைத்திருக்கின்றன. சில ஆண்டுகளுக்கு முன்பு வரை வட்டெழுத்துக் கல்வெட்டுகள் தமிழகத் தின் தென் கோடிப் பகுதியில்தான் அதிகமாக கிடைத்து வந்தது. அதன் காரணமாக இவ்வெழுத்து அந்தப் பகுதியில் மட்டும்தான் ஒரு கால கட்டத்தில் வழக்கத்திலிருந்தது என்று கருதப்பட்டு வந்தது. அண் மைக் காலங்களில் தமிழகத்தின் இதர பகுதிகளிலும் இவ்வெழுத்திலுள்ள கல்வெட்டுக்கள் கிடைத்திடவே தற்போது வட்டெழுத்து தமிழகம் முழுவதுமே ஒரு காலப் பகுதியில் உபயோகப்படுத்தப் பட்டிருக்கிறது என்பது புலனாயிற்று.

கி.பி. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து உருவான இவ் வெழுத்தில், கி.பி. 6 - 7-ஆம் நூற்றாண்டளவில், அதிகமான அளவில், தமிழகத்தின் வடபகுதியில் கல் வெட்டுகளை எழுதியிருக்கின்றனர். குறிப்பாக நடுகல், வீரக்கல் எனப்படும் கற்களில் இவ்வெழுத்தையே காண முடிகிறது. ஒரு சிற்றரசன் மற்றொரு சிற்றரசன் மீது போர் தொடுக்கும் முகத்தான் ஆநிரை கவர்தல் என்பது ஒரு வழக்கு. அவ்வாறு ஆநிரை கவர்ந்த போது அதை எதிர்த்துப் போரிட்டு உயிர் நீத்த வீர மறவர்க்கும், ஆநிரை கவர்கையில் உயிர் நீத்த வீர மறவர்க்கும், எடுக்கப்பட்ட நடுகற்களே பெருமளவில் கிடைத்துள்ளன. இக்கல்வெட்டுக்களில் அப்பொழுது

ஆட்சி செய்த மன்னனின் பெயர், அவனது ஆட்சி ஆண்டு, எந்த குறுநில மன்னன் எந்த குறுநில மன்னன் மீது போர் தொடுக்கையில், எந்த குறுநில மன்னனுக் காக அவனது சேவகன் எங்கு நிகழ்ந்த போரில் பட் டான் என்ற செய்திகள் காணப்படும். இவை சங்க இலக்கியங்களில் நடுகற்கள் எந்த வகையில் பேசப்படு கின்றனவோ அவற்றிற்கு முற்றிலும் உடன்பாடான தாக உள்ளன.

இந்நடுகற்கள் பெரும்பாலும் ஊரின் புறத்தேயே காணப்படுகின்றன. ஒன்றிரண்டு நடுகற்கள் ஊரின் நடுவில் காணப்படுகின்றன. அவை பிற்காலத்தில் அவற்றின் முக்கியத்துவம் அறியாமல் கொணரப் பட்டு அமைக்கப்பட்டதாக இருக்கலாம். போர் வீரன் எங்கு நடந்த போரில் இறந்தானோ அங்கேயே அமைக்கப் பெற்ற நடுகற்களும் உண்டு. ஒரு ஊரைச் சேர்ந்த போர் வீரன் வெளியூரில் நடைபெற்ற போரில் இறந்து விட்டால் அந்த ஊர் மக்கள் தம் ஊரிலேயே அவனுக்கு நடுகல் நட்டு வழிபட்டதும் உண்டு. நான்கைந்து போர் வீரர்களுக்கு ஒரே இடத் தில் நடுகற்கள் அமைத்து வழிபட்டதையும் காண முடிகிறது. ஆனால் அனைத்திலும் பல்லவ மன்னன் இரண்டாம் நரசிம்மன் ஆட்சிக் காலம் (கி.பி. 8-ஆம் நூற்றாண்டு) வரை வட்டெழுத்தில்தான் செய்திகள் எழுதப்பட்டுள்ளன. ஆதலால் தமிழகத்து மக்கள் கி.பி. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 8-ஆம் நூற் றாண்டு வரை வட்டெழுத்தையே முழு அளவில் பயன் படுத்தி வந்திருக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது. ஆனால் அக்கால கட்டத்தில் ஆட்சி புரிந்த பல்லவ மன்னர்களின் செப்புப், பட்டயங்களிலும், அவர் களால் எழுப்பப் பெற்ற ஆலயங்களிலும், வளர்ச்சி அடைந்த பிராமி எழுத்திலும், கிரந்த எழுத்திலும்,

மிகக் குறைந்த அளவில் தமிழ் எழுத்திலும் செய்தி களைத் தந்திருக்கின்றனர். அவற்றை நோக்குகையில் வட்டெழுத்துதான் பொது மக்கள் எழுத்தாகச் சிறந்து விளங்கிற்று என்பதும், கிரந்தமும், தமிழ் எழுத்தும் அரசவை எழுத்துக்களாகத் திகழ்ந்திருக்கின்றன என்றும் ஊகிக்க முடிகிறது. மேலும் தற்காலத்தியத் தமிழ் எழுத்துக்கும், பல்லவ கிரந்தத்துக்கும் பொது வாகச் சில எழுத்துக்கள் விளங்கியிருப்பதையும் உணர முடிகிறது.

நடுகல் கல்வெட்டுக்களில் மிகவும் பழமையானது தருமபுரி மாவட்டம் இருளப்பட்டியில் (பாப்பம் பாடி) கிடைத்திருப்பதாகும். இதனுடைய காலம் கி.பி. 5-ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியாகவோ அல்லது 6-ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியா கவோ இருக்கலாம் என்று கணிக்கப்பட்டுள்ளது. பாண மன்னர் ஆட்சி செய்து கொண்டிருக்கையில் அவரு டைய சேவகன் உழமுனுகன் என்பானின் மகன் விண் ணபேரேனாதி விசயமங்கலத்தை ஆண்டு கொண் டிருக்கையில், விண்ணபேரேனாதியும், அவனது சேவ கன் கொற்றந்தை கோடனும் போரில் இறந்ததை இக் கல்வெட்டு குறிக்கிறது. ஒரு குறுநிலத் தலைவனையும், அவனது போர் வீரனையும் ஒரே கல்லில் செதுக்கி, அவர்களது வீரத்தைப் பாராட்டிப் போற்றியிருக்கின் றனர். தலைவனுக்கும், அவனது சேவகனுக்கும் ஒரே அளவு மரியாதையை அளித்துப் பெருமை தந்திருக் கிறது தமிழினம். தலைவனாக இருந்தாலும், அவன் சேவகனாக இருந்தாலும், அவர்கள் போரில் வீர மரணம் எய்தியவர்கள் என்பதால், எந்தவித வேற்று மையும் பாராட்டாது ஒருங்கே வைத்து வழிபட்டிருக் கிறது தமிழரின் உயர்ந்த உள்ளம்.

இந்நடுகல்லில் தலைவனது உருவத்தை, அவன்

அணிந்திருக்கின்ற உடையிலும், பிடித்திருக்கின்ற வாள், கேடயம் ஆகியவற்றிலும் காணப்படும் சிறு வேறுபாட்டில் எளிதாக அறிந்து கொள்ள முடிகிறது.

சாதாரணக் கல்வெட்டுக்களில் வட்டெழுத்தில் உள்ள பழமையான கல்வெட்டு தென்னார்க்காடு மாவட்டம் திருநாதற்குன்றத்து மலையில் பொறிக்கப் பட்டிருப்பதாகும். அக்கல்வெட்டு

ஐம்பத்தேழுன
சனந் நோற்ற
சந்திர நந்தி ஆ
சிரிகரு நிசீதிகை

என்று காணப்படுகிறது. இதில் உயிர் எழுத்தான 'ஐ' எழுதப்பட்டுள்ளது. இதன் காலம் கி.பி. 5-ஆம் நூற் றாண்டாகும். இதற்கடுத்து சாதாரண கல்வெட்டை வட்டெழுத்தில் கி.பி.7-ஆம் நூற்றாண்டில்தான் காண முடிகிறது. அதுவும் தமிழகத்தின் தென் பகுதியில்தான் காணப்படுகிறது. ஆனால் நடுகற்களில் வட்டெழுத் தைத் தொடர்ந்து எழுதி வந்திருக்கிறார்கள்.

இருளப்பட்டி நடுகல்லை அடுத்து காலத்தால் முந்திய வட்டெழுத்து நடுகல் கல்வெட்டு வடார்க்காடு மாவட்டம் பெருங்களத்தூரில் கிடைத்துள்ளன பல்லவ மன்னன் சிம்மவர்மன் காலத்தியதாகும். அதா வது கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதி யைச் சார்ந்தது. தொடர்ந்து பல்லவ மன்னர்கள் சிம்ம விஷ்ணு, மகேந்திரவர்மன், முதலாம் நரசிம்மவர்மன், இரண்டாம் மகேந்திரவர்மன், முதலாம் பரமேசுவர வர்மன், இரண்டாம் நரசிம்மவர்மன், இரண்டாம் பர மேசுவரவர்மன், இரண்டாம் நந்திவர்மன் ஆகியோர் காலத்து நடுகற்களும் வட்டெழுத்தில் காணப்படு கின்றன. இரண்டாம் நந்திவர்மன் காலம் முதல் நடு கற்கள் தமிழ் எழுத்திலும் எழுதும் வழக்கம் ஆரம்ப

மாகி விட்டதைக் காண முடிகிறது. உதாரணமாக வடார்க்காடு மாவட்டம் குலிடிக்கியில் காணப் பெறும் இவனது 52-ஆம் ஆட்சி ஆண்டில் பொறிக் கப்பட்ட நடுகல்லைக் கூறலாம். பாண்டிய மன்னன் ஜடிலவர்மன் பராந்தக நெடுஞ்சடையன் காலத்து நடுகல் ஒன்றிலும் வட்டெழுத்தைத்தான் காண முடி கிறது. இக்கல்வெட்டு திருநெல்வேலி மாவட்டம் கழுகுமலையில் இருக்கிறது.

கி.பி. 7-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இரு சாதா ரண வட்டெழுத்துக் கல்வெட்டுக்கள் தமிழகத்தின் தென் பகுதியில் கிடைத்திருக்கின்றன. ஒன்று பாண் டிய மன்னன் செழியன் சேந்தன் காலத்தில் பொறிக்கப் பட்டதாகும். இரண்டாம் கல்வெட்டு செழியன் சேந் தனின் மகன் மாறவர்மன் அரிகேசரி காலத்தில் செதுக் கப் பட்டதாகும். முதல் கல்வெட்டு திருநெல்வேலி மாவட்டம் மலையடிக்குறிச்சியிலும், இரண்டாம் கல் வெட்டு மதுரையிலும் உள்ளன. மலையடிக்குறிச்சிக் கல்வெட்டு அக்கல்வெட்டு காணப்படும் இடமான குடைவரை குடைவிக்கப்பெற்ற செய்தியையும், மது ரைக் கல்வெட்டு சேந்தனின் மகனான அரிகேசரி வைகையில் மதகு ஒன்று கட்டுவித்து அதற்கு 'அரிகே சரியான்' எனப் பெயரிட்டழைத்ததையும் தெரிவிக் கிறது. இம்மாறவர்மன் ஐம்பது ஆண்டுகள் ஆட்சி செய்திருக்கின்றான் என்ற அரிய செய்தியையும் நமக் குப் புலப்படுத்தியுள்ளது. இக்கல்வெட்டு முதல் பகுதி கிரந்த எழுத்திலும், இரண்டாம் பகுதி வட்டெழு திலும் எழுதப் பட்டிருக்கிறது. முதல் பகுதியில் மாற வர்மன் பல அக்ர ஈரங்கள் அமைத்ததையும், ண்யகர்ப்பம், துலாபாரம், கோஸகஸ்ரம் போன்ற பல தானங்கள் அளித்ததையும், மங்கலாபுரம் என்ற நகரத்தை உருவாக்கியதையும் காண முடிகிறது.

இரண்டாம் பகுதியில் அம்மன்னன் ஐம்பது ஆண்டு கள் ஆட்சி புரிந்ததையும், வைகையில் அரிகேசரி என்ற மதகு அமைத்து நீர் வளத்தைப் பெருக்கியதை யும் அறிய முடிகிறது.

இவற்றையடுத்து ஜடிலவர்மன் பராந்தக நெடுஞ் சடையன் காலத்தைய வட்டெழுத்துக் கல்வெட்டுக் களைத்தான் குறிப்பிட வேண்டும். இவனது மூன்றாம் ஆட்சி ஆண்டில் பொறிக்கப் பட்டதாகக் கருதப்படும் கல்வெட்டு மதுரைக்கு அருகில் உள்ள ஆனைமலை யிலும், ஆறாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு திருப் பரங்குன்றத்திலும் காணப்படுகின்றன. ஆனைமலைக் கல்வெட்டின் மற்றொரு பிரதி கிரந்த எழுத்தில் அருகி லேயே எழுதப்பட்டிருக்கிறது. திருப்பரங்குன்றத்துக் கல்வெட்டின் முதற்பகுதி கிரந்த எழுத்திலும், இரண் டாம் பகுதி வட்டெழுத்திலும் உள்ளன. இவ்விரண்டு கல்வெட்டுக்களும் வரலாற்றாசிரியர்களுக்கு மிக மிக முக்கியமான கல்வெட்டுக்கள் ஆகும். ஆனைமலைக் கல்வெட்டின் கிரந்த படிவத்தில் கலி ஆண்டு 3871 என்று குறிக்கப்பட்டிருக்கிறது. இதன்படி பார்த்தால் இக்கல்வெட்டின் காலம் கி.பி. 770 ஆகிறது. ஆதலால் கி.பி. 770-ல் பாண்டிய மன்னன் மாறஞ்சடையனின் உத்தரமந்திரி மாறங்காரி என்னும் மூவேந்தமங்கலப் பேரரையன் என்பான் ஆனைமலையிலுள்ள நரசிம் மர் ஆலயத்தைக் குடைவித்தான் என்பதை இக்கல் வெட்டு புலப்படுத்துகிறது.

திருப்பரங்குன்றத்துக் கல்வெட்டில் கலி ஆண்டு 3874 காணப்படுகிறது. அதன்படி கி.பி. 773-இல் இக்கல்வெட்டு வெட்டப்பட்டிருக்கிறது. கணபதி என்னும் சாம்ந்த பீமன் சிவபெருமானுக்குக் கோயில் குடைவித்ததைத் தெரிவிக்கிறது இக்கல்வெட்டு. அக் குடைவரைக் கோயிலில் ஒரு தூணில் காணப் பெறும்

மற்றொரு கல்வெட்டு பாண்டி அமிர்தமங்கலப் பேர ரையானாயின சாத்தன் கணபதி என்பான் திருக் கோயில் எடுப்பித்ததைக் குறிக்கிறது. இக்கல்வெட்டு மாறஞ்சடையனின் ஆறாம் ஆட்சி ஆண்டில் பொறிக் கப் பட்டுள்ளது. இக்கல்வெட்டில் குறிக்கப் பெறும் அமிர்தமங்கலப் பேரரையனாயின சாத்தன் கணபதி யும் மேலே உள்ள கல்வெட்டில் குறிக்கப் பெறும் கணபதி என்னும் சாமந்த பீமனும் ஒருவராக இருக்க லாம் என்று கருதப்படுகிறது. அவ்வாறெனில் கி.பி. 773 மாறஞ்சடையனின் 6-ஆம் ஆட்சி ஆண்டாக ஆகிறது. ஆதலால் மாறஞ்சடையன் கி.பி. 767 - 68-இல் ஆட்சிக்கட்டில் ஏறியிருக்க வேண்டும் என்று வரலாற்றாசிரியர்கள் கருதுகிறார்கள்.

ஜடிலவர்மன் பராந்தக நெடுஞ்சடையன் காலத் தில் வெளியிடப்பட்டு நமக்குக் கிடைத்துள்ள மூன்று செப்பேடுகளிலும் முதற் பகுதி கிரந்த எழுத்திலும், இரண்டாம் பகுதி வட்டெழுத்திலும் எழுதப்பட்டிருக் கின்றன. சென்னை அருங்காட்சியகச் செப்பேடு, வேள்விக்குடி செப்பேடு, சின்னமனூர் சிறிய செப் பேடு ஆகியவை அச்செப்பேடுகள் ஆகும். பல்லவர் கள் தங்கள் செப்பேடுகளில் ஒன்றில்கூட வட் டெழுத்தை உபயோகப்படுத்தாமலிருப்பது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. ஆனால் பாண்டியர்கள் தங்கள் கல்வெட்டுக்களிலும், செப்புப் பட்டயங்களிலும் கி.பி. 13 - 14-ஆம் நூற்றாண்டு வரை தொடர்ந்து வட்டெழுத்தைப் பயன்படுத்தி வந்திருக்கின்றனர். தமிழகத்தில் கன்னியாகுமரி மாவட்டப் பகுதியிலும், கேரள மாநிலத்திலும் இவ்வெழுத்து தொடர்ந்து கி.பி. 17-ஆம் நூற்றாண்டு வரை ஆளப்பட்டு இருக் கிறது. கி.பி. 16 - 17-ஆம் நூற்றாண்டைய ஓலைச் சுவடிகளில் இவ்வெழுத்தே இப்பகுதியில் காணப்படு கிறது.

கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த திருமலைக் கல்வெட்டும், திருக்குற்றாலநாத சுவாமி கோயில் கல் வெட்டும் இவ்வெழுத்தை 'வட்டம்' என்றே அழைக் கின்றன. குற்றாலநாத சுவாமி கோயில் கல்வெட்டு எழுதப்பெற்ற காலத்திலேயே ஒரு பகுதி மக்களால் இவ்வெழுத்தைப் புரிந்து கொள்ள முடியாத நிலை ஏற்பட்டு விட்டது. 'புரியாத வட்டம்' என்று அக்கல் வெட்டு கூறுவதே சான்று.

# தமிழ் எழுத்து

இன்றைக்கு 1700 ஆண்டுகளுக்கு முன்பாகத் தமிழ் நாட்டின் பழைய எழுத்தான தமிழ் எழுத்திலிருந்து 'தமிழ்', 'வட்டெழுத்து' என்று இரு வகையான எழுத்துக்கள் வளர ஆரம்பித்தன என்று கண்டோம். அத் தமிழ் எழுத்தினைப் பற்றி இங்கு காண்போம்.

நேர்க் கோடுகளாகவும், பக்கக் கோடுகளாகவும் இருந்த தமிழி எழுத்துக்கள் சிறு சிறு மாற்றம் பெற்று தமிழ் எழுத்துக்களாக உருவாகியுள்ளன. குறிப்பாக ஒவ்வொரு எழுத்தின் தலைப் பகுதியிலும் சேர்க்கப் பட்ட இலேசான கோடு நாளடைவில் இடப் புறமாகக் கீழே நேராக வளைய ஆரம்பித்து விட்டது.

உதாரணமாக 'க'கரத்தை எடுத்துக் கொள்ளலாம். இது தமிழி எழுத்து. இவ்வெழுத்தில் ஆரம்பத்தில் தலைப் பகுதியில் ஒரு சிறு கோடு சேர்க்கப் படலாயிற்று. அதாவது இம்மாதிரியாக . தலையில் சேர்க்கப்பட்ட சிறு கோடு பின்னாளில் இம்மாதிரியாக இடப் புறம் வளைய ஆரம்பித்தது.

எழுத்தின் படுக்கைக் கோடும் இரு புறமும் வளைய ஆரம்பித்தது இம்மாதிரியாக. படுக்கைக் கோடு மேலும் மேலும் இரண்டு புறங்களிலும் வளைய வளைய நேர்க் கோட்டின் நீளம் குறைய ஆரம்பித்தது. பின்னர் இரு வளைவுகளும் சேர்ந்தன. அதன் பிறகுதான் இன்றைக்குக் காணப் பெறும் 'க' எழுத்து உருவாகியது. ஒவ்வொரு எழுத்தின் வளர்ச்சியையும் இவ்வாறு கூற முடியும்.

தமிழ் எழுத்தின் வடிவத்தைத் தெளிவாக முதன் முதலில் பல்லவ மன்னன் சிம்மவர்மனுடைய பள்ளன் கோயில் செப்பேட்டில்தான் காண முடிகிறது. ஆனால் நல்ல அழகான தமிழ் எழுத்துக்களை முத

லாம் இராஜராஜன் காலத்தியத் தமிழ்க் கல்வெட்டு களில்தான் பார்க்க முடிகிறது. தஞ்சாவூர் இராஜ ராஜேச்சுரத்தில் வெட்டப்பட்டுள்ள தமிழ்க் கல்வெட் டுகளைக் காண்போர் மெய் மறந்து நின்று விடுவர். தேர்ந்த சிற்பிகளால் மிகவும் எழிலாகப் பொறிக்கப் பட்டிருக்கிறது. அங்கு காணப் பெறும் எழுத்துக் களைக் கொண்டு தயாரிக்கப்பட்ட அட்டவணை யைக் கீழே காணலாம்.

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ |
| ங | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ |
| ச | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ |
| ஞ | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ |
| ட | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ |
| ண | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ |
| த | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ |
| ந | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ |
| ப | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ |
| ம | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ |
| ய | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ |
| ர | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ |
| ல | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ |
| வ | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ |
| ழ | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ |
| ள | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ |
| ற | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ |
| ன | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ |

| | |
|---|---|
| அனபெ சிவம | அன்பே சிவம் |
| ஆறறுபபடை | ஆற்றுப்படை |
| இனியவைபெசு | இனியவை பேசு |
| ஈதல இனிமை | ஈதல் இனிமை |
| உடல பெணு | உடல் பேணு |
| ஊககம உயரவு | ஊக்கம் உயர்வு |
| எழுதிப பழகு | எழுதிப் பழகு |
| ஏடடுபபடிபபு | ஏட்டுப்படிப்பு |
| ஐநதில கறக | ஐந்தில் கற்க |
| ஒருமையுணரவு | ஒருமையுணர்வு |
| ஓர ஊர | ஓர் ஊர் |

தமிழ் எழுத்தை முதன் முதலில் பல்லவர் காலச் செப்பேடு ஒன்றில்தான் காண முடிகிறது. பல்லவ மன்னன் சிம்மவர்மன் காலத்தில் வெளியிடப்பட்ட பள்ளன் கோயில் செப்பேட்டில் இரண்டாம் பகுதி தமிழ் எழுத்தில் எழுதப்பட்டுள்ளது. அப்பகுதி அரசனால் அளிக்கப் பெற்ற அறக்கொடையைப் பற்றி குறிப்பிடுகிறது. கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் எழுதப்பட்டிருக்கிறது.

இதனையடுத்து சிம்மவர்மனின் பெயரனும், சிம்ம விஷ்ணுவின் மகனுமான முதலாம் மகேந்திரவர்மன் காலத்தில் பொறிக்கப்பட்டிருக்கிற ஒரு கல்வெட்டைக் குறிப்பிடலாம். இக்கல்வெட்டு செங்கல்பட்டு மாவட்டம், வல்லம் என்னும் ஊரில் குடைவிக்கப் பெற்றிருக்கின்ற குடைவரைக் கோயிலில் காணப் படுகிறது.

சத்துரும்மல்லன் குணபரன்
மயேந்திரப் போத்தரெசரு அடியான்
வயந்தப்பிரியரெசரு மகன் கந்தசேனன்
செய்வித்த தேவகுலம்

என்று அக்கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது.

பல்லவ மன்னன் இரண்டாம் நந்திவர்மன் காலம் முதல் தமிழ் எழுத்தில் எழுதப் பெற்றிருக்கிற பல கல்வெட்டுக்களைக் காண முடிகிறது. இரண்டாம் நந்திவர்மனின் மகனான தந்திவர்மன் காலத்தில் ஒரு சில தமிழ்ப் பாடல் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. திருச்சி மாவட்டம் திருவெள்ளறையில்

'ஸ்ரீ கண்டார் காணா வுலகத்திற் காதல் செய்து
நில்லாதேய்
பண்டேய் பரமன் படைத்த நாள் பார்த்து நின்று
நையயாதேய்

தண்டார் மூப்பு வந்துன்னைத் தளரச் செய்து
நில்லாமுன்
னுண்டேல் லுண்டு மிக்கது உலகம் மறிய வைம்
மினேய்'

என்று வெட்டப்பட்டிருக்கும் அக்கல்வெட்டு மனித வாழ்க்கையின் தத்துவத்தையும், தம் வாழ்நாளில் அவன் ஆற்ற வேண்டிய கடமையைப் பற்றியும் தெளிவுறுத்துகிறது.

கி.பி. 9-ஆம் நூற்றாண்டு அளவில் தமிழகத்தில் எல்லா பகுதியிலும் தமிழ் எழுத்தே வழக்கத்துக்கு வந்து விட்டது என்று கூறலாம். பல்லவர்கள்தான் முதலில் இவ்வெழுத்தை உபயோகித்தனர் என்றாலும் சோழர்கள்தான் இவ்வெழுத்தைத் தமிழகத்தின் எல்லா பகுதிகளிலும் உபயோகத்துக்குக் கொண்டு வந்தார்கள். அவர்களின் ஆட்சி எங்கெங்கு பரவியதோ அங்கெல்லாம் இவ்வெழுத்தில் கல்வெட்டுக்களைப் பொறித்தார்கள். பாண்டி நாட்டைக் கைப் பற்றியதுடன் அப்பகுதியில் பழக்கத்தில் இருந்த வட்டெழுத்தைச் சிறுக சிறுக அகற்றி விட்டு தமிழ் எழுத்தைப் புகுத்தி விட்டனர். அதன் காரணமாகத்தான் பாண்டியர்களின் குறுநில மன்னர்களான ஆய்குல மன்னர்களின் செப்புப் பட்டயங்களில் கிரந்த எழுத்தையும், தமிழ் எழுத்தையும்தான் காண முடிகிறது. வட்டெழுத்தைக் காண முடியவில்லை.

முன்னரே குறிப்பிட்டிருப்பது போன்று பல்லவ மன்னன் இரண்டாம் நந்திவர்மன் காலம் முதல் நடுகல் கல்வெட்டுக்களிலும் தமிழ் எழுத்து பயன்படத் தொடங்கி விட்டது. கம்பவர்மன் காலத்தில் நடுகற்களிலும் நல்ல தமிழ் கொஞ்சும். தமிழ் எழுத்தில் உள்ள கல்வெட்டுக்களைப் பெரும் அளவில் காண முடியும். செங்கற்பட்டு மாவட்டம் திருத்தணியில்

அபராஜிதன் காலத்தில் ஒரு பாடல் கல்வெட்டு நல்ல தமிழ் எழுத்தில் எழுதப்பட்டிருக்கிறது. சிம்மவர்மன் காலம் முதலே பல்லவர்களின் செப்புப் பட்டயங் களில் இரண்டாம் பகுதியாகத் தமிழ் எழுத்துதான் ஆளப்பட்டு வந்திருக்கிறது.

பல்லவ மன்னர்கள் தொடங்கி வைத்ததைச் சோழ மன்னர்கள் தீவிரப் படுத்தினார்கள் என்று கூறலாம். விஜயாலயன், முதலாம் பராந்தகன் காலக் கல்வெட் டுக்களில் தமிழ் எழுத்து பெரிது பெரிதாகக் காணப் பெறும். இவ்விரு மன்னர்களின் காலத்தியக் கல்வெட் டுக்களில் பெரும்பாலானவை மிகக் குறைந்த வரி களை உடையதாகவே உள்ளன. அதிக வரிகளைக் கொண்ட கல்வெட்டுக்கள் முதலாம் பராந்தகன் காலத்தில் மிகக் குறைவாக வெட்டப்பட்டு இருக் கின்றன. பராந்தகன் காலத்து உத்திரமேரூர் கல் வெட்டு பெரிய கல்வெட்டு ஆகும். இக்கல்வெட்டில் தான் அக்காலத்தில் நிலவிய ஊராட்சித் தேர்தல் பற்றிய செய்தி நிரம்ப கிடைக்கிறது.

இம்மன்னர்கள் காலத்துக்குப் பிறகு முதலாம் இராஜராஜன் காலத்தில் தமிழ் எழுத்து ஏற்றம் பெற்று விளங்கிற்று என்று கருதலாம். முதலாம் இராஜராஜன் தம் காலத்தில் நிகழ்ந்த அரசியல், பொருளாதார, சமுதாய நிகழ்ச்சிகள் அனைத்திலும் தாம் நேரடியாக ஈடுபட்டு நடத்தியிருக்கிறான் என்பதை அவன் காலத் தியக் கல்வெட்டுக்கள் கூறும் செய்திகளால் உணர லாம். கோயில்கள் கட்டப்படுகின்றன என்றால் தாம் நேரடியாக அங்கு சென்று தம் உயரிய ஆலோசனை களை நல்கியிருக்கிறான். அக்கோயில்களிலே திரு விழாக்கள் நடைபெறுகின்றன என்றால் அவற்றில் தாம் மிகுந்த ஈடுபாட்டோடு பங்கு பெற்றிருக்கிறான். அக்கோயில்களில் யார் யாரை எந்தெந்த அதிகாரி

களாக நியமித்தல் வேண்டும், அவர்களுக்கு எந்த வகையில் ஊதியம் அளித்தல் வேண்டும், நாட்டிய மகளிர் எத்தனை பேர் நியமிக்கப்படுதல் வேண்டும், அத்தனை பேரும் தங்கியிருப்பதற்கு என்னென்ன வசதிகள் செய்து தருதல் வேண்டும் போன்ற எல்லா பிரச்சினைகளுக்கும் தாமே தீர்வு கண்டு செயல்பட்டிருக்கிறான்.

அதே போன்றுதான் அக்கோயிலுக்கு அறக்கொடையளித்தோரின் பெயர்களையும், அளிக்கப்பட்ட கொடைகளின் தன்மையையும் கோயிலின் எந்தப் பகுதியில் எவ்வாறு எழுதப்படுதல் வேண்டும் என்பதிலேயும் தம் நேரிடைக் கவனத்தைச் செலுத்தியிருக்கிறான். எழுதப்படும் எழுத்து எந்த அளவுக்குச் சிறப்பாக அமைதல் வேண்டும் என்பதிலும் முழுக் கவனம் செலுத்தியுள்ளான். தமிழ் எழுத்திலே இருக்கின்ற எல்லாக் கல்வெட்டுக்களினின்றும் இராஜராஜன் காலத்தியக் கல்வெட்டுகளைத் தனிமைப் படுத்தி இனம் கண்டு விடலாம். குறிப்பாகத் தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்களைப் பார்ப்போமானால் தற்காலத்தில் நன்றாக அச்சு செய்யப் பெற்ற எழுத்துக்களைப் போன்று எல்லா எழுத்துக்களும் ஒரே சீராக, அழகாக, ஒரு எழுத்துக்கும், மற்றொரு எழுத்துக்கும் குறிப்பிட்ட அளவு இடைவெளி விட்டு எழுதப் பெற்றிருக்கும். பழமையான தமிழ் எழுத்துக்களைப் பற்றி சிறிதளவும் அறிந்திராத ஒருவர்கூட இக்கல்வெட்டுக்களைப் பார்த்தால் எளிதில் படித்து விடுவர். அந்த அளவுக்குத் தெளிவாக வெட்டப்பட்டிருக்கும்.

இராஜராஜன் காலத்தில் தமிழ் எழுத்து தமிழகத்தின் எல்லா பகுதியிலும் வழங்கப்பட்டிருக்கிறது. வட்

டெழுத்து நல்ல செல்வாக்கில் இருந்த கன்னியா குமரிப் பகுதிகளில்கூட தமிழ் எழுத்தைத் தம் காலத்தியக் கல்வெட்டுக்களில் பயன்படுத்தச் செய்திருக்கிறான். தமிழகம் மட்டுமல்லாது இலங்கை, ஆந்திரா, கருநாடகப் பகுதிகளிலும் தமிழ் எழுத்தில் கல்வெட்டுக்களைப் பொறிக்க ஆணை பிறப்பித்திருக்கிறான். தமிழ் எழுத்து தன்னேரில்லா சிறந்த இடத்தைப் பெற்றுத் திகழ்ந்திருக்கிறது.

முதலாம் இராஜராஜனின் மைந்தனான முதலாம் இராஜேந்திரன் காலத்தில் இன்னும் ஒரு படி அதிகமாகச் செல்வாக்கு பெறத் தொடங்கியது தமிழ் எழுத்து. இராஜேந்திரன் தாம் வெற்றி கொண்ட தென்கிழக்காசிய நாடுகளான கடாரம், தக்கோலம் ஆகிய பகுதிகளிலும் தமிழ் எழுத்தில் கல்வெட்டுக்களை எழுதுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறான். இவனது காலத்திலும் இலங்கையில் பல தமிழ்க் கல்வெட்டுக்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

இவனையடுத்து பெரும் புகழோடு ஆட்சி புரிந்த முதலாம் குலோத்துங்கன் ஆட்சிக் காலத்திலும் தமிழ் எழுத்துக்குப் புதிய எழுச்சியும், ஏற்றமும் தரப்பட்டிருக்கிறது. தமிழ் நாட்டின் அண்டை மாநிலமான ஆந்திரப் பகுதியில் திருதிராரட்டிரம் என்னும் இடத்தில் தமிழ்க் கல்வெட்டு ஒன்று இவன் காலத்தில் வெட்டப்பட்டிருக்கிறது. இம்மன்னனுக்குப் பிறகு ஆட்சி புரிந்த சோழ மன்னர்கள் அனைவருமே தமிழ் எழுத்தைத்தான் பயன்படுத்தியிருக்கின்றனர்.

சோழர்களை வென்று தங்களது செல்வாக்கைத் திரும்பவும் நிலை நிறுத்திய பிற்காலப் பாண்டியர்களும் வட்டெழுத்தைப் பெரிதும் புறக்கணித்து விட்டு தமிழ் எழுத்தை உபயோகித்திருக்கின்றனர். கி.பி. 8, 9, 10-ஆம் நூற்றாண்டுகளில் பாண்டி நாட்டில்

மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த வட்டெழுத்து கி.பி. 12, 13-ஆம் நூற்றாண்டுகளில் சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கியது. தமிழ் எழுத்தின் ஆதிக்கம் சிறிது சிறிதாக வளரலாயிற்று.

கி.பி. 15, 16-ஆம் நூற்றாண்டுகளில் தமிழ் எழுத்தோடு கிரந்த எழுத்தும் கலந்து கல்வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் எழுதப்படலாயின. தமிழ் மொழியின் தனித் தன்மை விஜயநகரப் பேரரசின் ஊடுருவலால் சிறிது மங்கத் தொடங்கியது என்பதை மறுக்க இயலாது. காரணம் அவர்கள் தெலுங்கு மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள். அத்தோடு சமஸ்கிருதத்தில் அதிக ஈடுபாடு செலுத்தியவர்கள். ஆதலால் சமஸ்கிருதச் சொற்களை இடையிடையே கல்வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் புகுத்தியிருக்கின்றனர். முதலாம் இராஜராஜன், முதலாம் இராஜேந்திரன் காலத்தில் இருந்த தமிழ் நடையைப் பிற்கால விஜயநகர்க் கல்வெட்டுக்களில் காண முடியாது. சமஸ்கிருதமும், தமிழும் கலந்த மணிப் பிரவாள நடையைத்தான் காணக்கூடும். அவ்வாறு கலந்து எழுதுவதை அக்காலத்தில் பெருமையாகக் கருதியிருக்கலாம். விஜயநகர மன்னர்களின் செப்புப் பட்டயங்களில் 'ஸ்ரீ மன் மஹா மண்டலேஸ்வர' என்ற சமஸ்கிருத மெய்க்கீர்த்தியைத்தான் தொடக்கத்தில் படிக்க முடிகிறது.

நாயக்க மன்னர்கள் காலத்தில் தெலுங்கு மொழி தமிழகத்தில் ஒரு குறிப்பிடத்தக்க அளவுக்குச் செல்வாக்கு பெற்றிருந்திருக்கிறது. தமிழ் எழுத்தில் உள்ள கல்வெட்டுக்களில்கூட தெலுங்கு மொழி நடையை நாம் காண இயலும். உதாரணமாக மதுரைக்கு அருகில் உள்ள அழகர் கோயிலில் உள்ள ஓவியங்களின் அடியில் காணப் பெறும் அடிக்குறிப்புகளையும், இராமநாதபுரம் இராமலிங்க விலாசத்திலுள்ள

ஓவியங்களின் அடிக்குறிப்புகளையும் காட்டலாம். தமிழ் எழுத்தில் வெளியிடப் பெற்றுள்ள செப்புப் பட்டயங்களில்கூட இவர்கள் காலத்தில் தெலுங்கு எழுத்தில் கையொப்பம் இடப் பெற்றிருப்பதை அறிய முடியும்.

# கிரந்த எழுத்து

கி.பி. 3-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு தமிழ் நாட்டில் தமிழின் பழமையான வடிவமான தமிழ் எழுத்திலிருந்து வளர்ச்சி பெற்ற எழுத்துக்களான தமிழ் எழுத்தும், வட்டெழுத்தும் ஒரு சேர கல்வெட்டுக்களில் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன என்று முன்பே கூறப்பட்டுள்ளது. அதே நேரத்தில் தமிழ் மொழியின் ஒலி அல்லாது வடமொழியின் ஒலி வரும் இடங்களிலும் வடமொழிச் சொல்லை எழுத நேர்கின்ற போதும் கிரந்த எழுத்தைத் தமிழ் நாட்டில் பயன்படுத்தியிருக்கின்றனர்.

இக்கிரந்த எழுத்தை ஆந்திராவில் சாதவாகனர்களை அடுத்து ஆட்சி செய்த இக்ஷ்ுவாகு மன்னர்கள் பெரும்பான்மையாகப் பயன்படுத்தியிருக்கிறார்கள். அவர்களது கல்வெட்டுக்களில் இவ்வெழுத்தைப் பொறித்திருப்பதை நாகார்ஜுனா, அமராவதி போன்ற இடங்களில் நாம் காண முடிகிறது. அவர்களைத் தொடர்ந்து பல்லவர்கள் இவ்வெழுத்தை அதிக அளவில் கையாண்டுள்ளனர். காரணம் அவர்கள் காலத்தில் பிராகிருத, சமஸ்கிருத மொழியைத் தங்கள் செப்பேடுகளிலும், கல்வெட்டுக்களிலும் பயன்படுத்தியதே ஆகும். கி.பி. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 6-ஆம் நூற்றாண்டு வரை ஆட்சி புரிந்த பல்லவர்கள் தங்கள் செப்பேடுகளை பிராகிருத, சமஸ்கிருத மொழியில்தான் எழுதியுள்ளனர். அம்மொழியை எழுதுவதற்கு வளர்ச்சி பெற்ற தமிழி மற்றும் கிரந்த எழுத்தைப் பயன்படுத்தியுள்ளனர்.

கி.பி. 6-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு ஆட்சி புரிந்த பல்லவர்களும் தொடர்ந்து கிரந்தத்தைத் தங்கள் செப்பேடுகளிலும், கவ்வெட்டுக்களிலும் எழுதியிருக்

கின்றனர். செப்புப் பட்டயங்களில் சமஸ்கிருதப் பகுதியை எழுதுகையிலும், குடைவரைக் கோயில்களில் தங்கள் பட்டப் பெயர்களைப் பொறிக்கையிலும் கிரந்த எழுத்தையே கையாண்டுள்ளனர். குறிப்பாகக் காஞ்சிபுரம் கைலாசநாதர் ஆலயத்திலும், மாமல்லபுரத்துக்கு அருகிலுள்ள சாளுவன் குப்பம் அதிரண சண்டேஸ்வர கிருஹத்திலும் கிரந்த எழுத்திலேயே கல்வெட்டுக்களை இராஜசிம்மன் என்ற இரண்டாம் நரசிம்மன் பொறித்திருக்கிறான். கைலாசநாதர் ஆலயத்தில் கிரந்த எழுத்தை மூன்று வடிவில் காணலாம். கிரந்த எழுத்தைப் பல்வகைக் கொடிகள் வடிவத்திலும், பறவைகள் வடிவத்திலும் மற்றும் தலைக்கட்டுக்களோடு எழுதி 'பல்லவ கிரந்தம்' என்ற ஒரு தனி கிரந்த வகையையே பல்லவர்கள் உருவாக்கியிருக்கின்றனர். கிரந்த எழுத்துக்கள் தனிச் செல்வாக்குப் பெற்றிருந்தது பல்லவர் காலத்திலேயாகும்.

முற்காலப் பாண்டியர்கள், முத்தரையர், கொடும்பாளூர் வேளிர், வேணாட்டு வேளிர் ஆகியோரும்கூட கிரந்தத்தைப் பயன்படுத்தியிருக்கின்றனர். முற்காலப் பாண்டியர்களில் மாறவர்மன் அரிகேசரி காலத்திலேயே கிரந்த எழுத்தைக் கல்வெட்டுக்களில் பயன்படுத்தியிருப்பதைப் பார்க்க முடிகிறது. மதுரை வைகைக் கரையில் கண்டுபிடிக்கப்பட்ட அரிகேசரியின் கல்வெட்டில் முதற் பகுதி கிரந்த எழுத்திலேயே எழுதப்பெற்றிருக்கிறது. ஜடிலவர்ம பராந்தக நெடுஞ்சடையன் காலத்திய செப்பேடுகளிலும், அவன் காலத்தில் பொறிக்கப் பெற்ற ஆனைமலை, திருப்பரங்குன்றம் ஆகிய இடங்களிலுள்ள கல்வெட்டுக்களிலும் கிரந்த எழுத்தைக் காண முடிகிறது. அவனுக்குப் பின்னர் ஆட்சி புரிந்த இரண்டாம் இராஜசிம்மனின் சின்னமனூர்ப் பெரிய செப்பேட்டிலும்,

அவனது தம்பியான பராந்தக வீர நாராயணனின், தளவாய்புரச் செப்பேட்டிலும் சமஸ்கிருதப் பகுதியைக் கிரந்த எழுத்திலேயே எழுதி உள்ளனர். கி.பி. 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் நாமக்கல் குடைவரைக் கோயிலில் அதிய மன்னன் சோமன் என்பான் தம் கல்வெட்டைக் கிரந்த எழுத்தில் பொறித்திருக்கிறான்.

கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த முத்தரைய மன்னன் சுவரன் மாறன் தமது பட்டப் பெயர்களையும், தம் வெற்றிச் சிறப்புகளையும் கிரந்த எழுத்தில் பொறித்திருப்பது செந்தலையில் காணப் பெறும் தூணில் உள்ள கல்வெட்டினால் புலனாகிறது. அதே போன்று சோழர்களுக்கு அடங்கிய குறுநில மன்னர்களாக விளங்கிய கொடும்பாளூர் வேளிரும் தம் கல்வெட்டுக்களில் சிலவற்றைக் கிரந்த எழுத்தில் எழுதியுள்ளனர். குறிப்பாகப் பூதிவிக்கிரமகேசரியின் கொடும்பாளூர்க் கல்வெட்டைக் குறிப்பிடலாம்.

பாண்டிய மன்னர்களுக்கு அடங்கிய சிற்றரசர்களாக விளங்கிய ஆய் மன்னர்களில் சிலரும் தம் காலத்தியச் செப்புப் பட்டயங்களில் கிரந்த எழுத்தைப் பயன்படுத்தியிருக்கின்றனர்.

விஜயாலயன் முதல் ஆட்சிக்கு வந்த சோழ மன்னர்களின் செப்புப் பட்டயங்களிலும் சமஸ்கிருதப் பகுதியைக் கிரந்த எழுத்திலேயே காண முடிகிறது. முதலாம் இராஜராஜனின் காலத்தியக் கல்வெட்டுக்களில் சிலவற்றில் (தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு) முதல் வரி கிரந்த எழுத்திலும், சமஸ்கிருத மொழியிலும் எழுதப் பெற்றிருக்கிறது. சோழ மன்னர்கள் மற்றும் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுக்களிலும் சமஸ்கிருத மொழி கையாளப்படும் இடங்களில் கிரந்த எழுத்தையே பயன்படுத்தியிருக்கின்

றனர். சோழ மன்னர்கள் உத்தம சோழன், இராஜ ராஜன், இராஜேந்திரன் போன்றோர் தாம் வெளி யிட்ட காசுகளில்கூட கிரந்த எழுத்தைப் பொறித் திருக்கின்றனர்.

பல்லவர் காலத்தில் இருந்த அதே சிறப்புத் தன் மையைக் கிரந்த எழுத்து திரும்பவும் விஜயநகர மன் ன ர்கள் காலத்தில் பெற்றிருக்கிறது. அதற்குக் காரணம் பல்லவர்கள் எவ்வாறு ஆந்திரப் பகுதியிலிருந்து தமி ழகத்துக்கு வந்தார்களோ அது போன்றே விஜயநகர மன்னர்களும் ஆந்திர நாட்டைச் சேர்ந்தவர்களாவர். ஆதலால்தான் சமஸ்கிருத மொழியை அதிக அளவில் பயன்படுத்தியுள்ளார்கள்.

செப்புப் பட்டயங்களில் மட்டுமல்லாமல் கல் வெட்டுக்களிலும் கிரந்த எழுத்தைப் பெரும் அளவில் பயன்படுத்தியிருக்கிறார்கள். மன்னர்களின் மெய்க் கீர்த்தி காணப் பெறும் கல்வெட்டுப் பகுதி கிரந்த எழுத்திலேயே எழுதப்பட்டிருக்கும். கல்வெட்டின் மையப் பகுதிகளில்கூட இடையிடையே கிரந்த எழுத் தில் உள்ள சமஸ்கிருதச் சொற்களைக் காண நேரிடும். காரணம் சமஸ்கிருத மொழியையும், தமிழ் மொழி யையும் கலந்து பேசியும், எழுதியும் வந்ததாலாகும். அதுமாதிரிப் பேசுவதை மணிப்பிரவாளம் என்றும், எழுதுவதை மணிப்பிரவாள நடை என்றும் பிற்காலத் தில் அழைத்தனர். சமஸ்கிருத இலக்கியங்களைக் கிரந்த எழுத்தில் எழுதியதால் பின்னாளில் கிரந்தம் என்றாலே சமஸ்கிருத நூல் என்று வழங்கலாயிற்று.

விஜயநகர மன்னர்களை அடுத்து ஆட்சி செய்த நாயக்க மன்னர்களும் தங்கள் பேரரசர்களான விஜய நகர மன்னர்களைப் பின்பற்றி செப்பேடுகளிலும், கல் வெட்டுக்களிலும் கிரந்த எழுத்தை வெகுவாகப் பயன் படுத்தினர். இவர்களும் ஆந்திரப் பகுதியிலிருந்து வந்

தவர்கள்தான் ஆதலால் சமஸ்கிருத மொழியையும், கிரந்த எழுத்தையும் தொடர்ந்து கையாண்டிருக்கின்றனர்.

தமிழகத்தில் வழங்கி வந்த கிரந்த எழுத்தின் வளர்ச்சியை மூன்று கட்டமாகப் பிரிப்பர் ஆராய்ச்சியாளர்கள். கி.பி. 4-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 6-ஆம் நூற்றாண்டு வரை வழங்கிய கிரந்த எழுத்தை பழமையான கிரந்த எழுத்து (Archaic Grantha Script) அல்லது வளர்ச்சியடைந்த தமிழி எழுத்து (Developed Damili Script) என்று கூறுவர். கி.பி. 7-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 9-ஆம் நூற்றாண்டு வரை வழங்கிய கிரந்த எழுத்தைப் பல்லவ கிரந்தம் என்று அழைப்பர். இதை இரண்டாம் கட்ட வளர்ச்சியாகக் கொள்வர். கி.பி. 10-ஆம் நூற்றாண்டு முதல் இன்று வரை வழங்கும் கிரந்த எழுத்தை மூன்றாவது கட்ட வளர்ச்சியாகக் கணிப்பர்.

இம்மூன்று கட்ட வளர்ச்சியைச் சற்று விரிவாகக் காணலாம். பொதுவாக முதல் கட்ட வளர்ச்சியிலிருந்து இரண்டாம் கட்ட வளர்ச்சி பெற்றபொழுது எழுத்துக்களில் உள்ள நேர்க் கோடுகள் அனைத்தும் இரண்டு இரண்டாக இரட்டித்திருக்கின்றன. குடைவரைக் கோயில்களில் காணப் பெறும் 'அ' எழுத்து இரண்டாம் கட்ட வளர்ச்சியில் என்றும்; முதல் கட்ட எழுத்தான 'க' என்ற எழுத்து என்று இரண்டாம் கட்ட வளர்ச்சியாகவும், முதல் கட்ட 'ர' எழுத்து என்று இரண்டாம் கட்ட வளர்ச்சியாகவும் மாறியிருக்கின்றன. மேலே குறிப்பிட்டுள்ள எழுத்துக்களில் நேர்க் கோடுகள் எவ்வாறு இரட்டித்துள்ளன என்பதைப் பார்த்தோம். இரண்டாம் கட்ட எழுத்துக்களில் மற்

றொரு வளர்ச்சியையும் காண முடிகிறது. எழுத்துக் களை அழகு படுத்துவதற்கு நளினமான வளைவுகளை எழுத்துக்களில் சேர்த்திருப்பதேயாகும்.

ஆரம்ப காலத்தில் இருந்த 'அ' சிறிது காலத்துக்குப் பிறகு என்று யாழ் றம் பெற்றிருக்கிறது. முற்காலச் சோழர்கள் காலத்தில் என்று வளர்ச்சி பெற்றிருக்கிறது. அதுவே தற்காலத்தில் அல்லது என்று எழுதப்படுகிறது.

'ஆ' எழுத்தை எழுதுவதற்கு 'அ' எழுத்தை எழுது வதற்கு என்ன வளைவு சேர்க்கப்பட்டிருக்கிறதோ அத் தோடு வலப் பக்கத்தில் கீழ்நோக்கி ஒரு வளைவு

'இ' தமிழி எழுத்தில் ஃ என்று எழுப்பட்டுள்ளது. இது இம்மாதிரி கி.பி. 500 அளவில் மாற்றம் பெற்றிருக்கிறது. இது பல்லவர் காலத்தில் என்பதாகவும், என்ப தாகவும் ஒரு மாற்றம் அடைந்துள்ளது. இதுவே சோழர் காலத்தில் என்று மாற்றம் அடையப் பெற்றிருக்கிறது. காரணம் எல்லாவற்றை யும் ஒன்றாக இணைத்து எழுதும் ஆர்வம் ஏற்பட்ட தாலாகும்.

'ஈ' எழுத்தின் வளர்ச்சியாக தமிழ் எழுத்தில் உள்ள ஈ எழுத்து பெற்ற வளர்ச்சியையே பெற்றுள்ளது. ஒரே ஒரு சிறு மாற்றம் காணப்படுகிறது. அதாவது தமிழ் எழுத்தான கிரந்த எழுத்தில் என்று நெடுகோட்டில் மற்றும் ஒரு கோடு சேர்த்து எழுதப்பட்டிருக்கிறது.

தமிழ் எழுத்துக்களான உ, ஊ ஆகியவை எந்த

வளர்ச்சி பெற்றனவோ அதே வளர்ச்சிகளைத்தான் கிரந்த எழுத்துக்களான உ, ஊவும் பெற்றுள்ளன.

தமிழி எழுத்தில் காணப் பெறும் L திருச்சிராப்பள்ளிக் குடைவரைக் கோயிலில் எழுதப்பட்டுள்ளன மகேந்திரவர்மன் காலத்தியக் கல்வெட்டில் என்று காணப்படுகிறது. கி.பி. 8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கைலாசநாதர் ஆலயத்துக் கல்வெட்டில் என்று எழுதப்பட்டுள்ளது. சோழர் காலத்தில் இவ்வெழுத்து என்பதாக உருமாற்றம் பெற்றிருக்கிறது. இம்மாற்றம் எவ்வாறு அடைந்தது என்பது புலப்படவில்லை. 'ஐ' எழுத்து எழுதுவதற்கு தற்காலத்திய 'எ' எழுத்தோடு இடப் பக்கம் ஒரு கொம்பு சேர்த்து இம் மாதிரியாக எழுதுகின்றனர்.

உயிர் எழுத்துக்கள் எவ்வாறு வளர்ச்சியடைந்தன என்பதை மேலே கண்டோம். உயிர்மெய் எழுத்துக் களில் 'க' வர்க்க வளர்ச்சி பற்றி கீழே விளக்கப்படு கிறது. தமிழ் எழுத்தான 'க' போன்று தான் கிரந்த எழுத்து வளர்ச்சி பெற்றி ருக்கிறது. ஆனால் கிரந்த எழுத்தில் கவில் உள்ள நேர்க் கோடு இரட்டிக்கப்பட்டுள்ளது. அதுதான் சிறு வேற் றுமை. சிறிது காலத்துக்கு முன்பு வரை க , இவ்வாறு எழுதப் பட்டு வந்துள்ளது.

இரண்டாம் க அசோகன் பிராமியில் என எழுதப்பட்டிருக்கிறது. இது பல் லவர் காலத்தில் (திருச்சிக் குடை வரைக் கோயில்) எழுதப்பட்டு, சோழர் காலத்தில் இவ்வாறாக மாற்றம் அடைந்து, இன்று வரை என எழுதப்படுகிறது.

மூன்றாம் க அசோகன் பிராமியில் என்ற உருவில் காணப்படுகிறது. முற்காலப் பல்லவர் காலத்தில் , என்று எழுதப்பட்டிருக்கிறது. முற்காலச் சோழர் காலத்தில் என்றும், பிற்காலப் பாண்டியர் காலத்தில் என்றும் எழுதியிருப்பதைப் பார்க்க முடிகிறது.

நான்காம் க அசோகன் பிராமியில் என்று எழுதப்பட்டுள்ளது. முற்காலப் பல்லவர் காலத்தில் , , என்றும் காணப்படுகிறது. முற்காலச் சோழர் கல்வெட்டுக்களில் என்று பொறிக்கப்பட்டிருக்கிறது. தற்காலத்தில் என எழுதப்படுகிறது.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | | | ஐ | ஒ | ஓ | ஔ |
| க | க | கா | கி | கீ | கு | கூ | கெ | | கை | கொ | | கௌ |
| ங | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | | ஙை | ஙொ | | ஙௌ |
| ச | ச | சா | சி | சீ | சு | சூ | செ | | சை | சொ | | சௌ |
| ஞ | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | | ஞை | ஞொ | | ஞௌ |
| ட | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | | டை | டொ | | டௌ |
| ண | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | | ணை | ணொ | | ணௌ |
| த | த | தா | தி | தீ | து | தூ | தெ | | தை | தொ | | தௌ |
| ந | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | | நை | நொ | | நௌ |
| ப | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | | பை | பொ | | பௌ |
| ம | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | | மை | மொ | | மௌ |
| ய | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | | யை | யொ | | யௌ |
| ர | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | | ரை | ரொ | | ரௌ |
| ல | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | | லை | லொ | | லௌ |
| வ | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | | வை | வொ | | வௌ |
| ழ | | | | | | | | | | | | |
| ள | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | | ளை | ளொ | | ளௌ |
| ற | | | | | | | | | | | | |
| ன | | | | | | | | | | | | |

# எண்கள்

'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு' (குறள்)

இதையேதான் ஔவை மூதாட்டியாரும் 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' என்று கூறியுள்ளார்கள். ஆதலால் ஒவ்வொருவரும் எண்ணையும், எழுத்தை யும் நன்கு அறிந்திருத்தல் வேண்டுமல்லவா. தமிழகத் தில் வழங்கியுள்ள எழுத்துக்களைப் பற்றி தெரிந்து கொண்டோம். எண்களைப் பற்றியும் இதன் பின் அறிந்து கொள்வோம்.

இன்று காணப் பெறும் தமிழ் எண்கள் பிராமி எழுத்தில் காணப்படும் எண்களிலிருந்து வளர்ச்சி யடைந்திருக்க வேண்டும் என்று திரு. டி.என். சுப்பிர மண்யம் அவர்கள் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள். தமிழகத்தில் உள்ள தமிழிக் கல்வெட்டுக்களில் எண்கள் காணப்படவில்லை. முதன் முதலில் எண்ணைப் பற்றி குறிப்பிடும் பூலாங்குறிச்சிக் கல்வெட்டும் 'நூற்றுத் தொண்ணூற்றிரண்டு' என்று எழுத்தால்தான் இலக்கத் தைக் குறிப்பிட்டுள்ளது. அடுத்து நமக்குக் கிடைத் துள்ள பல்லவர் கால வட்டெழுத்துக் கல்வெட்டுக் களிலும் இலக்கம் எண்களாக எழுதப்படாமல் எழுத் துக்களாகவே எழுதப்பட்டிருப்பதைக் காண முடி கிறது.

ஆனால் செப்புப் பட்டயத்தில் கி.பி. 4-ஆம் நூற் றாண்டு அளவிலேயே எண்களைக் காண முடிகிறது. பல்லவ அரசி சாருதேவி வெளியிட்ட செப்புப் பட்ட யத்தில் முதன் முதலாக 2, 3, 4 ( , , ) ஆகிய எண்களைப் பார்க்கிறோம். இந்த எண்கள் சாதவாகன மன்னர்களின் நாசிக் கல்வெட்டுக்களில்

காணப் பெறும் எண்களையும், நாகார்ஜுனகொண் டாவில் உள்ள இக்ஷுவாகு மன்னன் சிரி வீர புருஷ தத்தாவின் கல்வெட்டுக்களில் காணப்படும் எண்க ளையும் போன்று காணப்படுகின்றன. ஆதலால் ஆந் திரப் பகுதியிலிருந்து வந்த பல்லவர்கள்தான் முதன் முதலில் இந்த எண்களைப் பயன் படுத்தியிருக்கின் றனர் என்று கருத இடமேற்படுகிறது.

கி.பி. 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பல்லவ மன்னன் சிம்மவர்மனின் பிக்கிரச் செப்பேட்டில் எண் களைக் காண முடிகிறது. இதில் 1, 2, 4. ( , , ) ஆகிய எண்கள் எழுதப்பட்டுள்ளன. சாருதேவியின் செப்புப் பட்டயத்தில் காணப் பெற்ற 2 ( ) சிம்மவர்மனின் செப்பேட்டில் 2 ( ) என்பதாக உள்ளது. இரண்டைக் குறிக்கும் இரு படுக்கைக் கோடுகளும் இலேசாக, ஒன் றாக இணைத்து எழுத ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. நான்கைக் குறிக்க சிறு மாற்றம் மட்டுமே நிகழ்ந்திருக் கிறது.

பாண்டிய மன்னன் ஜடிலவர்மன் பராந்தக நெடுஞ் சடையனின் சென்னை அருங்காட்சியகச் செப்பேட் டில் 1 முதல் 7 வரை ( , , , , , ) எண்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இச்செப்பேடு கி.பி. 770-ஐச் சேர்ந்ததாகும். ஆதலால் இவ்வெண்கள் ஓரள வுக்கு வளர்ச்சியடைந்த நிலையில் காணப்படுகின்றன.

கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பார்த்தி வேந்திரவர்மனின் உத்தரமேரூர்க் கல்வெட்டில்தான் 2 முதல் 10 வரையில் உள்ள எண்களைக் காண முடி

கிறது. அதுமட்டும் அல்லாமல் நூறு, ஆயிரம் ஆகிய வற்றுக்கான குறியீடுகளையும் பார்க்க முடிகிறது. முற் காலத்தியக் கல்வெட்டுக்களில் ஆண்டை நான்கு, ஐந்து, இருபது, எண்பது என்று எழுத்துக்களால்தான் எழுதியிருக்கிறார்கள். ஆனால் கிபி. 9 - 10-ஆம் நூற்றாண்டில் இருந்து ஆண்டை எண்ணாலும், எழுத் தாலும் குறிப்பிடத் தொடங்கியிருக்கிறார்கள், ''கோ இராசகேசரிவர்மர்க்கு யாண்டு 8 இவ்வாண்டு எட் டாவது'' என்று கல்வெட்டுக்களில் எழுதப்பட்டிருக் கும். இருபது, முப்பது, இருநூறு, முந்நூறு என்ற இலக்கங்களைக் குறிப்பிடுவதில் தமிழகத்தில் கையா ளப்பட்ட முறைக்கும், வடநாட்டில் கையாளப்பட்ட முறைக்கும் வேறுபாடு காண முடிகிறது. இருபதை எழுதுவதற்குத் தமிழ் நாட்டில் 2 எழுதி பக்கத்தில் பத்துக்கான குறியை எழுதியிருக்கின்றனர். அதே போன்று இருநூற்றை எழுதுவதற்கு 2 எழுதி பக்கத்தில் நூற்றுக்கான குறியைக் குறிக்கிறார்கள். ஆனால் வட நாட்டில் இருபது, முப்பது, நாற்பது என்பதற்குத் தனித் தனியான குறிகள் இருந்திருக்கின்றன. இரு நூற்றை எழுத நூறின் குறியீட்டை முதலில் எழுதி விட்டு பக்கத்தில் ஒரு சிறு கோடு இட்டிருக்கின்றனர்.

முந்நூறு எழுதுவதற்கு நூறு குறியீட்டின் பக்கத் தில் இரு சிறு கோடுகளைப் பக்கத்தில் எழுதியிருக்கின் றனர். ஆனால் நானூறிலிருந்து ஐநூறு, அறுநூறு, எழுநூறு ஆகியவற்றுக்கு நூற்றுக்கான குறியீட்டை முதலில் எழுதி விட்டு பக்கத்தில் நான்கு, ஐந்து, ஆறு, ஏழுக்கான எண்களைப் பக்கத்தில் எழுதியிருக்கின் றனர். இதே போன்றுதான் ஆயிரம் வகைகளுக்கும். இரண்டாயிரத்தை எழுதத் தமிழ் நாட்டில் இரண்டை முதலில் எழுதி பக்கத்தில் ஆயிரத்துக்கான குறி யீட்டை எழுதியிருக்கின்றனர். ஆனால் வடநாட்டில்

இரண்டாயிரத்துக்கான குறியீட்டை முதலில் எழுதி விட்டு பக்கத்தில் ஒரு சிறு கோட்டை எழுதியிருக்கின்றனர். நான்காயிரத்திலிருந்து ஐயாயிரம், ஆறாயிரம் என்பவற்றையெல்லாம் ஆயிரத்துக்கான குறியீட்டை முதலில் எழுதி விட்டுப் பக்கத்தில் நான்கு, ஐந்து, ஆறுகளுக்கான எண்களை எழுதியிருக்கின்றனர். தமிழகத்துக் கல்வெட்டுக்களில் உதாரணமாக 2435-ஐ எழுத ௨௲௪௱௩௰௫ என்று எழுதியிருப்பதைக் காணலாம்.

ஆயிரத்துக்கு மேற்பட்ட இலக்கங்களை, நூறாயிரம் (ஒரு லக்ஷம்), நூறு நூறாயிரம் (ஒரு கோடி) என்றுதான் குறிப்பிட்டனர் போலும். சுமார் கி.பி. 600 அளவிலேயே இந்தியாவின் வடபகுதியில் எண்களில் சைபரைச் சேர்க்க ஆரம்பித்துள்ளனர். ஆனால் தமிழ் நாட்டில் சைபரைச் சேர்த்து எழுதும் பழக்கம் மிகவும் பிற்காலத்தில்தான் ஆரம்பமாகியிருக்கிறது.

எண்களின் பின்னங்களுக்கும் தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்களில் குறியீடுகளைக் காண முடிகிறது. மாகாணி, அரைக்கால், கால், அரை, முக்கால் ஆகியவற்றுக்கும்; மேலும் மாகாணிக்குக் குறைவான பின்னங்களுக்கும் குறியீடுகளைப் பயன்படுத்தியிருக்கின்றனர். 1/320 என்ற பின்னத்துக்கும் குறியீட்டைக் காண முடிகிறது.

நில அளவுகளைப் பற்றி குறிப்பிடுகையில் சோழர் காலக் கல்வெட்டுக்கள் இப்பின்ன வகைகளை தெளிவாகக் குறிப்பிடுகின்றன. அத்தோடு அப்பின்னங்களுக்கான குறியீடுகளையும் அவற்றில் எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். குறிப்பாகச் சோழ மன்னன் முதலாம் இராஜராஜனின் தஞ்சைப் பெருவுடையார்

கோயில் கல்வெட்டுகள் நில அளவுகளைப் பற்றி விளக்கமாகத் தெரிவிக்கின்றன. ஒரு ஊரைச் சார்ந்த நிலத்தின் அளவையும், அதில் நத்தம், பறைச்சேரி, பார்ப்பனச்சேரி, சுடுகாடு, மன்று, கோயில் ஆகியவை தவிர்த்து எவ்வளவு உள்ளன என்பதையும், அவற்றில் திருநாமத்துக்காணி, திருவிடையாட்டம், பள்ளி, பிரமதாயம் ஆகியவை எவ்வளவு என்றும், இவைகளெல்லாம் நீங்க மீதம் உள்ள நிலப் பகுதியில் இறை செலுத்த வேண்டியவை எவ்வளவு நிலம் என்றும், அவைகளிலிருந்து விளையும் நெல் எவ்வளவு கலம் என்றும், அந்நெல்லிருந்து இறையாகத் தரப்பட வேண்டிய நெல் எவ்வளவு கலம் என்றும் தனித் தனியாகச் சிறப்பாக அக்கல்வெட்டுக்கள் புலப்படுத்துகின்றன. இக்கல்வெட்டுகளிலிருந்து நில அளவு, முகத்தல் அளவு ஆகிய விவரங்களையும், சிலவற்றில் அவ்வளவுகளுக்கான குறியீடுகளையும் அறிந்து கொள்ள முடிகிறது.

முந்திரி என்றாலே 1/320 பாகம் ஆகும். அதற்கும் குறைவாயுள்ள பாகங்களையும் கணக்கிட்டு அவைகளுக்கும் குறியீடுகள் எழுதியிருக்கின்றனர். கீழ் முந்திரி, கீழ் அரைக்காணி, கீழ் மா, கீழ் மாகாணி போன்ற கீழ்வாய் இலக்கங்களையும் காண முடிகிறது.

முகத்தலளவை, நீட்டலளவை, நிறுத்தல் அளவை ஆகியவற்றையும் மிகத் துல்லியமாகக் கணக்கிட்டிருக்கின்றனர். அவைகளுக்கும் குறியீடுகள் இருந்திருக்கின்றன. உதாரணமாக முகத்தலளவையில் வரும் செவிடு, ஆழாக்கு, உழக்கு, உரி, மரக்கால், கலம், கோட்டை ஆகியவைகளுக்குத் தனித் தனியான குறியீடுகளை எழுதியுள்ளனர். அதே போன்று நிறுத்தலளவையில் வரும் மஞ்சாடி, கழஞ்சு போன்றவற்றுக்கும் குறிகளைக் காண முடிகிறது. நில அளவையில் கையாளப்

படும் மா, குழி, வேலி, காணி ஆகியவைகளுக்கும் குறியீடுகளைக் குறித்திருக்கின்றனர்.

நில அளவை அடிப்படையாக வைத்துத்தான் பின்னாளில் நாணய வகையை உருவாக்கியிருக்கிறார்கள். மாகாணி, அல்லது வீசம் என்பது 1/16. ஒரு மாகாணிக்கு 20 முந்திரியாகிறது. ஆதலால் ஒரு ரூபாய்க்கு 16 × 20 = 320 முந்திரி. அதே போல் ஒரு மா நிலத்துக்கு 16 முந்திரி. 20 மா என்பது ஒரு நிலம் (அ) ஒரு வேலி. அவ்வாறெனில் 20 × 16 = 320 முந்திரி ஒரு நிலம் (ஒரு வேலி) ஆகிறது.

4 மாகாணி 1/4 ரூபாய். அதே போன்று 4 மாகாணி 1/4 வேலி அல்லது நிலம். 16 மாகாணி 1 ரூபாய். 16 மாகாணி ஒரு நிலம் (அ) ஒரு வேலி.

அளவுகளின் பகுதிகளுக்கு மட்டுமல்லாமல் சில பொருட்களுக்குக்கூட குறியீடுகளைக் காண முடிகிறது. கல்வெட்டுக்களில் அளவுகளின் பகுதிகள் குறியீடுகளில் காணப் பெறும் கல்வெட்டுக்கள் தஞ்சை மாவட்டத்திலும், திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களிலும்தான் அதிகமாக இருக்கின்றன. சில பொருட்களுக்கான குறியீடுகளைக் காட்டும் கல்வெட்டுக்கள் பெரும்பாலும் கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுக்களில்தான் நிறைந்துள்ளன. அரிசி, எண்ணெய், நெல் போன்ற பொருட்கள் குறியீடுகளாலேயே காட்டப்பட்டுள்ளன. மேலும் கொடையளிக்கப்பட்ட நிலத்தில் எல்லைகளைக் குறிப்பிடும் கல்வெட்டுகளில்கூட தெற்கு, மேற்கு போன்ற திசைகள் குறியீடுகளால் குறிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளைக் கொண்டு விளங்கும் கல்வெட்டுக்கள் கி.பி 16, 17-ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்தவைகளாக இருக்கின்றன.

## கல்வெட்டில் காணும் சில குறிகள்

| | | | |
|---|---|---|---|
| ப, ளை | – பொன் | வய, வ | – வயல் |
| ப | – பணம் | நில | – நிலம் |
| ப, ழ | – கழஞ்சு | வி | – வேலி |
| 7 | – மஞ்சாடி | குழ | – குழி |
| 7ு, ல | – பலம் | கீழ | – கீழ் |
| ய | – படி | இதந் | – இதன் |
| ட | – மரக்கால் | மெ | – மேல் |
| ஊ | – நெய் | தெ, தெ | – தெற்கு |
| அமு | – அமுது | உ | – வடக்கு |
| மிள | – மிளகு | பவி | – பணவிடை |
| நெ | – நெல் | ம, மாத | – மாதம் |
| 4 | – வட்டி | யு | – யும் |
| தூ, தூ | – தூக்கம் | ஆ | – ஆக |
| கெ | – கோட்டை | கு | – க்கு |
| யாண் | – யாண்டு | ட | – ட்ட |

| | |
|---|---|
| யு | ஒரு மா வரை |
| வூ | காலே காணி |
| சபநூ | நாலு மா காணி |
| கீஇவ | கீழரையே இரண்டு மா |
| ௭தவகூ | முக்காலே இரண்டு மா<br>முக்காணி |
| சபலபூ | நாலு மா அரைக்காணி<br>முந்திரிகை |
| ளுசபசபு | அரையே நாலுமா அரை |
| கருபகூ | ஒன்றரையே ஒருமா<br>முக்காணி |
| ருபளகூ | ஐந்து மா முந்திரிகைக்<br>கீழ் |
| உப௫வூ | இந்திலம் மாகாணி<br>முந்திரிகை |
| நிூநுபகிவூ | நிலம் முமீமா வரை<br>முந்திரிகை |
| எயஉபசூ௲ஐ | எழுபத்திரு கழஞ்சே<br>அறு மஞ்சாடி ஒன்று மா |

# எடுத்தல் அளவை

| | |
|---|---|
| 1 மா | -4 காணி |
| 5 மா (அ) ௨0 காணி | -1 குன்றி |
| ௨ குன்றி (அ) 10 மா | -1 மஞ்சாடி |
| 4 குன்றி (அ) ௨0 மா | -1 காசு |
| ௨0 மஞ்சாடி (அ) ௨ மாடை | -1 கழஞ்சு |
| 1 காசு | -8 அக்கம் |
| 1 அச்சு | -13 திரமம் |
| 1 கழஞ்சு | -௨0 மஞ்சாடி |
| 1 கழஞ்சு | -40 குன்றி |
| 1 கழஞ்சு | -௨00 மா |
| 1 கழஞ்சு | -800 காணி |
| 1 கழஞ்சு | -10 காசு |

# நிலஅளவை

| | |
|---|---|
| ௨ வது (முந்திரி) | -1ப (அரைக்காணி) |
| 4 வது | -1உ (காணி) |
| 8 வது | -½ சபு (அரை மா) |
| 1௨ வது | -சஉ (முக்காணி) |
| 16 வது (அ) 4உ | -1 ப (மா) |
| ௨0 வது | -1 பஉ (ஒரு மாகாணி) |
| 80 வது (அ) 5ப | -¾ நீ (நிலம்) |
| ௨0 ப (அ) ௨000 குழி | -1 நீ (அ) 1 செய் |

# முகத்தல் அளவை

| | |
|---|---|
| 360 நெல் | -1 ஞூ (செவிடு) |
| உ செ (செவிடு) | -1 பிடி |
| 5 செ (செவிடு) | -1 ஜ (ஆழாக்கு) |
| உ ஜ (ஆழாக்கு) | -1 ஜ (உழக்கு) |
| உ ஜ (உழக்கு) | -1 வரி (உரி) |
| உ உரி (உரி)<br>4 ஜீ (ஆ) (உழக்கு) | -1 உ (நாழி) |
| 8 உ (நாழி) | -1 ங (குறுணி) |
| 4 ங (குறுணி) | -1 காடி |
| 5 ங (குறுணி) | -1 பறை |
| 1உ ங (குறுணி) | -1 கள (கலம்) |
| 400 ங (குறுணி) | -1 கரசை |
| 3 கள (கலம்) | -1 கோட்டை |

## கல்வெட்டு படியெடுக்கும் முறை

கல்வெட்டு படியெடுக்கும் முறையே ஒரு தனிக் கலை. கல்வெட்டுக்களைப் படியெடுப்பதற்கு ஓரள வுக்குப் பயற்சி பெற்றிருத்தல் வேண்டும். அப் பொழுதுதான் கல்வெட்டுக்களைத் தெளிவாகப் படி யெடுக்க இயலும். படியெடுப்பதற்குத் தேவையான பொருட்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| 1. அடிமட்டை (பெரியது) | - Beating brush (Big) |
| 2. அடிமட்டை (சிறியது) | - Beating brush (Small) |
| 3. மையொற்றி (பெரியது) | - Dabber (Big) |
| 4. மையொற்றி (சிறியது) | - Dabber (Small) |
| 5. நார்மட்டை | - Coir brush |
| 6. இருப்பு மட்டை | - Iron brush |
| 7. தட்டு | - Plate |
| 8. சிறு குவளை | - Mug |
| 9. வாளி | - Bucket |
| 10. படியெடு தாள் | - Paper |
| 11. சணல் | - Jute fibre |
| 12. படியெடு எழுதுகோல் | - Copying Pencil |
| 13. மை | - Paste |
| 14 சுரண்டும் கத்தி | - Scrapping Knife |
| 15. நீர் உறிஞ்சி | - Sponge |

கல்வெட்டு படியெடுப்பதற்குப் பயன்படுத்தபடும் மை கீழ்க்காணும் பொருட்களால் தயாரிக்கப்படுகிறது.

| | |
|---|---|
| 1. விளக்குக் கரி | - (Lamp Black) |
| 2. தந்தக் கரி | - (Ivory Black) |
| 3. இந்தியன் இங்க் | - (Indian Ink) |
| 4. கோந்து | - (Gum) |
| 5. மயில் துத்தம் | - (Sulpheroxide) |

விளக்குக் கரியையும், தந்தக் கரியையும் ஒரு குறிப்

பிட்ட அளவில் எடுத்துக் கொண்டு அவற்றில் இந்தியன் இங்கை ஒரு குறிப்பிட்ட அளவுக்கு ஊற்றி நன்கு பிசைந்த பிறகு குறைந்த அளவில் கோந்தும், மயில் துத்தமும் சேர்த்து அம்மியில் வைத்து நன்கு அரைத்தல் வேண்டும். பசை தாளில் நன்கு ஒட்டுகின்ற பக்குவத்துக்கு வந்த பின்பு அதனை எடுத்து ஒரு இருப்பு டப்பாவில் அடைத்துக் கொள்ளுதல் வேண்டும். நாளாக ஆக அது காய்ந்து விடும். கல்வெட்டு படியெடுக்கையில் அதில் சிறு பகுதியை எடுத்து தட்டில் வைத்துக் கொண்டு தண்ணீர் சேர்த்து குழப்பிக் கொள்ளுதல் வேண்டும்.

கல்வெட்டு காணப்பெறும் இடத்தை முதலில் இரும்பு மட்டையாலும், நார் மட்டையாலும் தேய்த்து சுத்தம் செய்து கொள்ளுதல் வேண்டும். சுண்ணாம்புக் காரையோ அல்லது பாசியோ படிந்திருந்தால் சுரண்டும் கத்தியால் சுத்தம் செய்தல் வேண்டும். அவ்வாறு சுத்தம் செய்யப்பட்ட பிறகு தண்ணீரால் நன்கு கழுவி விடுதல் வேண்டும். நீர் உறிஞ்சியின் துணை கொண்டு அதிகமான நீரை உறிஞ்சி விடுதல் வேண்டும்.

கழுவப்பெற்ற கல்வெட்டுப் பகுதியில், வாளியில் உள்ள தண்ணீரில் நனைக்கப் பெற்ற படியெடு தாளை ஒட்டுதல் வேண்டும். கல்லில் ஈரப்பசை இருப்பதாலும், தாள் ஈரமாக இருப்பதாலும் அது நன்கு ஒட்டிக் கொள்ளும். அவ்வாறு ஒட்டப் பெற்ற தாள் மீது அடிமட்டை கொண்டு பக்குவமாக அடித்தல் வேண்டும். தாள் கிழிந்து விடாமலும், எழுத்துக்குச் சேதம் ஏற்பட்டு விடாமலும் அடித்தல் வேண்டும். எழுத்து வெட்டப் பெற்ற குழிவான பகுதிகளில் தாள் அமிழ்ந்து விடும். சமபகுதியில் தாள் மேலாக ஒட்டிக் கொள்ளும்.

பிறகு, தட்டில் குழப்பி வைத்திருக்கின்ற மையில்

சிறிது எடுத்து பெரிய மையொற்றியில் வைத்துச் சிறிய மையொற்றியால் நன்கு குழப்பிக் கொண்டு, கல்வெட்டின் மீது ஒட்டி அடிக்கப் பெற்றுள்ள தாளின் மீது சீராக ஒற்றுதல் வேண்டும். அவ்வாறு ஒற்றுகையில் சமமாக உள்ள பகுதி மை ஒற்றுவதால் கறுப்பாகவும், எழுத்துப் பள்ளங்களில் ஒட்டிய தாள் பகுதி வெள்ளையாகவும் காணப்படும். ஆதலால் எழுத்து வெள்ளையாக நன்கு காணப்படும். இலேசாகக் காய்ந்த பின்பு மை ஒற்றப்பெற்ற தாளினைக் கல்வெட்டுப் பகுதியிலிருந்து தோல் உரிப்பது போன்று பெயர்த்து எடுத்துவிட வேண்டும்.

பெயர்த்து எடுக்கப் பெற்ற கல்வெட்டுப் படியின் தொடக்கப் பகுதியின் பின்புறத்தில் அக்கல்வெட்டு எந்த இடத்திலிருந்து படி எடுக்கப்பட்டதென்ற விபரத்தைப் படியெடு எழுதுகோலால் எழுதி விடுதல் வேண்டும். பின்பு அக்கல்வெட்டுப் படியை நிழலில் உலர வைத்தல் வேண்டும். உலர்ந்த பிறகு இறுதிப் பகுதியிலிருந்து மடித்து தொடக்கப் பகுதி மேலே இருக்குமாறு வைத்துச் சணலினால் கட்டிக் கொள்ளுதல் வேண்டும். அப்பொழுதுதான் தேவைப்படும் போது அக்கல்வெட்டு எங்கு படி எடுக்கப் பெற்றது என்பதைக் கண்டறிய எளிதாக இருக்கும். அவ்வாறு எடுக்கப் பெற்ற கல்வெட்டுப் படிகளை குளிர்ப்பாங்கான இடத்திலோ அல்லது குளிர்ச்சாதன அறையிலோ வைத்துப் பாதுகாப்பது நலம்.

## கல்வெட்டாய்வு

நமது இந்தியத் திருநாட்டின் தொன்மை வரலாறு எழுதுவதற்குக் கல்வெட்டு என்ற ஒரு வரலாற்றுக் கருவூலம் இருப்பதையே வெளிநாட்டார்தான் நமக்குப் புலப்படுத்தினர். 1837-ஆம் ஆண்டு முதன் முதலில் ஜேம்ஸ் பிரின்சப் என்னும் வெளிநாட்டார் இந்தியாவில் உள்ள கல்வெட்டுக்களையெல்லாம் திரட்டிப் படித்து அறிந்தோமென்றால், இந்தியாவின் பழைமையான வரலாற்றை மிகத் தெளிவாக அறிந்து கொள்ளலாம் என்ற கருத்தை வெளியிட்டார். இந்தியாவில் தொல்லியல் ஆய்வு சிறப்பாக அமைவதற்குக் காரணமாக இருந்தவரும் இவரே ஆவார். இவரது கருத்து வெளியானதற்குப் பிறகு 'ஆசியாவின் ஆராய்ச்சிகள்', 1 ஆசியக் குழுவின் இதழ், 2 இந்தியாவின் பழைமை 3 ஆகிய நூல்களில் இந்தியாவில் கிடைக்கும் கல்வெட்டுக்கள் பற்றிச் சில கட்டுரைகள் வெளிவர ஆரம்பித்தன.

இந்திய அரசாங்கத்தால் 1861-இல் நியமிக்கப் பட்ட தொல்லியல் ஆய்வாளர் 4 என்னும் அலுவலர் இந்தியாவில் காணப்பெறும் கல்வெட்டுக்களை எல்லாம் படி எடுப்பதற்கும், அவற்றைப் படித்து நூல் வடிவில் வெளிக் கொணர்வதற்கும் ஏற்பாடுகள் செய்தார். அவ்வாறு படியெடுக்கப்பட்டு, படிக்கப் பெற்ற கல்வெட்டுக்களில் மௌரியப் பேரரசன் அசோகன் காலத்ததெல்லாம் ஒன்று திரட்டி, 'அசோகன் காலத்திய கல்வெட்டுக்கள்' என்று ஒரு தனித் தொகு

தியை 1871 முதல் 1885 வரை இந்திய அரசு தொல்லியல் துறையின் டைரக்டர் ஜெனரலாக இருந்த அலெக்சாண்டர் கன்னிங்காம் என்பவர் வெளியிட்டார். அதே போன்று இந்திய அரசாங்கத்தின் முதல் கல்வெட்டாய்வாளராக விளங்கிய ஜே எப்ஃ பிளீட் (1883-86) என்பாரும் குப்தர் காலத்திய கல்வெட்டுக்கள் அனைத்தையும் தொகுத்து ஒரு தனித் தொகுதியாக வெளிக் கொணர்ந்தார். சென்னை அரசாங்கத்தின் முதல் கல்வெட்டாய்வாளராக விளங்கிய இ. ஹுல்ட்ஷ (1886-1903) என்பார் தென்னிந்திய கல்வெட்டுக்களின் முதல் தொகுப்பை 1903-இல் வெளியிட்டார். இதற்கும் ஓர் ஆண்டுக்கு முன்பாக அலெக்சாண்டர் கன்னிங்காமை அடுத்து டைரக்டர் ஜெனரலாகப் பதவியேற்ற ஜே. பர்ஜஸ் என்பார் 'எபிகிராபியா இண்டிகா' 5 என்னும் இதழைக் கல்வெட்டுக்கள் பற்றி வெளியிடுவதற்காகவே தொடங்கினார்.

சென்னை அரசாங்கத்தின் கல்வெட்டிலாகாவினர் படியெடுத்த கல்வெட்டுக்களின் முக்கிய குறிப்பு 'தென்னிந்திய கல்வெட்டு அறிக்கை' 6 என்ற அறிக்கையில் 1887 முதல் வெளிவர ஆரம்பித்தது. அதுவே 1945-46-லிருந்து இந்தியக் கல்வெட்டுக்களின் ஆண்டறிக்கை 7 என்ற பெயரில் வெளிவருகிறது. இதுவரை 1967-68 ஆண்டறிக்கை வரை வெளிவந்துள்ளது.

கல்வெட்டுக்களைப் படியெடுக்கத் தொடங்கி அரை நூற்றாண்டு ஆவதற்குள் சுமார் 25,000 கல்வெட்டுக்களையும், சுமார் 500 செப்புப் பட்டயங்களையும் கண்டுபிடிக்க முடிந்தது. அவற்றை முறையாகப் படிக்கவும், அது பற்றி ஆராய்ச்சி கட்டுரைகள் எழுதவும் தொடங்கியவுடன் பல தனித் தனிக் கல்வெட்டுத் தொகுதிகள் வெளிவரத் தொடங்கின. எப்ஃ. கீல்ஹார்ன் அவர்களால் தயாரிக்கப் பெற்ற 'வட இந்தியாவின் கல்வெட்டுக்கள்' 8 என்ற தொகுப்பு

குறிப்பிடத்தக்கதாகும். இத்தொகுப்பு எபிகிராபியா இண்டிகாவின் ஐந்தாம் தொகுதியில் பிற்சேர்க்கை யாக வெளிவந்தது.

பிராமி எழுத்திலும், கரோஷ்டி எழுத்திலும் எழு தப்பட்டிருந்த இந்தியக் கல்வெட்டுக்களைப் படித்த பெருமை பிரின்சப், லேஸன், நோரிஸ், கன்னிங்ஹாம், ஜி. பூலர். செனர்ட், கீல்ஹார்ன், ஹுல்ட்ஷ், ரைஸ், எலியட், பிளீட் ஆகிய வெளிநாட்டார்களையும், பக வன்லால் இந்திரஜித், ஆர்.எல். மித்ரா, ஆர்.ஜி. பண் டார்க்கர், வி. வெங்கையா, எச். கிருஷ்ண சாத்திரி, என்.ஜி. மஜூம்தார், கோபிநாதராவ், கே.வி. சுப்பிர மண்ய அய்யர் ஆகிய இந்திய நாட்டினரையும் சாரும்.

இந்திய மொழிகளில் வெளிவந்த சில மாத இதழ் களிலும் கல்வெட்டுக்கள் தொடர்பான கட்டுரைகளை இந்திய நாட்டைச் சேர்ந்த கல்வெட்டறிஞர்கள் எழுத லாயினர். தமிழ் நாட்டில் 'செந்தமிழ்', 'தமிழ்ப் பொழில்' போன்ற இதழ்களில் தமிழ் அறிஞர்கள் மு. இராகவையங்கார், ஆர். இராகவையங்கார், ந.மு. வேங்கடசாமி நாட்டார், சதாசிவ பண்டாரத்தார், மயிலை சீனி. வேங்கடசாமி, சுந்தரேச வாண்டை யார் போன்றோரும் கல்வெட்டுக்கள் பற்றிய கட்டு ரைகளை எழுதினர்.

கர்நாடக மாநிலத்திலிருந்து எபிகிராபியா கர்நா டிகா 9 என்ற தொகுதியும், ஜேர்னல் ஆப் மிதிகல் சொஸைட்டி 10 என்ற இதழும் கல்வெட்டு பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் தாங்கி வெளிவந்தன. கேரள மாநிலத்தில் உள்ள கல்வெட்டுக்களையெல்லாம் திரட் டித், தொகுத்து 'திருவிதாங்கூர் தொல்லியல் வெளி யீடுகள்' 11 என்பதின் மூலம் வெளியிடப்பட்டன. தமிழ் நாட்டில் உள்ள புதுக்கோட்டைப் பகுதியில் உள்ள கல்வெட்டுக்கள் மட்டும் தொகுக்கப்பெற்றுப் 'புதுக்கோட்டை ஸ்டேட்டின் கல்வெட்டுக்கள்' 12 என்ற பெயரில் ஒரு தொகுதி வெளிவந்தது.

ஆந்திராவில் உள்ள திருமலை திருப்பதி தேவஸ் தானத்தார் திருப்பதியில் உள்ள கல்வெட்டுக்களை எல்லாம் தொகுத்துத் 'திருமலை திருப்பதி தேவஸ் தானக் கல்வெட்டுக்கள்' 13 என்ற பெயரில் ஐந்து தொகுதிகளை வெளியிட்டுள்ளனர்.

தென்னந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதிகள் இது வரையில் ஒன்று முதல் பதினான்கு வரை தொடர்ந் தும், பின்னர்ப் பதினேழு, பத்தொன்பது, இருபத்து மூன்று ஆகிய தொகுதிகளும் வெளிவந்துள்ளன. முதல் தொகுதி மகாபலிபுரம், காஞ்சிபுரம் ஆகிய இடங்களில் உள்ள பல்லவர்களின் கல்வெட்டுக்களை உள்ளடக்கியும், இரண்டாம் தொகுதி தஞ்சைப் பெரு வுடையார் கோயில் கல்வெட்டுக்களை உள்ளடக்கி யும், மூன்றாம் தொகுதி சில சோழர் செப்புப் பட்ட யங்களை உள்ளடக்கியும் வெளிவந்திருக்கின்றன. நான்காம் தொகுதியிலிருந்து எட்டாம் தொகுதி வரை 1887 முதல் 1903 வரை தமிழகத்தில் படியெடுக்கப் பட்டுள்ள கல்வெட்டுக்களைத் தாங்கி இருக்கின்றன. ஒன்பது, பத்து, பதினொன்றாம் தொகுதிகள் ஆந்திர, கர்நாடகப் பகுதிகளில் படியெடுக்கப்பட்டுள்ள கல் வெட்டுக்களைக் கொண்டுள்ளன. பன்னிரண்டாம் தொகுதி பல்லவர் காலக் கல்வெட்டுக்களையும், பதின் மூன்றாம் தொகுதி சோழ மன்னர்களில் இராஜகேசரி என்ற பெயரில் மட்டும் குறிக்கப்படுபவர்களின் கல் வெட்டுக்களையும், பதினான்காம் தொகுதி முற்காலப் பாண்டியர்களின் கல்வெட்டுக்களையும், பதினேழாம் தொகுதி தமிழகத்தில் 1904-ஆம் ஆண்டில் படியெடுக் கப்பட்ட கல்வெட்டுக்களையும். பத்தொன்பதாம் தொகுதி சோழ மன்னர்களில் பரகேசரி என்ற பெய ரில் மட்டுமே காணப்பெறும் கல்வெட்டுக்களையும், இருபத்து மூன்றாம் தொகுதி தமிழகத்தில் 1907-ஆம்

ஆண்டு படியெடுக்கப்பட்ட கல்வெட்டுக்களையும் தாங்கி வெளிவந்திருக்கின்றன.

எபிகிராபியா இண்டிகா ஒன்று முதல் முப்பத் தெட்டு வரை தொடர்ந்து வெளிவந்துள்ளன. இத் தொகுதிகளில் இந்தியாவில் காணப்பெறும் முக்கிய சில கல்வெட்டுக்களை வரலாற்றறிஞர்களும், கல் வெட்டறிஞர்களும் ஆராய்ச்சிக் கண்ணோட்டத் தோடு ஆய்ந்து கட்டுரை எழுதி உள்ளார்கள். இத் தொகுதிகளைப் போன்றே ஜேர்னல் ஆப் மித்திக் சொஸைட்டி 14 தொகுதிகளிலும் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதப்பட்டு இருக்கின்றன. வரலாற்றாய் வாளர்களுக்கு இக்கட்டுரைகள் மிக மிக இன்றியமை யாதனவாகும்.

1887 முதல் 1936 வரை படியெடுக்கப்பட்ட கல் வெட்டுக்கள் எந்தெந்த மாவட்டத்தில், எந்தெந்த ஊரில், தமிழகத்தில் படியெடுக்கப்பட்டன என்ற விவரம் அடங்கிய 'படியெடுக்கப்பட்ட கல்வெட்டுக் களின் வரிசை' 15 என்ற ஒரு தொகுதியும், அக்கல் வெட்டுக்கள் எந்தெந்தக் குல மன்னர்களைச் சார்ந் தவை, அவற்றில் காணப்பெறும் சில முக்கிய செய்தி கள் ஆகியவை உள்ளடக்கி 'பகுதித் தொகுப்பு' 16 ஒன்றும் வெளிக் கொணரப்பட்டுள்ளன. இத்தொகுதி கள் கல்வெட்டுக்களைப் பற்றி ஆய்வு செய்வாருக்குப் பெரிதும் உதவுபவையாகும். இதைப் போன்றே சென்னை மாகாணக் கல்வெட்டுக்களின் வரிசை 17 என்ற பெயரில் மூன்று தொகுதிகள் சென்னை அர சாங்கத்தால் வெளிக் கொணரப்பட்டன. இவை 1887 முதல் 1915 வரை படியெடுக்கப்பட்ட கல்வெட் டுக்களின் தொகுப்பாகும். இதில் ஒவ்வொரு கல்வெட் டினைப் பற்றியும் அஃது எந்த மன்னன் காலத்தியது, அதில் குறிக்கப்பட்டுள்ள முக்கிய குறிப்பு ஆகியவை தரப்பட்டுள்ளன.

தமிழகத்தில் இருந்த மேல் நாட்டதிகாரிகளான சீவெல், மெக்கன்சி போன்றோர் தனிப்பட்ட முறையில் சில கல்வெட்டுக்களை நேரிடையாகப் படித்துக் குறிப்பெடுத்தும்; மேலும் பலரை அணுகி அவர்களிட மிருந்து பெறப்பட்ட செய்திகளைச் சேகரித்தும் நூல்கள் வெளியிட்டுள்ளனர். 'தென்னிந்திய வரலாற்றுக் கல்வெட்டுக்கள்' 18 என்னும் பெயரில் ஒரு தொகுதியை சீவெல் வெளியிட்டுள்ளார்.

சென்னை அரசாங்கத்துக் கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகத்திலும், தஞ்சாவூர் சரசுவதி மஹால் நூல்நிலையத்திலும் இருந்த கையெழுத்துப் பிரதிகளில் காணப்பட்ட கல்வெட்டுக்களின் வாசகங்களைத் தொகுத்து அவற்றுக்கு உரிய விளக்கக் குறிப்புகளைச் சேர்த்துச் சென்னை அரசு ''தென்னிந்திய கோயிற் சாசனங்கள்'' 19 என்ற பெயரில் மூன்று தொகுதிகளை வெளிக் கொணர்ந்துள்ளது. இத்தொகுதிகளின் மூன்றாம் தொகுதியின் இரண்டாம் பகுதியில் பல ஆராய்ச்சிக் கட்டுரைகளும், கல்வெட்டுக்கள் அகராதி ஒன்றும் சேர்க்கப்பட்டுள்ளன. மேலும் எழுத்துக்களின் வளர்ச்சி பற்றியும் அதில் எழுதப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

சென்னையில் இருந்த தமிழ் வரலாற்றுக் கழகம் என்ற குழு பல்லவர் காலச் செப்புப் பட்டயங்களையெல்லாம் ஒன்று சேர்த்துப் 'பல்லவர் செப்பேடுகள் முப்பது' என்று ஒரு தொகுதியும், பாண்டியர் காலச் செப்புப் பட்டயங்களை ஒன்று சேர்த்துப் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' என்றும் இரு தொகுதிகளை வெளியிட்டுள்ளது. இத்தொகுதிகள் ஆராய்ச்சியாளர்களுக்கு மிகவும் பயனுடையதாக உள்ளன. பாண்டியர் செப்பேடுகள் பத்து' என்ற தொகுதியில் ஆய் மன்னர்களின் செப்பேடுகளான நான்கு செப்பேடுகளும் சேர்த்து வெளியிடப்பட்டுள்ளன. இவற்றைப்

போன்றே சோழர் காலச் செப்பேடுகளை உள்ளடக்கிய ஒரு தொகுதியை வெளியிட வேண்டும் என்ற ஒரு கருத்தைத் தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத் துறை கொண்டுள்ளது.

சென்னை அருங்காட்சியகம் 'இந்தியச் சாசனவியலும் தென்னிந்திய எழுத்துக்களும்' என்ற நூலைப் பதிப்பித்துள்ளது. அதில் இந்திய நாட்டில் காணப் பெறும் முக்கியமான எழுத்துக்களின் வளர்ச்சி அட்டவணைகள் சேர்க்கப்பட்டு கல்வெட்டுக்கள் பற்றி விரிவாக எழுதப்பட்டுள்ளது.

தமிழக அரசின் தொல்பொருள் ஆய்வுத் துறை தமிழகத்தில் காணப்பெறும் கல்வெட்டுக்கள் அனைத்தையும் படியெடுத்து, நூலாக வெளியிடப்பட வேண்டும் என்ற நோக்கத்தில் விரைந்து செயல்பட்டு,

1. சென்னை மாநகர் கல்வெட்டுக்கள்.
2. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள் (முதல் பாகம்.)
3. கன்னியாகுமரிக் கல்வெட்டுக்கள் 1 முதல் 5 தொகுதி வரை.
4. செங்கம் நடுகற்கள்.
5. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுக்கள் (2 தொகுதிகள்.)
6. தருமபுரி மாவட்ட நடுகற்கள்.
7. நன்னிலம் கல்வெட்டுக்கள் (3 தொகுதிகள்.)
8. கும்பகோணம் கல்வெட்டுக்கள்.
9. திருத்துறைப்பூண்டிக் கல்வெட்டுக்கள்.

என்று பல கல்வெட்டுத் தொகுதிகளைப் பதிப்பித்துள்ளது. இக்கல்வெட்டுக்கள் தமிழகத்தின் பண்டைய வரலாறு பற்றி ஆய்வு செய்வார்க்கு மிகவும் உதவிகரமாக உள்ளன. அதுமட்டுமல்லாமல் 'தமிழகம்' 20 என்று ஓர் ஆண்டு இதழையும், 'கல்வெட்டு' என்று

ஒரு காலாண்டு இதழையும் வெளியிட்டு வருகிறது. இவ்விதழ்களில் அவ்வப்பொழுது கண்டுபிடிக்கப்படும் புதிய கல்வெட்டுக்களைப் பற்றிய ஆய்வுக் கட்டுரைகள் எழுதப்பட்டு வருகின்றன.

மேலும் கல்வெட்டுக்களைப் பற்றிப் பாமர மக்களும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அடிப்படையில் மாவட்டத்துக்கு மாவட்டம் கல்வெட்டுக் கருத்தரங்குகளையும், கல்வெட்டுக் காட்சிகளையும் நடத்தி வருகிறது. கல்வெட்டுக் கருத்தரங்குகளில் படிக்கப் பெற்ற ஆய்வுக் கட்டுரைகளைத் தொகுத்து நூல்கள் வெளியிட்டுள்ளன. சென்னையில் நடைபெற்ற கல்வெட்டுக் கருத்தரங்கில் படிக்கப்பெற்ற கட்டுரைகளைத் தொகுத்துக் 'கல்வெட்டுக் கருத்தரங்கு' 21 என்ற பெயரில் ஒரு நூலைக் கொண்டு வந்துள்ளது. அதே போன்று நடுகல் கருத்தரங்கு ஒன்று நடத்தி நடுகல் கருத்தரங்கு' 22 என்ற பெயரில் ஒரு நூலை வெளியிட்டுள்ளது.

தமிழகத்திலுள்ள ஆசிரியப் பெருமக்களுக்கு ஆண்டுதோறும் மேத் திங்களில் கல்வெட்டுப் பயிற்சி வகுப்பு நடத்துகிறது. முதுகலைப் பட்டம் பெற்ற மாணவர்கள் சிலரைத் தேர்ந்தெடுத்து, ஓர் ஆண்டு டிப்ளமோ வகுப்பை அமைத்துக் கல்வெட்டில் பயிற்சி தருகிறது.

இந்தியக் கல்வெட்டுக் கருத்தரங்கு 23 என்று ஒரு கருத்தரங்கு ஆண்டுதோறும் நடைபெறுகிறது. இதில் இந்தியாவில் அவ்வவ்வாண்டு கிடைக்கும் புதிய கல்வெட்டுக்கள் பற்றிக் கட்டுரைகள் படிக்கப்படுகின்றன. பின்னர் அவை நூல்களாகத் தொகுக்கப்பட்டு ஆராய்ச்சியாளர்களின் பார்வைக்கு வைக்கப்படுகின்றன.

கல்வெட்டுக்களை ஆதாரமாகக் கொண்டு பல

ஆய்வுக் கட்டுரைகள் பலவித சஞ்சிகைகளில் வெளி வர ஆரம்பித்தன. சென்னையில் 'கொங்கு' என்ற மாத இதழிலும், தமிழக வரலாற்றுப் பேரவையின ரால் வெளியிடப்பட்ட ஆண்டிதழான தென்னிந்தி யாவைப் பற்றிய நூல், 24 தமிழக ஆராய்ச்சி பேரவை வெளியிட்ட 'ஆய்வுக் கொத்து' போன்றவற் றில் ஆய்வுக் கட்டுரைகள் பல எழுதப்பட்டிருக்கின் றன. கொங்கு இதழில் கல்வெட்டுச் சொற்கள் சிலவற் றுக்குப் பொருளும் தரப்பட்டிருக்கின்றன.

தனிப்பட்டவரான மர்ரே இராஜம் என்பவரின் கல்வி நிறுவனம் தமிழகக் கல்வெட்டுக்களில் காணப் பெறும் சொற்களுக்கு உரிய பொருளைத் தொகுத்துத் தரும் பெரும் பணியில் பல ஆண்டுகளாக ஈடுபட்டுச் செய்து வருகிறது.

சென்னைப் பல்கலைக் கழகத்துத் தொல்லியல் துறை 'தென்னிந்திய பழைமை எழுத்தியல்' 25 என்ற பெயரில் ஒரு நூலையும், மெக்கன்சி அவர்களால் சேகரிக்கப்பட்ட கையெழுத்துப் பிரதிகளில் காணப் பெற்ற கல்வெட்டுக்களைத் தொகுத்து ஒரு நூலையும் வெளியிட்டுள்ளது. மேலும் தமிழகத்துக் கல்வெட்டுக் களை மாவட்ட அடிப்படையில் பிரித்துப், பொருட் குறிப்பு எழுதி வெளியிடும் பணியிலும் ஈடு ஈடுபட்டார்.

இந்திய அரசாங்கத்தின் நிதி உதவி பெற்றுப் பல்ல வர் காலக் கல்வெட்டுக்கள் அனைத்தையும் திரட்டி விளக்கக் குறிப்புக்களோடு வெளியிடும் பணியில் சென்னைப் பல்கலைக் கழகத் தொல்லியல் துறையின் முன்னாள் பேராசிரியர் டி.வி. மகாலிங்கம் அவர்கள் ஈடுபட்டுள்ளார்கள்.

இந்தியாவின் மிகப் பழைமையான எழுத்தான ஹரப்பன் எழுத்தைப் பற்றிப் பல நாட்டு அறிஞர் களும் ஆய்வு செய்து அறிக்கைகள் வெளியிட்டு வரு

கின்றனர். குறிப்பாகத் தமிழ் நாட்டைச் சேர்ந்த ஐராவதம் மகாதேவன் அவர்கள் ஹரப்பன் எழுத்தைப் பற்றி ஆய்ந்து ஹரப்பன் எழுத்துக்களைத் தொகுத்து ஒரு நூல் வெளியிட்டுள்ளார். அது 'ஹரப்பன் எழுத்துக்களின் தொகுதி' 26 என்ற பெயரில் வெளிவந்துள்ளது. ஹரப்பன் எழுத்தைப் பற்றி ஆய்வு செய்வார்க்கு அடிப்படை நூலாக அஃது அமைந்துள்ளது.

ஜப்பானிலுள்ள டோக்கியோ பல்கலைக் கழகத்தின் தென் ஆசிய வரலாற்றுத் துறை சோழர் காலக் கல்வெட்டுக்களில் காணப்பெறும் பெயர்களை எல்லாம் திரட்டிச் 'சோழர் காலக் கல்வெட்டுக்களில் பெயர்கள்' 27 என்ற பெயரில் மூன்று தொகுதிகளை வெளிக் கொணர்ந்துள்ளது. மேலும் சோழர்களின் தமிழ்க் கல்வெட்டுக்கள் வரிசை 28 என்ற ஒரு நூலையும் வெளியிட்டுள்ளது.

ஸ்ரீலங்காவிலுள்ள ஜாப்னு தொல்லியல் குழுவினரால் 'எபிகிராபியா தமிலிகா' 29 என்ற ஓர் இதழ் வெளியிடப்படுகிறது. இதில் ஸ்ரீலங்காவிலுள்ள தமிழ்க் கல்வெட்டுக்கள் ஆய்வுக் கண்ணோட்டத்துடன் வெளியிடப்பட்டு வருகின்றன.

தமிழகத்திலும், இந்தியாவின் மற்றப் பகுதிகளிலும் இன்னமும் பல ஆயிரம் கல்வெட்டுக்கள் படி எடுக்கப்படவேண்டிய நிலையிலும், சில ஆயிரம் கல்வெட்டுக்கள் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட வேண்டிய நிலையிலும் உள்ளன. சென்ற இரண்டு ஆண்டுகளுக்கு முன்பாகத் தமிழ்நாடு அரசு ஒரு மிகப் பெரிய கல்வெட்டை இராமநாதபுரம் மாவட்டம் பூலாங்குறிச்சியில் கண்டு பிடித்துள்ளது. இக்கல்வெட்டு இற்றைக்குச் சுமார் 1700 அல்லது 1600 ஆண்டுக்கு முற்பட்டது ஆகும். 1861-ஆம் ஆண்டில் கல்வெட்டாய்வு தொடங்கப் பெற்று இதுவரையில் சுமார் எழுபத்தையாயிரம் கல்வெட்டுக்களைப் படியெடுத்திருந்த

போதிலும் பூலாங்குறிச்சி கல்வெட்டு போன்று இன்னும் சில ஆயிரம் கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப் படாமலேயே இந்தியாவில் உள்ளன. கல்வெட்டு ஆய்வில் பெரும் ஆர்வம் கொண்டு செயல்பட்டு வரும் இந்திய அரசும், மாநில அரசுகளும் அவற்றை விரைவில் கண்டுபிடித்து ஆராய்ச்சியாளர்களின் பார்வையில் வைப்பதற்காக ஆர்வத்துடன் செயல் பட்டு வருகின்றன.

## உருவ எழுத்து

எழுத்தறிவு மக்களிடையே எவ்வாறு வளர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும் என்பதை ஆய்ந்து ஆராய்ச்சியாளர்கள் கீழ்காணுமாறு வளர்ச்சி பெற்றிருக்கலாம் என்ற முடிவுக்கு வந்துள்ளனர். 1. உருவ எழுத்துக்கள் (PICTOGRAPH) 2. கருத்தெழுத்துக்கள் (IDEOGRAPH) 3. ஒலியெழுத்துக்கள் (PHONOGRAPH) என்ற முறையில் வளர்ச்சி பெற்றிருக்கலாம் எனக் கருதுகின்றனர்.

முதன் முதலில் ஆதிமனிதன் தம் கருத்தை அடுத்தவர்க்குப் புலப்படுத்த உருவம் வரைந்து காண்பித்திருத்தல் வேண்டும் என்றும், நாளடைவில் தாம் வரைந்து காண்பிக்கும் உருவத்துக்கு மேலும் சில கருத்துக்களைப் புலப்படுத்தியிருப்பான் என்றும், பின்னர் அக்கருத்துக்களுக்குச் சில ஒலி அமைப்புக்களைத் தோற்றுவித்திருத்தல் வேண்டும் என்றும் கருதுகின்றனர். இத்தகையதொரு ஆராய்ச்சி சென்ற ஒரு நூற்றாண்டுக் காலமாகத்தான் நடைபெற்று வருகிறது. ஆனால் நம் தமிழகத்தில் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பேயே எழுத்துக்களின் வளர்ச்சியைப் பற்றி ஆய்வு நடந்திருக்கிறதென்பதும், அத்தகைய ஆய்வில் மேற்காணும் முடிவுக்கு முன்னமேயே வந்து விட்டனர் என்பதும் தெரிய வருகிறது. அதுமட்டுமல்லாமல் உருவ எழுத்துக்கள் எந்த அடிப்படையில் தோன்றின என்பதையும் புலப்படுத்தி உள்ளனர்.

யாப்பருங்கல உரையில், அதன் இறுதி சூத்திரத்

துக்கு விளக்கம் கூறுகையில், உரையாசிரியர் கீழ் வரும் பாடலை மேற்கோள் காட்டியுள்ளார்.

'உருவே உணர்வே ஒலியே தன்மையென
இருவகை யெழுத்தும் ஈரிரண்டாகும்'

எழுத்தாவது நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதை உரு, உணர்வு, ஒலி, தன்மை என்று சுட்டுகிறது. ஒவ்வொரு வகை எழுத்துக்கும் விளக்கமான பாடல் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.

'காணப்பட்ட உருவம் எல்லாம்
மாணக்காட்டும் வகைமை நாடி
வழுவில் ஓவியன் கைவினை போல
எழுதப்படுவது உருவெழுத்தாகும்.

உருவ எழுத்து எவ்வாறு எழுதப்பட்டது என்பதை மேற்காணும் பாடல் புலப்படுத்துகிறது. உணர்வு, ஒலி, தன்மை எழுத்துக்கான விளக்கப் பாடல்களும் கீழ்வருமாறு·காணப்படுகின்றன.

'கொண்டவோர் குறியால் கொண்டவதனை
உண்டென்று ணர்த்துவது உணர்வெழுத்தாகும்'.

'இசைப்படு புள்ளின் எழா அல் போலச்
செவிப்புல னாவது ஒலியெழுத்தாகும்'.

'முதற்காரணமும் துணைக் காரணமும்
துணைக் காரணத்தொடு தொடரிய வுணர்வு
அவற்றொடு புணர்ந்த வகத்தெழு வளியின்
மிடற்றுப் பிறந்திசைப்பது தன்மை யெழுத்து.'

நன்னூலுக்கு எழுதப் பெற்ற மயிலைநாதர் உரையிலும் எழுத்தின் வளர்ச்சிக்கு சில சூத்திரங்கள் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. இச்சூத்திரங்கள் கி.பி 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சுவாமிநாத தேசிகரால் எழுதப் பெற்ற இலக்கணத்துக்கு எழுதப் பெற்ற உரையின் பாயிரத்திலும் காணப்படுகின்றன. அச்சூத்திரங்கள் கீழ் வருமாறு ;

''வடிவு பெயர் தன்மையுன் முடிவு நான்கா
நடைபெறு நாவலர் நாடிய வெழுத்தே''

வடிவு, பெயர், தன்மை (துன்) முடிவு என நால்வகை எழுத்துக்கள் வழங்கின என்பதை இச்சூத்திரம் தெரிவிக்கிறது. மேலும் ஒவ்வொரு வகை எழுத்தையும் விளக்கும் வண்ணம் கீழ்வரும் சூத்திரங்கள் தரப்பட்டுள்ளன.

''கட்புலனில்லாக் கடவுளைக் காட்டும்
சட்டகம் போலச் செவிப்புல வொலியை
உட்கொளற்கிடும் உருபாம் வடிவெழுத்தே''

''வடிவு முதன் முன்மையின் வழங்கும் எழுத்திற்
படுபல பகுதிக் கிடுபெயர் பெயரே''

''தான முயற்சி தரக்கொளச் செவிப்புலன்
ஆயவொலி தன்மை-யெழுத்தாகுமே''

''உருவமுடன் மும்மையோ டொன்றீய வியல்பை
மடுவவுவன் துளி (துன்) முடிவெழுத்து.

கி.பி 8-ஆம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் தமிழ் நிகண்டு திவாகரம்,

'பெயர் எழுத்து முடிவெழுத்து வடிவெழுத்துத்
தன்மை
எழுத்தென வெழுத்தின் பெயர் இயம்பினாரே'

என்று எழுத்துக்களின் பெயர்களைக் குறிப்பிடுகிறது.

மற்றொரு நிகண்டான பிங்கலந்தை 'வடிவு, பெயர், தன்மை, முடிவு நான்கெழுத்து' என்று கூறுகிறது. இந் நிகண்டுகள் மேற்கூறப்பட்ட எழுத்தின் நான்கு கட்ட வளர்ச்சியைத்தான் தெரிவிக்கின்றன. ஆனால் அவ் வளர்ச்சி நிலையில் முன்னதைப் பின்னதாகவும், பின்னதை முன்னதாகவும் மாற்றிக் கூறுகின்றன.

எழுத்தில் ஏற்பட்ட நான்கு கட்ட வளர்ச்சியைத்

தெரிவிக்கும் சூத்திரங்களையடுத்து, யாப்பெருங்கல விருத்தியில் பின் வருமாறு காணப்படுகின்றது.

''(மகடு உ, ஆ, பிடி, குமரி, கன்னி, பிணவு, முடுவன், என்றின்ன சிலவெழுத்தும்) 1 அ க ச ட த ப ய முதலிய வாயவெழுத்தும், அ ச ல வ ர ங ய முதலிய இராசியெழுத்தும், கார்த்திகை முதலிய நாளெழுத்தும், தோப முதலிய நால்வகை எழுத்தும், சாதி முதலிய தன்மையெழுத்தும், உச்சாடன முதலிய உக்கிரவெழுத்தும், சித்திர காருடம் முதலிய முத்திறவெழுத்தும், பாகியல் முதலிய நால்வகையெழுத்தும், புத்தேள் முதலிய நாற்கதியெழுத்தும், தாது முதலிய வொளியெழுத்தும், மாகமடையம் முதலிய சங்கேதவெழுத்தும், கலி முதலிய சங்கேதவெழுத்தும், பார்ப்பான் வழக்காகிய பதின்மூன்றெழுத்தும் என்று இத்தொடக்கத்தனவும், கட்டுரையெழுத்தும், வச்சிர முதலிய வடிவெழுத்தும், மற்றும் பலவகையாற் காட்டப்பட்ட எல்லா எழுத்தும் வல்லார்வாய்க் கேட்க'' என்பதாகக் காணப்படுகிறது. இதில் பதினைந்து வகையான எழுத்துக்கள் குறிக்கப்பட்டுள்ளன.

கிறித்து அப்தத்துக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பும், சில நூற்றாண்டுகளுக்குப் பின்பும் இந்தியாவில் வழக்கில் இருந்த எழுத்துக்களைப் பற்றி சமவயங்க சுத்த என்ற சமண நூலும், லலிதவிஸ்தர என்ற பௌத்த நூலும் குறிப்பிடுகின்றன, சமண நூலில் 18 வகையான எழுத்துக்களும், பௌத்த நூலில் 64 வகையான எழுத்துக்களும் தரப்பட்டுள்ளன.

யாப்பருங்கல உரையில் காணப்பெறும் எழுத்துக்களுக்கு இன்னமும் முழுமையான விளக்கம் யாராலும் தரப்படவில்லை. தி.நா. சுப்பிரமணியம் அவர்கள் 1935-ஆம் ஆண்டில், தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடும் சித்திர எழுத்துக்கள் The Pictograph in Tamil Literature என்னும் கட்டுரையில் இவை

பற்றி எழுதியுள்ளார். 2 மேலும் தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம்-3 பகுதி-2-ல் சில சித்திர எழுத்துக்களை, மேற்காணும் சமண, பௌத்த நூல்களில் தரப்பட்டுள்ள சில எழுத்துக்களோடு ஒப்பிட்டு கீழ்க்காணுமாறு விளக்கியுள்ளார்.

''ஆயவெழுத்து'' ஆயம் என்றால் வருமானம். இலாபம் முதலான பொருள்களைத் தரும். கல்வெட்டுக்களிலும், இலக்கியங்களிலும் இச்சொல் வரிகள், நுழைவு வரி மற்றும் சுங்க வரியைக் குறிப்பதற்குக் கையாளப் பட்டுள்ளது. சமண நூலில் 'ஆயஸ' அல்லது 'ஆதம்ஸ' எழுத்து என்று ஒன்று குறிக்கப்படுகிறது. 'ஆதம்ஸ' என்ற சொல் சில இடங்களில் 'பொறித்த' என்னும் பொருளில் வழங்கப்பட்டிருக்கிறது. 'அய' என்றால் இரும்பு என்று பொருள். ஆதலால் இரும்பால் பொறிக்கப்பட்ட எழுத்து என்று பொருள் கொள்ளலாம். தமிழில் வழங்கப்பட்ட 'ஆயம்' என்ற எழுத்தும், 'ஆயஸ' எழுத்தும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாகக் காணப்படுகிறது.

''இராசியெழுத்து'' 'ராசி' என்னும் சொல் இராசி மண்டலத்தையும் குறிக்கும். இராசியையும், நட்சத்திரத்தையும் குறிக்க, வான இயலும், சோதிட இயலும் சில சில உருவங்களைக் குறிப்பது நமக்குத் தெரியும். பண்டைக் காலத்திலேயே மேற்கூறப்பட்ட இரு இயல்களும் மிகுந்த முன்னேற்ற நிலையில் வளர்ச்சி பெற்றிருந்தன, இத்தகைய வளர்ச்சி சில குறியீடுகளையும், படங்களையும் பயன்படுத்துவதற்குக் காரணமாக அமைந்திருக்கும். ஆதலால் இத்தகைய படங்களோ அல்லது குறியீடுகளோதான் 'இராசி எழுத்து' என வழங்கப் பெற்றிருக்கும்.

''நாள் எழுத்து'' நாள் என்னும் சொல் ஒரு பகல், ஒரு இரவு சேர்ந்த நாளைக் குறிக்கும், முற்காலத்தில் இச்சொல் நட்சத்திரத்தைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்

பட்டது. நட்சத்திரத்தைக் குறித்த நாள் என்னும் சொல்லையே மக்கள் ஒரு பகல், ஒரு இரவைக் குறிக்கப் பயன்படுத்தியிருப்பர் எனத் தெரிகிறது. தமிழகத்தில் வழங்கப் பெறும் ''நாள் என்ன செய்யும் கோள் என்ன செய்யும், என்ற பழமொழி மூலம் இதனை உணரலாம் - ஆதலால் நட்சத்திரம் போன்ற உருவம் எழுத்தைக் குறிக்கப் பயன்பட்டதையே நாள் எழுத்து என்று வழங்கியிருக்கின்றனர். 3

மேற்கூறப்பெற்ற எழுத்துக்கள் எவ்வாறு வரையப் பெற்றிருக்கலாம் என்பதற்குச் சான்றாக மொகஞ்சதாரோவிலும், ஹரப்பாவிலும் கண்டெடுக்கப்பட்டுள்ள உருவ எழுத்துக்களைக் குறிப்பிடலாம். அத்தகைய உருவ எழுத்துக்கள் குஜராத் மாநிலத்திலுள்ள லோத்தல், துவாரகா போன்ற இடங்களிலிருந்தும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

ஓவியத்தில் காணப் பெறும் உருவ எழுத்து

தமிழகத்தில் முதன் முதலாக இத்தகைய உருவ எழுத்துக்கள் தென்னார்க்காடு மாவட்டத்தில், திருக்கோயிலூர் வட்டம், கீழ்வாலை என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள பண்டைய ஓவியத்தில் காணப்படுகின்றன. இதில் ஐந்து எழுத்துக்கள் உள்ளன. முதல் எழுத்து தென்னங்கீற்று போன்றும், இரண்டாம் எழுத்து மத்தளம் போன்றும், மூன்றாம் எழுத்து சீப்பு போன்றும், நான்காம் எழுத்து மத்தளம் போன்றும், ஐந்தாம் எழுத்து நான்கு குறுக்குக் கால்களையுடைய சக்கரம் போன்றும் எழுதப்பட்டுள்ளன. இவ்வெழுத்துக்கள், இங்குள்ள ஓவியங்களை வரைந்தவனின் பெயராக இருக்கலாம் என்றும், கி.மு 500-லிருந்து கி.மு 1000 ஆண்டுகட்கு உட்பட்டதாகவும் இருக்கலாம் என்றும் பி.எல். சாமி குறிப்பிட்டுள்

### பானை ஓடுகளில் காணப் பெறும் உருவ எழுத்துக்கள்

தமிழகத்தில் எந்தப் பகுதியில் அகழ்வாய்வு நடத்தப் பெறறாலும் அங்கெல்லாம் கறுப்பு, சிவப்பு பானைகளோடு சில உருவங்கள் வரையப் பெற்ற பானை ஓடுகள் பெரும்பாலும் பெருங்கற்காலப் பொருட்களோடேயே கிடைத்து வருகின்றன. ஆதலால் பெருங்கற்கால மக்கள் இவற்றை எழுதியிருக்கின்றனர் என்று உறுதியாகக் கூறலாம். இவ்வுருவங்களும், உருவ எழுத்தின் தொடர்ச்சியே என்று கருதலாம். இக்காலக் கட்டத்தில் இவ்வெழுத்துக்கள் ஒலி வடிவம் பெற்று வழங்கப் பட்டிருக்கலாம். ஆனால் அதை நாம் அறிய முடியவில்லை. பானை ஓடுகளில் கிடைக்கும் இவ்வுருவங்களை மொஹஞ்சதாரோ, ஹரப்பா உருவ எழுத்தோடு ஒப்பிட்டு ஒரு ஆய்வை பி.பி. லால் மேற்கொண்டார். அவ்வாய்வின் மூலம் பானை ஓடுகளில் காணப்பெறும் உருவங்களில் 80 சதவிகித உருவங்கள் மொகஞ்சதாரோ, ஹரப்பா கால உருவ எழுத்துக்கள் போன்றே காணப்படுகின்றன என்று தெரிவித்துள்ளார். 5 சென்னைப் பல்கலைக் கழகத் தொல்பொருள் ஆய்வுத்துறை சேகரித்து வைத்திருந்த பானை ஓடு ஒன்றின் மீது இருந்த உருவத்தைப் பார்த்துவிட்டு அது ஹரப்பன் கால உருவம் மாதிரியே இருப்பது அறிந்து பெரிதும் வியப்புத் தெரிவித்தார் அஸ்கோ பர்போலோ என்னும் பின்லாந்து நாட்டு அறிஞர்.

### இலங்கை முத்திரை உருவம்

சில ஆண்டுகளுக்கு முன்பு இலங்கையின் வடக்குப் பகுதியான யாழ்ப்பாணத்துக்கு அருகில் உள்ள அனைக்கோடை என்ற இடத்தில் நிகழ்த்தப் பெற்ற

அகழ்வாய்வில் பெருங்கற்காலச் சின்னத்தில் ஒரு செப்பு முத்திரை கண்டெடுக்கப்பட்டதாகவும், அதில் ஒரு வரியில் உருவ எழுத்துக்களும், மற்றொரு வரியில் தமிழ் பிராமி எழுத்துக்களும் பொறிக்கப் பெற்றிருப் பதாகவும், மேற்கூறப்பட்ட இரு வரிகளுமே ஒரே பொருளைக் குறிப்பனவாக இருக்கலாம் என்றும் இந்திர பாலா என்னும் வரலாற்றறிஞர் செய்தி வெளி யிட்டிருந்தார். அதில் காணப்பெற்ற உருவ எழுத்துக் கள் தமிழ் நாட்டில் பெருங்கற்காலப் பானை ஓடு களில் பொறிக்கப் பெற்றிருந்த உருவங்கள் போன்றே காணப்பட்டன. ஆதலால் தமிழ் நாட்டு பானை ஓடு களில் பொறிக்கப்பட்டிருக்கும் உருவங்களும் ஏதோ ஒரு பொருளை உணர்த்தும் உருவ எழுத்தாகத்தான் இருக்க வேண்டும் என்று கருதலாம். அது மட்டுமல் லாமல் கிறித்து அப்தத்தின் தொடக்கக் காலத்தில் வாழ்ந்த மக்கள் உருவ எழுத்தையும், தன்மை எழுத்தை யும் (பிராமி) அறிந்தவர்களாக இருந்திருக்கிறார்கள். அதன் காரணமாகத்தான் பின்னாளிலும் உருவ எழுத் தைப் பற்றிய செய்தியை இலக்கிய ஆசிரியர்கள் எடுத் தாண்டிருக்கிறார்கள் என்று நம்பலாம்.

### பண்டைத் தமிழ் எழுத்துக்களோடு காணப் பெறும் உருவங்கள்

தமிழ் நாட்டில் சில இடங்களில் பண்டைத் தமிழ் எழுத்துக் (தமிழி எழுத்து) கல்வெட்டுக்களோடு சில உருவங்களும் வரையப் பெற்றுக் காணப்படுகின் றன. 6 இதே போன்று இலங்கையில் காணப்பெறும் பண்டையக் கல்வெட்டுக்கள் சிலவற்றில் அவற்றின் முன்னோ அல்லது பின்னோ அல்லது மேலேயோ, கீழேயோ சில உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அவ்வாறு காணப்பெறும் அவ்வுருவங்களையெல்

லாம் பட்டியல் இட்டுத் தொகுத்துத் தந்துள்ளனர். மேலும் அவ்வுருவங்கள் எந்த கல்வெட்டின் அருகில் காணப்படுகின்றனவோ அந்தக் கல்வெட்டுக்கும் அங்கு காணப்பெறும் உருவத்துக்கும் யாதாவதொரு தொடர்பு இருத்தல் வேண்டும் என்றும் எழுதியுள் ளனர். அவற்றில் 'ஸ்வஸ்திகா' உருவம் 'திஸா' என்னும் ஒலியைக் குறிப்பதாக உள்ளது என்று கூறப் பட்டுள்ளது. அத்தோடு ஹரப்பன் கால உருவ எழுத் துக்களைப் புரிந்து கொள்வதற்கு இலங்கைக் கல்வெட் டுக்களும், அக்கல்வெட்டுக்களோடு காணப்பெறும் உருவங்களும் உதவக்கூடும் என்று நாம் எதிர்பார்க்க லாம் என்ற கருத்தும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஆதலால் தமிழகத்துப் பண்டையக் கல்வெட்டுக் களோடு காணப்பெறும் உருவங்களுக்கும், அந்தக் கல் வெட்டு வாசகங்களுக்கும் தொடர்பு கட்டாயம் இருந் தாதல் வேண்டும். இது பற்றி சில ஆண்டுகளுக்கு முன்பாகத் 'தமிழகக் கல்வெட்டுக்களோடு காணப் படும் குறியீடுகள்'' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை வெளிவந்துள்ளது. உருவங்கள் காணப் பெறும் கல் வெட்டுக்கள், வணிகர்கள் சமணத் துறவிகளுக்கு அளித்த கொடையைப் பற்றி தெரிவிக்கின்றன. தமிழ் இலக்கியங்கள், பலவகைப் பொருட்களை விற்கும் வணிகர்கள், தங்களுக்கென வெவ்வேறு உருவம் பொறித்த கொடியை நாட்டிக் கொண்டு வாணிபம் செய்வர் என்று கூறுவதால்; அவ்வணிகப் பொருட் களைக் குறிக்கும் உருவங்களாக இருக்கலாம் என்று கூறப்பட்டுள்ளது. அத்தோடு வேறு சில கல்வெட்டுக் களோடு காணப் பெறும் உருவங்கள் அவை காணப் பெறும் கல்வெட்டு வாசகங்களைக் கொண்டு பார்க் கையில் அவர்கள் செய்த தொழிலைக் குறிப்பதாகவும் இருக்கலாம் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

முடிவுரை

மேற்கூறப் பெற்றவைகளிலிருந்து தமிழர்கள் உருவ எழுத்து பற்றிய முழுமையான அறிவை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகவே பெற்றிருந்தார்கள் என்பதையும், தமிழகத்திலும் உருவ எழுத்துக்கள் எழுதப் பெற்றுள்ளன என்பதையும், இவ்வுருவ எழுத்துக்களுக்கும் மொஹஞ்சதாரோ, ஹரப்பன் எழுத்துக்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதையும், தமிழகத்திலும், இலங்கையிலும் பண்டையக் கல்வெட்டுக்களோடு காணப்பெறும் உருவங்களையெல்லாம் தொகுத்து ஆய்ந்தால் ஹரப்பன் உருவ எழுத்துக்களைப் படிப்பதற்கு அது ஒரு திறவுகோலாக அமையும் என்பதையும் நாம் உணரலாம்.

# எழுத்துக் கலை

மனிதன் தனது கருத்துக்களைச் சித்திரம் மூலம் என்று வரைந்து வெளிப்படுத்தத் தொடங்கினானோ அன்றே எழுத்துக் கலை தோற்றம் பெற்று விட்டது எனலாம். பொழுது புலர்ந்ததும் கீழ்த்திசையில் வட்ட வடிவமான ஒரு தீப்பிழம்பைக் கண்ணுற்றான். அதை மனதில் கொண்டு மற்றோர்க்கு அதனைத் தெரிவிக்க எண்ணி வட்டம் ஒன்றைத் தீட்டி தம் எண்ணத்தை வெள படுத்தியுள்ளான். ஆற்றைப் பற்றி மற்றோர்க்குப் பு ப்படுத்த விரும்பியவன் வளைவு ஊடே நிரம்பிய் கோடுகளைத் தீட்டிக் காட்டியிருக்கிறான். மலையைக் காண்பிக்க விரும்பியவன் அரை வட்டங்கள் வரிசையாக வரைந்து அவற்றின் மேலேயே ஒன்றை ஒன்று இணைத்துக் காண்பித்திருக்கிறான். இவ்வாறு தம் மனதில் எண்ணியதைப் படத்தின் மூலம் மற்றவர்க்குப் புலப்படுத்தக் கையாண்ட கருவிதான் எழுத்துக்குத் தோற்றமாக அமைந்தது. இந்நிலை, எண்ணத்தை ஒலி மூலம் பிறர்க்கு உணர்த்த முடியாத காலக் கட்டத்தில் இருந்ததாகும். தம் எண்ணத்தை ஒலி மூலம் உணர்த்தும் நிலை ஏற்பட்ட பிறகும் எழுத்துக் கலை மறையாமல் தொடர்ந்து வந்ததற்குக் காரணம், தம் கண்ணெதிரே காணாத ஒருவருக்கும், நீண்ட தொலைவில் வாழ்கின்ற ஒருவருக்கும் தம் எண்ணத்தைத் தெரிவிக்கப் படத்தை, பின்னர் நாளடைவில் அவ்வப்போது வளர்ச்சி பெற்ற எழுத்தைப் பயன்படுத்தியதாலேயாகும்.

எழுத்துக் கலை எவ்வாறு வளர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும் என்பதை விளக்க வந்த ஏ.சி. ஹாடன் என்பார் நான்கு பெரும் மாற்றத்தைத் தெரிவிக்கிறார். அவையாவன. 1. சித்திர எழுத்து, 2. கருத்தெழுத்து, 3. ஒலி எழுத்து, 4. வார்த்தை எழுத்து.

சித்திர எழுத்தாக இருந்த காலக் கட்டத்தில் ஒவ்வொரு பகுதியிலும் தனிப்பட்ட முறையில் இவ்வெழுத்து வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்றும்; இவைகளை விளக்கிக் கூற அவ்வப்பகுதி மக்களாலேயேதான் முடிந்திருக்கும் என்றும் கருதுகிறார்.

அடுத்த கட்டமான கருத்தெழுத்தை விளக்குகையில் பல மேற்கோள்களைக் கோடிட்டுக் காட்டுகிறார். ஆமையின் உருவம் நிலத்தை மட்டும் குறிப்பதாக இருந்தது. இக்காலக் கட்டத்தில் ஒரு சீனக் குழுவின் அடையாளமாகவும் ஆகியிருக்கும் என்கிறார்.

சித்திரங்களைப் பார்த்துப் புரிந்து கொண்ட மக்கள் ஒவ்வொரு படத்துக்கும் வரையறுக்கப்பட்ட ஒரு ஒலியைப் பயன்படுத்தி கருத்துப் பரிமாற்றம் செய்ய முற்பட்ட நிலைதான் ஒலி எழுத்து உருவான நிலையாகும். வட்ட வடிவத்தைப் பார்த்துச் சூரியன் எனப் புரிந்து கொண்ட மனிதன், அது வெப்பம் தருவது, பகல் பொழுது அதனால்தான் ஏற்படுகிறது என்று கருத்தெழுத்து காலத்தில் கருதி இருப்பான். அவனே நாளடைவில் 'சு' என்ற ஒலியை அதற்கு வரையறுத்த காலத்தில் ஒலியெழுத்து உருவாகியிருக்க முடியும். இந்தக் கருத்தெழுத்து மற்றும் ஒலியெழுத்து வகையைச் சார்ந்ததுதான் நமது ஹரப்பன் நாகரிக எழுத்து என்று வல்லுநர்கள் கருதுகிறார்கள்.

மேலே கூறியவாறுதான் எழுத்து வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்று உலக அறிஞர்கள் அனைவரும் தற்போது கருதுகிறார்கள். ஆனால் இதை ஆயிரம்

ஆண்டுகட்கு முன்னமேயே தமிழர்கள் உணர்ந்திருக்கி றார்கள் என்பதை யாப்பருங்கலத்திற்கு உரை எழுதிய ஆசிரியர் தரும் மேற்கோளிலிருந்து உணர முடிகிறது.

இருபதாம் நூற்றாண்டில், அறிவு பூர்வ மான முறையில் ஆய்ந்து அளித்திட்ட முடிவுகளை ஆயிரம் ஆண்டுகட்கு முன்பாகவே தமிழர்கள் அறிந்து கொண்டிருக்கிறார்கள் என்று அறியும் போது அவர் களின் அறிவுக் கூர்மையை எண்ணி வியக்காமலிருக்க முடியாது. எழுத்தின் ஒவ்வொரு கட்ட வளர்ச்சிக்கும் அவர்கள் அளித்திருக்கின்ற பெயர் இன்றைய அறிவு பூர்வமான உருவெழுத்து, உணர்வெழுத்து, ஒலி யெழுத்து, தன்மையெழுத்து என்றே நான்கு வகை யாகக் கூறப்பட்டுள்ளது.

தாம் கண்ட உருவத்தைத் தெளிவாக மற்றவர் களுக்குத் தெரியப்படுத்துவதற்காக உருவம் வரைந்து காட்டுவது உருவெழுத்து எனப்படும். உதாரணமாக மாடு என்பதற்கு மாட்டின் உருவத்தை வரைந்து காட்டுவதாகும்.

பறவைகள் பறப்பதை அவை எழுப்பும் ஒலியால் உணர்வதைப் போன்று ஒலியால் உணர வைப்பதற்கு உணர்வெழுத்து எனப்படும். ஒலியெழுத்தாவது உரு வெழுத்து, உணர்வெழுத்து ஆகியவற்றின் வளர்ச்சி யாகும். அதற்கு அடுத்த கட்ட வளர்ச்சி தன்மை எழுத்து. இந்த எழுத்துக்கு இன்ன ஒலி என்று வரை யறுத்து எழுதப்படுவதற்குத் தன்மை எழுத்து என்று பெயர். அதாவது உணர்வும், ஒலியும் சேர்ந்து செயல் படுவது தன்மை எழுத்து. வெறும் ஒலியோடில்லாது உணர்வு பூர்வமான ஒலியாக ஒலிக்கும் போதுதான் எழுத்தின் முழுப் பொருளையும் வெளிப்படுத்துவ தாக அமைகிறது. மாடு என்று எழுதப்பட்டுள்ள எழுத் துக்களை ஒலிக்கின்ற போதே அவை மாடு என்ற உருவத்தை மனதால் உண்ரச் செய்கிறது. ஆதலால்

இது தன்மையெழுத்து என்று வழங்கப் பெற்றது.

இத்தகைய வளர்ச்சி பெற்ற பிறகுதான் இலக்கியங்களும், இலக்கணங்களும் எழுதப்படலாயின. தமிழ் மொழியின் மிகப் பழைய இலக்கண நூலான தொல்காப்பியம் எழுத்தைப் பற்றிக் கூறுகையில்,

''எழுத்து எனப்படுப,
அகரம் முதல்
னகர இறுவாய் முப்பஃது என்ப''

என்று கூறுகிறார். தொல்காப்பியர் காலத்தில் எழுத்துக்கள் மிகவும் வளர்ச்சி பெற்ற நிலையில், வரையறுக்கப்பட்ட நிலையில், இலக்கணம் வகுக்கப்பட்ட நிலையில் காணப்பட்டவையாகும்.

நன்னூலில் ''தொல்லை வடிவின எல்லா எழுத்தும்'' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வாறெனில் நன்னூல் காலத்துக்கு முன்பேயே இவ்வரையறுக்கப் பட்ட நிலை எழுத்து வளர்ச்சியில் ஏற்பட்டு விட்டது என்று உணரலாம்.

வரையறுக்கப்பட்ட தன்மை ஏற்பட்டதும் இவ்வெழுத்துக்களை இரு வகையாகப் பிரிக்கின்றனர் மொழி அறிஞர்கள். அவை 1. அகர வகை எழுத்துக்கள், 2. உயிர்மெய் வகை எழுத்துக்கள் என்ற இரு வகையாகும். அகர வகை எழுத்துக்கள் என்பது மெய் எழுத்துக்குப் பக்கத்தில் உயிர் எழுத்தைத் தனியாக எழுதுவது. இவ்வெழுத்து வகையை ஆங்கில எழுத்து சாரும். ஆங்கில எழுத்தில் உயிர் மெய்யான 'க' என்பதைக் காட்டுவதற்கு கே + ஏ என்று எழுதப்படுகிறது. இதில் கே என்ற மெய்யும், ஏ என்ற உயிரும் உள்ளன. உயிர்மெய் வகை எழுத்துக்கள் என்பது உயிர்மெய் எழுத்தை மெய் எழுத்து, உயிர் எழுத்து என்று தனித் தனியாக எழுதாமல் உயிர் ஏறிய மெய்யாக, ஒரே எழுத்தாக எழுதுவது. தமிழ் எழுத்து உயிர்மெய் வகை எழுத்தைச் சேர்ந்தது. 'க' என்று எழுதுவதற்கு க் + அ

என்று எழுதாமல் உயிர் ஏறிய மெய்யாக 'க' என்று எழுதுவது ஆகும். தமிழ் நாட்டில் காணப்பெறும் குகைக் கல்வெட்டுக்களில் மிகப் பழமையாக உள்ள வற்றில் அகர வகை எழுத்துக்களைக் காண முடிகிறது. நாளாக நாளாக உயிர்மெய் வகை எழுத்துக்கள் இடம் பெற்றுள்ளன. இதைக் கருத்தில் கொண்டு பார்க்கை யில் எழுத்து வளர்ச்சியில் தன்மை எழுத்துக்கு அடுத்த கட்ட வளர்ச்சியாக அகர வகை எழுத்துக்களும், பின்னர் உயிர்மெய் வகை எழுத்துக்களும் வளர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும் என்றும் கருதலாம்.

இந்தியாவைப் பொறுத்தமட்டில் எழுத்துக் கலை இற்றைக்கு 4500 ஆண்டுகட்கு முன்பிருந்து வளரத் தொடங்கி விட்டது எனலாம். மொஹஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகக் காலத்தைச் சார்ந்த முத்திரைகளில் காணப்பெறும் சித்திரங்கள் எழுத்துக் கலையின் தொடக்கத்தைக் காட்டுவனவாக உள்ளன. முன்னரே குறிப்பிட்டது போன்ற இச்சித்திரங்கள் கருத்தெழுத் தையும், ஒலியெழுத்தையும் குறிப்பனவாக இருக்க லாம் என்று கருதப்படுகிறது. இத்தகைய சித்திரங்கள் பொறித்த முத்திரைகள் இந்தியாவில் பரவலாகக் கிடைத்துள்ளன. தென் பகுதியில், குஜராத்திலுள்ள லோத்தலில் இவை கிடைத்திருக்கின்றன. தமிழகத்தில், தென்னாற்காடு மாவட்டம் திருக்கோயிலூருக்கருகில் உள்ள கீழ்வாலையில் காணப்படும் வரலாற்றுக் காலத் துக்கு முந்தைய ஓவியங்களில் ஹரப்பன் கால முத் திரைகளில் காணப்படுவன போன்ற சில சித்திரங்கள் தீட்டப்பட்டுள்ளன. ஆதலால் இச்சித்திர எழுத்து ஒரு காலத்தில் இந்தியாவின் அனைத்துப் பகுதிகளிலும் பழக்கத்தில் இருந்திருக்க வேண்டும் என்று கருதலாம். மேலும் தமிழ் நாட்டில் இது பழக்கத்தில் இருந்தது என்பதற்கு நமது பழங்கால இலக்கியங்கள் எழுத்தைப் பற்றி தெரிவிக்கையில் 'சித்திரம்' என்று குறிப்பிடுவதி

லிருந்தே தெரிந்து கொள்ளலாம். தமிழகத்தில் கிடைத்துள்ள ஒரு பானை ஓட்டில் காணப்பெறும் சித்திரம் ஹரப்பன் கால முத்திரையில் உள்ள சித்திரத்தைப் போன்று காணப்படுகிறது என்று பினிஷ் நாட்டறிஞர் கூறியுள்ளதிலிருந்தும் அறிந்து கொள்ளலாம்.

ஹரப்பன் காலச் சித்திரங்களும், தென்னிந்தியாவில் கிடைக்கப் பெறும் பெருங்கற்காலப் பானை ஓடுகளில் காணப்பெறும் குறியீடுகளும் (Graffiti) ஒரே மாதிரியாக உள்ளன என்று தொல்பொருள் ஆய்வுத்துறை டைரக்டர் ஜெனரலாக இருந்த பி.பி. லால் அவர்கள் கூறியிருக்கின்ற கூற்றும் இங்கு கொள்ளத்தக்கது. இக்குறியீடுகள் ஹரப்பன் காலச் சித்திரங்களின் வளர்ச்சியாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

இதற்கு அடுத்து இந்தியாவில் காணப்பெறும் எழுத்துக்கள் கரோஷ்டி, பிராமி, தமிழ் ஆகிய எழுத்துக்களாகும். இவை இற்றைக்குச் சற்றேறக்குறைய 2400 ஆண்டுகட்கு முன்பிருந்து பழக்கத்திலிருந்திருக்கின்றன. மொத்தம் 18 வகை எழுத்துக்கள், கிறித்து சகாப்தத்திற்கு முன்பாக வழங்கி வந்தன என்பதை சமண நூல்கள் தெரிவிக்கின்றன. இப்பதினெட்டு வகை எழுத்துக்களில் மேற்கூறப்பெற்ற மூன்று வகை எழுத்துக்களும் சேர்த்துக் குறிக்கப்படுகின்றன. தமிழ் எழுத்து 'தாமிலி' என்று குறிக்கப்பட்டுள்ளது. கரோஷ்டி என்பது 'கழுதையின் காது' என்று பொருள். கழுதையின் காது போன்ற வடிவில் இவ்வெழுத்துக்கள் இருந்ததால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். இவ்வெழுத்து இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் மட்டும்தான் வழங்கி வந்திருக்கிறது. மத்திய, கிழக்கு ஆசிய மக்களின் தொடர்பால் இந்தியாவில் இவ்

வெழுத்து உருவாகி வழங்கி வந்திருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது.

மேலே கூறப்பட்டுள்ள பதினெட்டு வகை எழுத்துக்களில் யவனாலி அல்லது யவனாவிய என்று ஒரு எழுத்து குறிக்கப்படுகிறது. இது கிரேக்க எழுத்தைக் குறிப்பதாக கொள்ளலாம். மௌரியர் பேரரசு காலத்தில் கிரேக்க மன்னர்கள் இந்தியாவுக்கு வந்ததும், அப்பொழுது அவர்கள் தங்கள் காசுகளில் கிரேக்க எழுத்தையும், பிராமி எழுத்தையும் பொறித்து வெளியிட்டதும் வரலாற்று உண்மை. ஆதலால் அவர்களது எழுத்தைத்தான் இலக்கியங்கள் யவனாலி என்று குறிக்கிறது என்று உறுதியாகக் கூறலாம். தாமிலி என்று குறிக்கப்படும் எழுத்து தமிழ் நாட்டில் வழங்கி வந்த தமிழ் எழுத்தைக் குறிக்கிறது என்று கருதப்படுகிறது. அவ்வாறெனில் மற்ற எழுத்துக்களும் இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் வழக்கத்திலிருந்த எழுத்துக்களைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

இந்தியாவின் எல்லா பகுதியிலுமே, தமிழ்நாடு உட்பட ஒரே எழுத்துதான் வழங்கி வந்திருக்கிறது. அதை ஒவ்வொரு பகுதி மக்களும் தனித்தனி பெயரிட்டு அழைத்திருக்கின்றனர். மௌரியப் பேரரசு நிலவிய பகுதியில் அதற்கு பிராமி என்றும், தமிழ் நாட்டில் தமிழ் எழுத்தைத் ‘தாமிலி’ என பிராகிருத மொழியால் கூறியிருக்கிறார்கள். பிற பகுதிகளில் வேறு பெயர்களினாலும் அழைக்கப்பட்டிருக்கிறது. இக்காலக் கட்டத்தைச் சார்ந்ததாகக் காணப்பெறும் இந்தியாவின் அனைத்துப் பகுதி எழுத்தும் ஒரே வடிவில்தான் காணப்படுகின்றன. ஒரு சில எழுத்துக்களில் அவ்வப்பகுதிகளில் வழங்கி வந்த மொழிகளுக்கேற்ப சில மாறுபட்ட எழுத்து வடிவங்களைக் காண முடிகிறது.

கி.பி. 2-3-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ‘லலித

விஸ்தர' என்ற புத்தமத நூல் அறுபத்து நான்கு வகை யான எழுத்துக்களைக் குறிப்பிடுகிறது. இந்தியாவின் சிறு சிறு பகுதிகளில் எல்லாம் பழக்கத்திலிருந்த அனைத்து வகை எழுத்துக்களையும் குறிப்பிடுவதாகத் தெரிகிறது. அங்கலிபி, வங்கலிபி, மகதலிபி என்று ஒவ்வொரு சிறு சிறு பகுதிகளிலும் வழங்கிய எழுத் தைத் தெரிவிக்கிறது. இதில் தேவலிபி, நாகலிபி, யக்ஷ லிபி, கந்தர்வலிபி, கின்னரலிபி, அரைலிபி, கருட லிபி, மிருகசக்ரலிபி ஆகிய எழுத்துக்களும் காணப் படுகின்றன. தேவர்கள் எழுத்து, நாகர்கள் எழுத்து, யக்ஷ எழுத்து, அசுரர் எழுத்து என்றும் இருந்ததாகக் குறிப்பிடுகிறது. இவைகளின் விளக்கம் சரியாக விளங்கவில்லை. இவ்வெழுத்துக்கள் பட்டியலில் பிராமிலிபி, கரோஷ்டலிபி, த்ராவிடலிபி, தக்ஷிண லிபி, கனாரிலிபி போன்றவைகளும் உள்ளன. த்ரா விடலிபி, தக்ஷிணலிபி என இரு எழுத்துக்கள் காணப் படுகின்றன. ஆனால் தமிழ் எழுத்து என்று தனியாகக் குறிக்கப்படவில்லை. ஆதலால் த்ராவிட எழுத்து என் பதைத் தமிழ் எழுத்து, என்று கொள்ளலாம் என்ற எண்ணம் ஏற்படுகிறது. தமிழ் நாட்டை வட நூலார் 'த்ரமிள தேசம்' என்றும் 'திராவிட தேசம்' என்றும் குறிப்பிட்டு வழங்கியிருப்பதால் தமிழ் எழுத்தைப் புத்த மத நூலும் திராவிட லிபி என்று குறிப்பிட்டுள்ளது என்று கொள்ளலாம். இந்நூல் சமஸ்கிருதத்தில் எழுதப் பட்டுள்ளதாலும் இது உறுதியாகிறது.

தமிழ் நாட்டைப் பொறுத்தமட்டில் தமிழ் எழுத்து மிகப் பழங்காலம் தொட்டு அதாவது கி.மு. 4-3-ஆம் நூற்றாண்டிலிருந்து பழக்கத்திலிருந்திருக்கிறது. பாண் டிச்சேரிக்கருகில் உள்ள அரிக்கமேட்டில் கிடைத்திருக் கின்ற தமிழ் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ள பானை ஓடுகள் ரோமானியர் காலத்துக்கும் முந்தை யது என்பது தற்பொழுது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. எகிப்து நாட்டுக் கடற்கரையில் உள்ள துறைமுகம்

ஒன்றில் தமிழ் எழுத்துப் பொறிக்கப்பெற்ற பானை ஓடுகள் அண்மையில் கண்டெடுக்கப்பட்டுள்ளது. இவற்றில் 'சாத்தன்' 'கண்ணன்' என்று எழுதப்பட்டிருக்கின்றன. ஸ்ரீலங்காவில் உள்ள ஜாப்னா பகுதியில், அனைக்கோடை என்னுமிடத்தில், ஒரு முத்திரையில் ஹரப்பன் காலச் சித்திர எழுத்து ஒரு வரியும், தமிழ் எழுத்து ஒரு வரியும் எழுதப்பட்டுள்ளது. அவ்வாறெனில் இத்தமிழ் எழுத்து தொடர்ந்து தமிழகத்திலும், ஜாப்னா பகுதியிலும் வழங்கி வந்திருக்கிறது என்பதை உணரலாம். இத்தமிழ் எழுத்தை நம் வசதிக்காக பண்டைத் தமிழ் எழுத்து (Archaic Tamil Script) என்று கூறலாம். இந்த எழுத்தில் பல கல்வெட்டுக்களை தமிழ் நாட்டில் பரவலாக மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம், ஈரோடு, சேலம், தென்னார்க்காடு, செங்கல்பட்டு ஆகிய மர்வட்ட்ங்களில் காண முடிகிறது. கி.மு. 4-3-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 2-3-ஆம் நூற்றாண்டு வரை இந்த எழுத்தில்தான் தமிழ் நாட்டில் எழுதி வந்திருக்கின்றனர். தொல்காப்பியம் போன்ற பண்டைய இலக்கண, இலக்கியங்கள் இவ்வெழுத்தில்தான் எழுதப் பெற்றிருத்தல் வேண்டும். இவ்வெழுத்து நேர்க் கோடுகளையும், படுக்கைக் கோடுகளையும் கொண்டு மிக எளிய வடிவில் எழுதப் பட்டுள்ளன.

கி.பி. 3-4-ஆம் நூற்றாண்டளவில் இப்பண்டைத் தமிழ் எழுத்தின் வடிவம் மாற்றம் பெறத் தொடங்குகிறது. கல்லில் உளியாலும், துகிரிகை கொண்டு வண்ணத்திலும் எழுதி வந்த தமிழர்கள் ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதத் தொடங்கிய காரணத்தால் இவ்வடிவ மாற்றம் தொடங்கி இருக்கலாம் என்று கருதலாம். எழுத்தாணியால் ஓலையில் நேர்க் கோடுகளையும், பக்கக் கோடுகளையும் எழுதினால் ஓலை கிழிந்து விடக்கூடிய நிலை ஏறபடும். அதைத் தவிர்க்கும் நோக்குடன் நேர்க் கோடுகளிலும், பக்கக் கோடு

களிலும் சிறு வளைவுகளைச் சேர்த்து எழுதத் தொடங்கியிருக்கின்றனர். இம்மாற்றத்தை அரச்சலூர், ஈரெட்டிமலை, பூலாங்குறிச்சி கல்வெட்டுக்களில் நன்கு காண முடிகிறது. பின்னர் நாளடைவில் மேலும் மேலும் வளைவுகளைப் பெற்று 'வட்டெழுத்து' என்று அழைக்கின்ற அளவுக்கு மாற்றம் பெற்று விட்டது. முழு வட்ட வடிவம் பெற்ற தமிழ் எழுத்துக்களை கி.பி. 8-9-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு காண முடிகிறது. வேள்விக்குடி, சீவரமங்கலம், சின்னமனூர் செப்பேடுகளில் இவ்வெழுத்தைப் பார்க்கலாம். இவ்வெழுத்து இவ்வாறு வளைவு பெற்றதால் சில எழுத்துக்களை வேறுபடுத்திப் புரிந்து கொள்ள முடியாதபடி எழுதப்பட்டிருக்கிறது. ப, ம, ய, வ ஆகிய எழுத்துக்கள் மிகச் சிறு வேறுபாட்டோடு எழுதப் பட்டு காணப்பெறும். அதே போன்று ண, த, ற போன்ற எழுத்துக்களிலும் அதிக வேறுபாடு காண முடியாது. கி.பி. 17-18-ஆம் நூற்றாண்டளவில் எழுதப்பட்டிருக்கும் இவ்வெழுத்தைக் காணில் படிப்பதென்பது மிகவும் கடினம். காரணம் அனைத்து எழுத்துக்களும் வடிவில் ஒன்று போன்றே தோன்றும். இவ்வெழுத்து மிகப் பிற்காலம்வரை தமிழகத்தின் தென்கோடிப் பகுதியிலும், கேரளப் பகுதியிலும் வழங்கி வந்திருந்தாலும் தமிழகத்தின் மற்ற பகுதிகளில் இவ்வெழுத்து புரியாத எழுத்தாக தமிழக மக்களுக்கு கி.பி. 11-12-ஆம் நூற்றாண்டிலிருந்து ஆகியிருக்கிறது. அதற்குக் காரணம் அப்பகுதிகளில் மற்றொரு வகை எழுத்து உருவாகத் தொடங்கியதேயாகும்.

இந்த மற்றொரு வகை எழுத்தைத்தான் நாம் இன்று தமிழ் எழுத்து என்று அழைக்கின்றோம். இவ்வெழுத்தும் கி.பி. 3-ஆம் நூற்றாண்டளவிலேயே வளரத் தொடங்கினாலும், கி.பி. 6-7-ஆம் நூற்றாண்டில் தான் அதிக அளவில் பயன்படுத்தத் தொடங்கப்பட்டிருக்கிறது. இந்த எழுத்து உருவாவதற்கு முழுமுதற்

காரணம் ஸம்ஸ்கிருத மொழியும், கிரந்த எழுத்தும், அவற்றைக் கையாண்ட பல்லவர்களுமே ஆகும். சிம்ம வர்மனின் பள்ளங்கோயில் செப்பேட்டிலும், மகேந் திரவர்மன் காலத்திய வல்லம் குடைவரைக் கோயிற் கல்வெட்டிலும் இவ்வெழுத்தை முதன் முதலில் காண் கிறோம். பின்னர் பாண்டி நாட்டில் மலையடிக்குறிச் சியில் உள்ள சேந்தனின் கல்வெட்டில் இவ்வெழுத் தைக் காண முடிகிறது. பல்லவர்கள் தம் செப்புப் பட்டயங்களிலும், குடைவரை மற்றும் கட்டடக் கோயில்களிலும் ஸம்ஸ்கிருத மொழியை எழுத கிரந்த எழுத்தைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். அதை ஒரு பெருமையாகக் கருதிய பாண்டிய மன்னர்களும் தங்கள் செப்புப் பட்டயங்களிலும், சில குடைவரை மற்றும் தனிப்பட்ட கல்வெட்டுக்களிலும் ஸம்ஸ்கிருத மொழியையும், கிரந்த எழுத்தையும் பயன்படுத்தி யிருக்கின்றனர். உதாரணங்களாக வேள்விக்குடிச் செப்பேடு, ஆனைமலை, திருப்பரங்குன்றம் குடை வரைக் கோயிற் கல்வெட்டுகள் மற்றும் வைகைக்கரை கல்வெட்டு ஆகியவற்றைக் காட்டலாம். கிரந்த எழுத் தில் சிலவும், புதிதாக உருப்பெற்ற தமிழ் எழுத்துக்கள் சிலவும் ஒன்று போலவே காணப்படுகின்றன. அது மட்டுமல்லாமல் பாண்டிய மன்னர்கள் தங்களுக்குச் சொந்தமான தமிழ் எழுத்தில் (வட்டெழுத்து) காணப் பெறும் செப்பேடுகள் சிலவற்றில் சமஸ்கிருதப் பகுதி யில் தமிழ்ச் சொல்லை எழுதுவதற்கு வட்டெழுத்துக் குப் பதிலாக மற்றொரு வகைத் தமிழ் எழுத்தை எழுதி யிருப்பதிலிருந்தே மற்றொரு வகைத் தமிழ் எழுத்திற் கும், கிரந்த எழுத்திற்கும் இருந்த தொடர்பைத் தெளி வாகப் புரிந்து கொள்ளலாம்.

இவ்வகைத் தமிழ் எழுத்து சோழர் காலத்தில் பெரு ஆதரவைப் பெற்றது. சோழர்கள் தாங்கள் வென்ற பகுதிகளிலெல்லாம் இவ்வெழுத்தைப் பயன்படுத்த வலியுறுத்தினர். அதன் காரணமாக மற்றொரு எழுத்

தான வட்டெழுத்து மறையத் தொடங்கியது. பல்லவ மன்னர்களும், சோழ மன்னர்களும் தங்கள் செப்பேடுகளில் இப்புதிய தமிழ் எழுத்தைத்தான் பயன்படுத்தியிருக்கின்றனர். அதிலிருந்தே அவர்களின் ஒருமித்த பேராதரவு இப்புதிய தமிழ் எழுத்துக்குத்தான் கிடைத்திருக்கிறதென்பது வெளிப்படை. இவ்வெழுத்தைப் பிற்காலப் பாண்டியர்களும் பயன்படுத்த வேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டு விட்டது. ஏனெனில் தாங்கள் வெற்றி கண்ட சோழ நாடு, தொண்டை நாட்டுப் பகுதிகளில் இப்புதிய தமிழ் எழுத்தைத்தான் பயன்படுத்த வேண்டியதாயிற்று. காரணம், இப்பகுதி மக்கள் முற்றிலும் பழைய தமிழ் எழுத்தான வட்டெழுத்தை மறந்து விட்டதே ஆகும். 'புரியாத வட்டம்' ஆகையால் அதை தமிழாகப்படுத்தி எழுதப் பட்டன என்று சில கல்வெட்டுகள் தெரிவிப்பதிலிருந்தே கி.பி. 11-12-ஆம் நூற்றாண்டளவில் வட்டெழுத்து அதாவது பழைய தமிழ் எழுத்து மக்கள் புரிந்து கொள்ள முடியாத நிலையை எய்தி விட்டது என்பதை உணரலாம். ஆனாலும் அவர்கள் தென் பாண்டி நாட்டில் தங்கள் கல்வெட்டுக்களில் வட்டெழுத்தை அதாவது பழைய தமிழ் எழுத்தைப் பயன்படுத்தியிருக்கிறார்கள்.

பிற்காலப் பாண்டியர்களுக்குப் பிறகு வந்த விஜய நகர மன்னர்களும் பல்லவர்களைப் போன்றே ஆந்திரப் பகுதியிலிருந்து வந்தவர்கள். ஸம்ஸ்கிருத மொழிக்கும், கிரந்த எழுத்துக்கும் முக்கியத்துவம் தருபவர்கள். ஆதலால் இவர்களும் புதிய தமிழ் எழுத்தையே தங்கள் கல்வெட்டுக்களில் பயன்படுத்தினர். அது மட்டுமல்லாமல் மற்றவர்களைக் காட்டிலும் இவர்கள் ஒரு படி மேலே போய் கிரந்த எழுத்தையும், புதிய தமிழ் எழுத்தையும் சேர்த்தே கல்வெட்டுக்களில் எழுதலாயினர்.

அவர்களை அடுத்து வந்த நாயக்க மன்னர்களும்

இப்புதிய தமிழ் எழுத்தையே பயன்படுத்தினர். ஆதலால் புதிய தமிழ் எழுத்து பொலிவோடும், வலிவோடும் தொடர்ந்து தமிழகத்தில் வழங்கி வரும் நிலை ஏற்பட்டு விட்டது. அச்சு இயந்திரம் வந்து விட்ட இந்நாளில் இனி இவ்வெழுத்து முறையில் எந்த வித மாற்றமும் ஏற்பட வாய்ப்பில்லை. ஆதலால் இத்தமிழ் எழுத்தே இனி என்றென்றும் செங்கோலோச்சும் என்று நம்பலாம்.

## பண்டைத் தமிழ் எழுத்து - ஓர் ஆய்வு

தமிழகத்தில் மிகப் பழமையானது என்று கருதப் படும் எழுத்து தமிழ் ஆகும். இதை 'பிராமி' எழுத் தென்றும், 'தென்னிந்திய பிராமி' எழுத்து என்றும் ஆராய்ச்சியாளர்கள் இதுவரை வழங்கி வந்தனர். நாம் இவ்வெழுத்தை நம் வசதிக்காகப் பழந்தமிழ் எழுத்து என்று கூறுவோம். இவ்வெழுத்து கி.மு. 3-2-ஆம் நூற்றாண்டு முதல் தமிழகத்தில் வழங்கி வந்திருக் கிறது என்று அண்மைக்காலம்வரை கருதப்பட்டது. தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையால் கண்டுபிடிக்கப்பட்டுள்ள பூலாங்குறிச்சி கல்வெட் டால் தமிழ் எழுத்தின் பழமை மேலும் ஓரிரு நூற்றாண் டுகளுக்கு முன்பாகவே இருத்தல் வேண்டும் என்று ஊகிக்க முடிகிறது.

பூலாங்குறிச்சி கல்வெட்டின் காலம் அக்கல்வெட் டில் குறிப்பிடப்பட்டுள்ள ஆண்டு சக ஆண்டு என்று எடுத்துக் கொண்டால் (192 + 78 – 270) கி.பி. 270 என்று ஆகிறது. (இதைச் சிலர் கி.பி. 4-5-ஆம் நூற் றாண்டைச் சேர்ந்தது என்றும் கூறுகின்றனர்.) அதி லுள்ள எழுத்தமைதியின் காலம் கி.பி. 3-ஆம் நூற் றாண்டெனில் அறச்சலூர்க் கல்வெட்டின் காலத்தை இன்னும் சிறிது முன்னுக்குக் கொண்டு செல்லப்படுதல் வேண்டும். அறச்சலூர் கல்வெட்டு கி.பி. 1-2-ஆம் நூற்றாண்டென்றால் புகழியூர் கல்வெட்டை கி.மு. 2 முதல் கி.மு. 1-ஆம் நூற்றாண்டு எனக் கூறுதல் வேண் டும். அவ்வாறாயின் சேர அரசர்களின் பரம்பரையை கி.மு. 2-1-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று

கொள்ளல் வேண்டும். இந்த முடிவு முற்காலக் கல் வெட்டுக்களில் காணப்பெறும் எழுத்துக்களின் தன் மைக்கும் ஒற்றுமையாகக் காணப்படுகிறது.

தமிழகத்தில் காணப்பெறும் பழந்தமிழ்க் கல்வெட் டுக்களை இரண்டு வகையாகப் பிரித்துள்ளார் திரு. ஐராவதம் மகாதேவன் அவர்கள். முதல் வகையில் புள்ளியில்லா மெய் வடிவு மெய்யை மட்டும் குறிக் கும்; அகரம் ஏறிய மெய்யைக் குறிக்காது. அகரம் ஏறிய மெய்யைக் குறிக்க ஒரு கோடு இடப்பட்டது. இக்கோடு 'ஆ'காரத்தை குறிக்கவும் இடப்பட்டிருக் கிறது. இரண்டாம் வகை எழுத்தில் புள்ளியில்லா மெய்யெழுத்து, அகரம் ஏறிய மெய்யெழுத்தாகக் காணப்படுவதாகக் குறிப்பிட்டுள்ளார். மேலும் இக் கல்வெட்டுக்களில் எகரம், ஏகாரம், ஒகரம், ஓகாரம், குறில், நெடில் பிரித்துக் காட்டுவதற்கு எவ்விதக் குறி யும் இடப்படவில்லை என்றும்; இக்கல்வெட்டுக் களில் கூட்டெழுத்துக்களே காணப்படவில்லை என்றும் தெரிவித்திருக்கிறார்.

இக்கல்வெட்டுக்களைப் பற்றி மேலும் ஆய்வு செய்த டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் புகழூர், அறச்சலூர் கல்வெட்டுக்களில் மெய்யைக் குறிக்க புள் ளியிடப்பட்டிருக்கிறது என்றும், எகர, ஒகரம் குறிக்க வும் புள்ளி இருக்கிறது என்றும் கருத்து தெரிவித்து இருக்கிறார். இவர் குறிப்பிடும் கல்வெட்டுகள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 2-ஆம் நூற் றாண்டு வரையிலானவையாகும். இதற்கு முந்திய காலத்தில் எழுதப்பட்டிருப்பவைகளில் மெய்யைக் குறிக்கவும், எகர, ஒகரக், குறிலைக் குறிக்கவும் புள்ளி காணப்படவில்லை. அவைகளில் அகரம் ஏறிய உயிர் மெய்யைக் குறிக்க சில இடங்களில் மெய் எழுத்துக் குப் பக்கத்தில் 'அ'கரத்தைத் தனியாக எழுதிக் காட்டி யிருக்கிறார்கள். சில இடங்களில் அகரம், ஆகாரம்

ஏறிய உயிரைக் குறிக்க கோடு இடப்பட்டிருந் தாலும், மிகப் பழைய முறையான மெய்யையும், உயிரையும் தனித் தனியாக எழுதிக் காட்டும் முறை யையும் பயன்படுத்தியிருக்கிறார்கள். இம்முறை அக் கல்வெட்டுக்களின் பழைமைத் தன்மையைக் காட்டா நிற்கும். அத்தோடு இக்கல்வெட்டுக்களில் எதிலுமே கூட்டெழுத்துக்கள் காணப்பெறவில்லை என்பதும் இவ்வெழுத்துக்களின் மிகப் பழைமைத் தன்மைக்கு மற்றொரு சான்றாகக் கருதலாம்.

நன்றாக வளர்ச்சியடைந்த ஒரு முறையான எழுத்தை அசோகனது கல்வெட்டுக்களில் காண்கி றோம், அசோகனது கல்வெட்டுகளில் புள்ளியிடப் பட வேண்டிய இடங்களில் புள்ளியிட்டு எழுதப்பட் டிருக்கின்றன.

ஆனால் தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்களில் உயி ரெழுத்துக்கள் பத்துதான் எழுதப்பட்டுள்ளன. 'ஐ'கா ரமும், 'ஒள'காரமும் காணப்படவில்லை. தமிழிலக் கண நூலாகிய தொல்காப்பியத்தில் 'அகரமும், இகர மும்,' அகரமும், யகர ஒற்றும் ஐகாரம் ஆகும் என்றும் 'அகர, உகரம் ஒளகாரம் ஆகும்' என்றும் குறிக்கப்பட் டிருக்கிறது. அதன்படி பார்க்கையில் அகரத்தையும், இகரத்தையும்; அகரத்தையும், யகர ஒற்றையும் தனித் தனியாக எழுதி அதை ஐகாரம் எனக் கொண்டார்க ளென்றும், அகர, உகரத்தைத் தனித்தனியாக எழுதி ஒளகாரம் எனக் கருதினார்கள் என்றும் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆகவே இந்த வகையில் பார்த் தாலும் தமிழகக் கல்வெட்டுகள் மிகவும் ஆரம்ப கட்ட நிலையிலேயே இருந்திருக்கின்றன என்று கருத வேண்டியுள்ளது.

இவ்வகையில் திரு. டி.என். சுப்பிரமணியம் அவர் களின் கருத்து மிகவும் பொருத்தமானதாகத் தெரி கிறது. தாம் தொகுத்து வெளியிட்ட South Indian

Temple Inscriptions Vol III, Part II (தென்னிந்திய கோயிற் சாசனங்கள், தொகுதி-3, பகுதி-2ல்) ''பிராமி எழுத்தானது திராவிட மொழிகளுக்காகவே உருவாக்கப்பட்டது என்றும் குறிப்பாக அவைகளுள் பழைமையானதான தமிழுக்காக அது தோற்றுவிக்கப் பட்டது என்றும், பின்னாளில் பிராகிருத மொழி அதனைப் பயன்படுத்திக் கொண்டது என்றும், நாளடைவில் இந்தியா பூராவும் அதுவே பழக்கத்தில் நிலவியது என்றும்'' கருத்துத் தெரிவித்துள்ளார்.

மௌரியப் பேரரசன் அசோகன் தமது கல்வெட்டுக்களைப் பிராகிருத மொழியிலும், பாலி மொழியிலும் எழுதிய போது இவ்வெழுத்தைப் பயன்படுத்தியிருக்கிறான். பின்னர் வந்த குப்தப் பேரரசர்களும் இவ்வெழுத்தையே உபயோகித்திருக்கின்றனர்.

''இகரத்திலிருந்து'' 'ஈ'காரத்தை வேறுபடுத்திக் காட்ட மேலும் ஒரு புள்ளியை சேர்த்திருக்கிறார்கள். இம்முறை தமிழ் நாட்டில் நெடிலிருந்து குறிலாக்கப் பயன்படுத்திய புள்ளியிடும் முறையை ஒட்டியதாகும் என்றும் ஆனால் அவர்கள் குறிலுக்குப் பதிலாக நெடிலுக்குப் புள்ளியிட்டிருக்கின்றனர் என்றும் அவர் கூறுவது சிந்திக்கத் தக்கது.

மெய்யைப் புள்ளியிட்டுக் காட்டுவதும், எகர, ஒகரத்துக்குப் புள்ளியிடுவதும் தொல்காப்பிய காலத்தில் நிகழ்ந்திருக்கிறது. அதே போன்று அறச்சலூர், புகளூர் கல்வெட்டுக்களின் காலமான கி.மு. 2 முதல் கி.பி. 2-ஆம் நூற்றாண்டிற்குள் உள்ள காலக் கட்டத்தைச் சார்ந்ததாகத்தான் தொல்காப்பியம் இருத்தல் வேண்டும். மெய்யைக் குறிக்க புள்ளியிடாமல் எழுத்துக்கள் வழங்கி வந்த காலம் தொல்காப்பிய காலத்துக்கும் முந்தியது. தொல்காப்பியத்தில் பல இடங்களில் 'என்மனார் புலவர்' 'என்ப' என்ற சொற்கள் காணப்படுகின்றன. அவை தொல்காப்பியருக்கு முன்பிருந்த நிலைமையைக் குறிப்பதாகும். தொல்காப்பியர்

காலத்திலேயே பழைய சில எழுத்து மரபுகள் வழக்கொழிந்துவிட்டன என்பது பெறப்படுகிறது. நன்னூல் சூத்திரம் (98) தொல்லை வடிவன எல்லா எழுத்தும் என்று கூறுகிறது. ஆகவே தொல்காப்பியம், நன்னூல் ஆகியவற்றின் காலங்களுக்கு முன்பாகவே எழுத்துக்கள் ஒரு நிலையான வடிவம் பெற்று இருந்தன என்பது புலப்படுகிறது. அக்காலக் கட்டத்தில்தான் மாங்குளம் ஆகிய இடங்களில் உள்ள கல்வெட்டுகள் எழுதப் பெற்றிருத்தல் வேண்டும். ஆகவே அவை காலத்தினால் முந்தியவை ஆகின்றன. ஆதலால்தான் அவை கி.மு. 5-4-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவைகளாக இருக்கலாம் என்று கருத வேண்டியுள்ளது. மேலும் ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த பட்டிபுரோலுவில் கிடைத்துள்ள கல்வெட்டும் இதற்கு உறுதுணையாகிறது. அக்கல்வெட்டிலும் மெய்யைக் குறிக்க புள்ளியில்லை. மேலும் அகரம் ஏறிய மெய்யைக் காட்ட பக்கக் கோடு ஒன்று இட்டும், 'ஆகாரம்' ஏறிய மெய்யைக் குறிக்க பக்கக் கோட்டோடு கீழ் நோக்கிய கோடு ஒன்று இட்டும் எழுதியிருப்பது மனத்தில் கொள்ள வேண்டியதாகும். இம்முறை மாங்குளம் ஆகிய இடத்தில் காணப்படும் கல்வெட்டுக்களின் வளர்ச்சியைக் காண்பிப்பதாகக் கருதுதல் வேண்டும்.

தமிழகத்தில் பழந்தமிழ் எழுத்துப் பொறித்த கல்வெட்டுக்கள் மலைக் குகைகளில் மட்டுமல்லாமல் பானை ஓடுகள், காசுகள் ஆகியவற்றிலும் கிடைத்துள்ளன. அரிக்கமேடு, கொற்கை, உறையூர், காஞ்சிபுரம், கரூர், வல்லம், கொடுமணல் ஆகிய இடங்களில் நடைபெற்ற அகழ்வாய்வுகளில் பானை ஓடுகளில் இவ்வெழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருப்பது கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றது. வடாற்காடு மாவட்டம் செங்கத்துக்கு அருகில் உள்ள ஆண்டிப்பட்டியில் கிடைத்த ஈயக் காசுகளில் இவ்வெழுத்து பொறிக்கப்பட்டிருக்கிறது. இது அக்காலத்தில் மக்களிடத்தில் இவ்

வெழுத்து பெற்றிருந்த செல்வாக்கைப் புலப்படுத்துவ தாக உள்ளது. குறிப்பிட்ட ஒரு மதத்தார்தான் இவ் வெழுத்தைப் பரப்பினர் என்ற கருத்தை உடைத்தெறி வதாக இதைக் கருதலாம். அனைத்து மக்களும் நன்கு அறிந்த ஒரு எழுத்தாக இது நிலவி வந்திருக்கிறது. அவ்வாறெனில் தொன்றுதொட்டே இது வழங்கி வந் திருத்தல் வேண்டும் என்று நாம் ஊகிக்கலாம். பானை ஓடுகளிலும் குறிப்பாக கறுப்பு, சிவப்பு பானை ஓடு களில் இவ்வெழுத்து எழுதப் பெற்றிருப்பது இவ் வெழுத்துக்களின் பழமை கி.மு. 5-4-ஆம் நூற்றாண்டு என்று கொள்வதற்கு மேலும் ஆதாரமாக அமைகிறது.

தமிழ் மொழிக்காக ஏற்படுத்தப்பட்ட இவ்வெழுத் தைப் பின்னாளில் பிராகிருத மொழி பயன்படுத்திக் கொண்டது என்னும் கருத்துக்கு சான்றாகச் சாதவாக னர்களின் 'இருமொழிக் காசுகளைக் கூறலாம்.' அக் காசுகளில் ஒரு பக்கத்தில் தமிழ் மொழியிலும், மற் றொரு பக்கத்தில் பிராகிருத மொழியிலும் எந்த மன்னனால் அக்காசு வெளியிடப்பட்டது என்பது குறிக்கப் பெற்றிருக்கும். இரு மொழிகளிலுமுள்ள வாசகங்கள் பழந்தமிழ் எழுத்திலேயே எழுதப்பட்டுள் ளன. ஆகவே தமிழ் எழுத்தைப் பின்னாளில் தமிழும், பிராகிருதமும் இணைந்து பயன்படுத்தியது தெளிவா கிறது.

அண்மையில் டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் சாதவாகனர்களும். சாளுக்கியர்களும் வேளிர் வழி வந்தவர் என்று கூறியிருப்பது மேலும் சில ஊகங்க ளைக் கொள்வதற்குத் தூண்டுகோலாக அமைகிறது.

மொஹஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகம் முற்காலத் திராவிடர் நாகரிகம் என்றும், அக்காலத்திய எழுத் துக்கள் முற்காலத் திராவிட மொழியை எழுதுவதற்கு

பயன்படுத்தப்பட்டிருக்கின்றன என்றும் திரு. ஐ. மகா தேவன் போன்ற ஆராய்ச்சியாளர்கள் தெரிவித்துள் ளனர். அத்தோடு அங்கு வேளிர்கள் வாழ்ந்து வந் தனர் என்று திரு. ஐ. மகாதேவன் அவர்கள் கூறியுள் ளார்.

அந்நாகரிகம் அழிவுற்றதற்குக் கூறப்படும் கார ணங்களில் இந்தோ ஆரியர் தாக்குதலையும் ஒரு கார ணமாகக் கூறுகின்றனர். அவ்வாறு அவர்கள் தாக்கிய தால் வேளிர்கள் தெற்கு திசை நோக்கி நகர்ந்திருக்கக் கூடும். அதன் காரணமாகத்தான் குஜராத் மாநிலத்தி லுள்ள லோத்தலில் அவர்கள் வாழ்ந்திருக்கிறார்கள் என்றும், அங்கும் அவர்கள் அம்மொழியையும், எழுத் தையும் பயன்படுத்தியிருக்கிறார்கள் என்றும் நம்பலாம்.

வேளிர்கள் ம்தென்திசை நோக்கி சென்றதைத்தான் அகத்தியர் தலைமையில் ஒரு குழு தமிழ் நாட்டுக்கு வந்ததாகக் கூறப்படும் கதை தெரிவிப்பதாகவும் கருத லாம். அத்தோடு துவராபதியைத் தலைநகராகக் கொண்ட கண்ணனின் வழி வந்த வேளிர், ஐம்பது தலைமுறைக்குப் பிறகு இருக்குவேளிர் என்ற பெயரில் தமிழ் நாட்டில் இருந்திருப்பது வேளிர் கி.மு. 1000 அளவில் தென் திசை நோக்கி வர ஆரம்பித்து விட் டனர் என்பதைக் கூறுவதாக உள்ளது. அப்படி வந்த வர்கள் தாங்கள் அறிந்திருந்த எழுத்தையும் தென் திசைக்குக் கொண்டு வந்து மேலும் வளர்ச்சியைச் செய்திருக்கின்றனர்.

அதைத்தான் பாண்டியர் செப்பேடுகள் ''அகத்திய னோடு தமிழாய்ந்து'' என்று தெரிவிக்கின்றன என்று கருதலாம். அவ்வாறு ஆராய்ந்து வளப்படுத்திய எழுத்துக்கள்தாம் தமிழ் நாட்டுக் குகைகளிலும், பானை ஓடுகளிலும், காசுகளிலும் காணப்பெறும் எழுத்துக்கள். தமிழகத்தில் வளர்ச்சியடைந்த எழுத் தாக இருக்கின்ற காரணத்தால்தான் அண்மை நாடான

இலங்கையில் இவ்வெழுத்தில் ஆயிரக்கணக்கான கல் வெட்டுக்களைக் காண முடிகிறது.

மொஹஞ்சதாரோ, ஹரப்பா எழுத்துக்களை அறிந்திருந்த வேளிர்கள் தென்திசை நோக்கி வந்து விட்டதாலும், மனப்பாடம் மூலமே பயின்று வந்த இந்தோ ஆரியர் மட்டுமே இந்தியாவின் வடபகுதியில் தங்கி விட்டதாலும் ஹரப்பா நாகரிகத்துக்கும், மௌரியர் காலத்துக்கும் இடைப்பட்ட காலத்தில், வடபகுதியில் எழுத்து வளர முடியாத ஒரு நிலை ஏற்பட்டு விட்டது என்று ஊகிக்கலாம். பிராகிருத மொழியை எழுதுவதற்குப் பயன்பட்ட இந்த எழுத்தை அசோகன் சில மாற்றம் செய்து தம் காலத்தில் பயன்படுத்திப் பல கல்வெட்டுக்களைப் பொறித்திருக்கின்றான் என்று கருதலாம். மேலும் மெகஸ்தனிஸ் சந்திரகுப்த மௌரியர் காலத்தில் எழுத்துக்களே வழங்கவில்லை என்று கூறியிருப்பதும் இக்கருத்துக்கு வலுவூட்டுவதாக அமைகிறது.

தமிழகத்துத் தமிழ் எழுத்தின் பழமைக்கு மற்றொரு காரணத்தையும் கூறலாம். தமிழகத்து மலைக் குகைகளில் காணப்பெறும் கல்வெட்டுக்கள் அனைத்தும் (மாங்குளம், புகழூர் கல்வெட்டைத் தவிர) ஓரிரு வரிகளிலேயே காணப்படுகின்றன. அவைகளின் மொழிகூட நல்ல வளர்ச்சியடைந்த ஒன்றாகத் தெரியவில்லை. கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டென சங்க காலத்தைக் குறிப்பிடுகிறார்கள். சங்க காலத்து இலக்கியங்களில் ஒரு பண்பட்ட மொழி நடையை நாம் காண முடிகிறது. ஆனால் மாங்குளம் போன்ற கல்வெட்டுகளில் பயிலப்பட்டுள்ள சொற்றொடர் வளர்ச்சியடைந்த ஒன்றாகத் தெரியவில்லை. தொடக்கக் கட்டத்தில் (Primitive Stage) உள்ளதாகவே தோன்றுகிறது. ''கணிநந்தாசிரியகுவன்கே தம்மம்'' (மாங்குளம்) போன்ற

தொடர்களை உதாரணமாகக் காட்டலாம்.

பிறகு நன்றாக வளர்ச்சியடைந்த நிலையில்தான் கி.மு. 2-ஆம் நூற்றாண்டளவில் இவ்வெழுத்தின் தன்மையை விளக்கி இலக்கணம் வகுக்கப்பட்டது. அதை விளக்குவதாகத்தான் தொல்காப்பியம் விளங்குகிறது. பிறகு அந்த எழுத்தில்தான் கடைச்சங்க கால இலக்கியங்கள் எழுதப் பெற்றிருத்தல் வேண்டும்.

இவ்வெழுத்தின் அடுத்த கட்ட வளர்ச்சியில் இரு வேறு வடிவான எழுத்துக்கள் உருவாகின்றன. ஒன்று நேர்க்‌கோடுகள் அப்படியே இருக்க படுக்கைக் கோடுகள் மட்டும் வளைந்து வளர்வது. இரண்டாவது நேர்க் கோடுகளும், படுக்கைக் கோடுகளும் வளைந்து வளர்வது. இவ்வளர்ச்சி கி.பி. 1-2-ஆம் நூற்றாண்டில் ஆரம்பமாகிறது. கி.பி. 3-4-ஆம் நூற்றாண்டளவில் ஒரு கட்டத்தை அடைகிறது. அப்பொழுது ஒரு வகை எழுத்துக்கு (வளைவு வளைவாக உள்ள எழுத்துக்கு) கண்ணெழுத்து என்று பெயர் வழங்கியிருக்கிறது. இந்த வகை எழுத்தில்தான் சிலம்பு, மணிமேகலை போன்ற இலக்கியங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இவ்வெழுத்து மக்கள் மத்தியில் செல்வாக்கு பெற்றிருந்தது. இதற்கு வட்டெழுத்து என்றும் பெயர். சிலம்பும், மணிமேகலையும் மக்கள் காப்பியங்கள் என்றும், அவை முதலில் மக்கள் மத்தியில் நாட்டுப்புறப் பாடல்களாகவோ அல்லது நாடகங்களாகவோ வழக்கில் இருந்திருக்கின்றன என்ற கருத்திற்கேற்பவும் மக்கள் மத்தியில் செல்வாக்கு பெற்றிருந்த வட்டெழுத்தால் அவை எழுதப்பட்டிருக்க வேண்டும். ஆதலால் இளங்கோ அடிகளும் அக்காலத்திய எழுத்தை 'கண்ணெழுத்து' என்றும், அவ்வெழுத்தை எழுதுபவர்களைக் 'கண்ணெழுத்தாளர்' என்றும் கூறிப் போந்தார்.

ஆனால் அதே நேரத்தில் மன்னர்கள் அரசவையில் முதல் வகை எழுத்து செல்வாக்கு பெற்றிருந்திருக்கிறது.

கி.பி. 2-3-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு கி.பி. 6-ஆம் நூற்றாண்டு வரையில் ஆட்சி செய்த அரசர்கள் எனறு கருதப்படும் களப்பிரர் காலத்தில் அரசவையில் பயன்படுத்திய எழுத்தை நாம்

பார்க்க இயலவில்லை. அந்தக் காலக் கட்டத்துச் செப் புப் பட்டயங்கள் அல்லது காகுகள் ஏதேனும் கிடைக் குமாயின் அதிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வழி பிறக்கும். கி.பி. ஆறாம் நூற்றாண்டில் பல்லவ மன்னன் சிம்மவர்மனின் செபேட்டில் திடீரென ஓரளவு வளர்ச்சி பெற்ற முதல் வகை எழுத்தை நாம் காண முடிகிறது. இது எவ்வாறு இயலும்? அதற்கு முந்திய நூற்றாண்டுகளில் வளர்ச்சி பெற்றிருந்தால் தானே இவ்வாறான எழுத்தை நாம் காணுதல் இயலும். ஆகவே அவ்வெழுத்துக்கள் உள்ள கல்வெட்டுக்க ளையோ, செப்பேடுகளையோ அல்லது காகுக ளையோ நாம் கண்டுபிடித்தாதல் வேண்டும்.

இந்தக் காலக் கட்டத்தைச் சார்ந்த பல்லவர் செப் பேடுகளைக் காண்கிறோம். ஆனால் அவை ஆந்திரப் பகுதியிலிருந்து வெளியிடப்பட்டவையாதலால் அவை பிராகிருத மொழியிலும், வளர்ச்சியடைந்த பழந்தமிழ் எழுத்திலும் உள்ளன. இதற்குக் காரணம் சாதவாகனர்கள் பழந்தமிழ் எழுத்தைப் பிராகிருதம், தமிழ் ஆகிய மொழிகளை எழுதுவதற்குப் பயன்படுத் தியமையேயாகும். அவர்கள் வழி வந்த பல்லவர் களும் பழந்தமிழ் எழுத்தையே பிராகிருத மொழியை எழுதுவதற்குப் பயன்படுத்தியிருக்கிறார்கள். கி.பி. 6-ஆம் நூற்றாண்டளவில், தமிழ் மொழியில் செப்புப் பட்டயத்தை அரசவை எழுத்தான முதல் வகைத் தமிழ் எழுத்தில் எழுதியிருக்கிறார்கள். அந்த வகையில்தான் முதன் முதலில் பள்ளன்கோயில் செப்பேட்டில் முதல் வகைத் தமிழ் எழுத்தைக் காண முடிகிறது.

# பல்லவர் — பாண்டியர் காலச் செப்பேடுகளும் கல்வெட்டுகளும்

**பல்லவர் செப்பேடுகளின் பிரிவுகள்:**

தமிழக வரலாற்றில் சங்க காலத்தை அடுத்து பல்லவர் காலம் இடம் பெறுகிறது. இக்காலம் கி.பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு வரை எனலாம். பல்லவர்களை, அவர்கள் வெளியிட்டுள்ள செப்பேடுகளில் காணப்படுகின்ற மொழியைக் கருத்திற் கொண்டு மூன்று வகையாகப் பிரிப்பர், வரலாற்றாசிரியர்கள். பிராகிருத மொழியைச் செப்பேடுகளில் கையாண்ட பல்லவர்கள் என்றும், சமஸ்கிருத மொழியைக் கையாண்ட பல்லவர்கள் என்றும், சமஸ்கிருதத்தையும், தமிழையும் கலந்து கையாண்ட பல்லவர்கள் என்றும் அவர்களைக் கூறுவர். பிராகிருத மொழியையும், சமஸ்கிருத மொழியையும் தங்களது செப்பேடுகளில் கையாண்ட பல்லவர்கள் கி.பி 3-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 6-ஆம் நூற்றாண்டு வரை ஆட்சி புரிந்தோராவர். சமஸ்கிருதத்தையும், தமிழையும் செப்பேடுகளில் கையாண்ட பல்லவ மன்னர்கள் கி.பி. 6-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு வரை ஆண்டிருக்கின்றனர்.

**செப்பேடும் மொழியும்:**

பிராகிருத மொழியில் வெளியிட்ட செப்பேடுகள் மூன்று கிடைத்துள்ளன. இவைகளில் மிகவும் பழமை யானது மயிதவோலு செப்பேடு 1. மற்ற இரண்டு ஹிரஹடகல்லி 2. குணபதேயம் 3. ஆகிய செப்பேடு கள் ஆகும். இந்த மூன்று செப்பேடுகளுள்ளும் மயித வோலு செப்பேடு மட்டும்தான் முழுவதுமாகப் பிரா கிருத மொழியில் எழுதப்பட்டிருக்கிறது. மற்ற இரண்டு செப்பேடுகளிலும் பிற்பகுதியில் உள்ள மங்கல வாசகம் சமஸ்கிருத மொழியில் எழுதப்பட் டுள்ளது.

முழுவதும் சமஸ்கிருத மொழியில் எழுதப் பெற்ற செப்பேடுகள் மொத்தம் 17 உள்ளன. முற்பகுதியில் சமஸ்கிருதமும், பிற்பகுதியில் தமிழும் கலந்து எழுதப் பெற்ற செப்பேடுகள் 9 கிடைத்திருக்கின்றன.

பிராகிருத மொழிச் செப்பேடுகள்:

பிராகிருத மொழியில் உள்ள மூன்று செப்பேடு களுமே சிவஸ்கந்தவர்மனைச் சேர்ந்தவை என்று ஒரு சாரார் கருதுகின்றனர். திரு. டி.என். சுப்பிரமணியம் அவர்கள் பிராகிருத மொழியில் உள்ள குணபதேயச் செப்பேட்டை பிற்காலத்தில் ஆண்ட வேறொரு ஸ்கந்தவர்மன் காலத்தில் வெளியிட்டிருக்கலாம் என்று கருதுகிறார். 4. அவர் அவ்வாறு கருதுவதற்கு அச் செப்பேட்டின் பிற்பகுதியில் சமஸ்கிருத மொழி கையாளப்பட்டிருப்பதும், எழுத்தமைப்பில் வளர்ச்சி யேற்பட்டிருப்பதும் காரணங்களாகும் என்று கூறுகி றார்.

இம்மூன்று செப்பேடுகளுமே பல்லவர்களுடைய காலத்தைக் கணிப்பதற்கு உதவுபவனவாக அமைய வில்லை. மயிதவோலு செப்பேடு வெளியிடும் போது சிவஸ்கந்தவர்மன் யுவமஹாராஜனாக இருந்தான் என்

பதும், காஞ்சிபுரத்திலிருந்து அச்செப்பேட்டை வெளியிட்டான் என்பதும், பாரத்வாஜ கோத்ரத்தில் பிறந்தவன் என்பதும் பெறப்படுகிறது. அச்சாசனம் தான்ய கட்டத்திலுள்ள அதிகாரிகளுக்கு வெளியிட்டுள்ள கட்டளையை வெளிப்படுத்துவதாக அமைந்திருக்கிறது.

ஹிரஹடஹல்லிச் செப்பேடு சிவஸ்கந்தவர்மனை ராஜாதி ராஜன் என்றும், பாரத்வாஜ கோத்ரத்தில் பிறந்தவன் என்றும், அக்னிஷ்டோம, வாஜபேய, அச்வமேத யாகங்களைச் செய்தவன் என்றும் தெரிவிக்கிறது. சிவஸ்கந்தவர்மன் காஞ்சிபுரத்தில் இருந்து கொண்டு தன்னுடைய அதிகாரிகளுக்குக் கட்டளை இடுவதாக அமைந்திருக்கிறது.

குணபதேயச் செப்பேடு விஜயஸ்கந்தவர்ம மஹாராஜாவின் காலத்தில் யுவமஹாராஜன் ஸ்ரீ விஜயபுத்த வர்மனின் மனைவியும், அங்குரன் என்று முடியும் பெயரைக் கொண்ட ஒருவனின் தாயுமான சாருதேவி நிலக் கொடை அளித்ததாகத் தெரிகிறது.

இம்மூன்று செப்பேடுகளும் அவைகளை வெளியிட்ட மன்னர்களின் சிறப்பையோ அல்லது அவர்களின் முன்னோர்களின் சிறப்பையோ தெரிவிக்கவில்லை. ஆனால் அக்காலத்தில் நிலவிய ஒரு சில அரசியல், சமுதாய சூழ்நிலைகளைக் கூறுகின்றன.

*பிராகிருதச் செப்பேடுகளின் எழுத்து :*

இம்மூன்று செப்பேடுகளும், ஓரளவு வளர்ச்சியுற்ற பிராமி எழுத்துக்களால் எழுதப்பட்டுள்ளன. இந்த எழுத்துக்கள் நாகார்ஜுனகொண்டாவில் காணப்படும் எழுத்துக்களைப் பெரும்பாலும் ஒத்துள்ளன என்று கூறுவர்.

மயிதவோலுச் செப்பேட்டையும், ஹரிஹடஹல்

லிச் செப்பேட்டையும் வெளியிட்ட மன்னன் ஒருவனே என்றும், அவன் சிவஸ்கந்தவர்மன்தான் என்றும் அறுதியிடுவர். குணபதேயச் செப்பேட்டில் குறிக்கப் பெறும் விஜயஸ்கந்தவர்மனும், சிவஸ்கந்தவர்மனும் ஒருவன்தான் என்பர் ஒருசாரார். திரு. டி.என். சுப்பிரமணியம் அவர்கள் குணபதேயச் செப்பேட்டில் உள்ள எழுத்தமைதியைக் கருத்திற் கொண்டு விஜயஸ்கந்த வர்மன், சிவஸ்கந்தவர்மனின்றும் வேறானவன் என்றும், அவன் பிற்காலத்தில் ஆட்சி செய்தவனாக இருத்தல் வேண்டும் என்றும் தெரிவித்துள்ளார். 5. திரு. டி.சி. சர்க்கார், இவ்விஜயஸ்கந்தவர்மனும், முதலாம் ஓங்கோடுச் செப்பேட்டில் குறிக்கப்படும் ஸ்கந்த வர்மனும் ஒருவனாக இருக்கலாம் என்று கருதுகிறார். 5எ.

மஞ்சிக்கல்லுக் கல்வெட்டு :

ஆந்திராவில் குண்டூர் மாவட்டத்திலுள்ள மஞ்சிக்கல்லு என்னுமிடத்திலிருந்து பிராகிருத மொழியிலுள்ள சிம்மவர்மனின் கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. இதுவும் ஓரளவு வளர்ச்சியுற்ற பிராமி எழுத்தில் எழுதப்பட்டிருக்கிறது. 6. இக்கல்வெட்டின் காலம் கி.பி. 4-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. அவ்வாறெனில் கி.பி. 4-ஆம் நூற்றாண்டளவில் சிம்மவர்மன் என்ற பல்லவ மன்னன் ஆட்சி செய்திருக்கிறான் என்பது உறுதியாகிறது. மற்ற செப்பேடுகளில் குறிக்கப் பெறும் அரச பரம்பரைகளைப் பார்க்கையில் இவ்வளவு முந்தைய காலத்தில் சிம்மவர்மன் என்பவன் இருந்ததாகக் காணமுடியவில்லை. எனவே, இச்சிம்மவர்மன், பல்லவர்களிலே வேறு கிளையைச் சேர்ந்தவனாக இருக்கலாம் என்று திரு. டி.என். சுப்பிரமணியம் கருதினார். 7. ஆனால் திரு. டி.சி. சர்க்கார் என்னும் கல்வெட்டறிஞர், இச்

சிம்மவர்மன், மயிதவோலு, ஹிரஹடஹல்லி செப்பேடுகளை வெளியிட்ட சிவஸ்கந்தவர்மனின் தந்தையாக இருக்கலாம் என்று கூறுகிறார். 8.

சமஸ்கிருத மொழிச் செப்பேடுகள்:

சமீபத்தில் கிடைத்துள்ள சிக்மகலூர் செப்பேடும் சமஸ்கிருத மொழியைக் கையாண்ட பல்லவர்கள் காலத்தில் வெளியிடப்பட்டவையாகும். சமஸ்கிருத மொழிச் செப்பேடுகளில் காணப் பெறும் எழுத்து வடிவம் சிலவற்றில் வளர்ச்சியடைந்த பிராமி எழுத்தாகவும், பலவற்றில் பல்லவ கிரந்த எழுத்தாகவும் காணப்படுகின்றன.

வீரவர்மனின் மகனான விஜயஸ்கந்தவர்மனைச் சேர்ந்ததாக ஒரு செப்பேட்டையும் (ஓங்கோடு 9.), விஜயஸ்கந்தவர்மனின் மகனான சிம்மவர்மனைச் சேர்ந்ததாக மூன்று செப்பேடுகளையும் (வசந்தம், 10. நெடுங்கராயம், 11. உருவப்பள்ளி, 12.), யுவமஹராஜா விஷ்ணுகோபவர்மனின் மகனான சிம்மவர்மனைச் சார்ந்ததாக ஆறு செப்பேடுகளையும் (தர்சி, 13. சிக்மகலூர், பீகிரம், 14. மாங்களூர், 15. விழவெட்டி, 16. ஓங்கோடு 17.), பிற்காலத்தைச் சார்ந்ததாக மூன்று செப்பேடுகளையும் (சுரா, 18. சேந்தலூர், 19. ஹொஸக்கோட்டை 20) கூறலாம்.

இச்செப்பேடுகளில் பெரும்பாலானவற்றில் செப்பேட்டை வெளியிட்ட மன்னனது பெயரையும், அவனது தந்தை, பாட்டன், கொள்ளுப் பாட்டன் ஆகியோர்களுடைய பெயர்களையும் காண முடிகின்றன. ஆதலால் ஓரளவுக்குப் பல்லவர்களின் பரம்பரையை உணர முடிகிறது. மேலும் அரசியல், சமுதாயச் சூழ்நிலைகளைப் பற்றி ஓரளவு விரிவாகப் புலப்படுத்துகின்றன. அக்காலத்தில் நிலவிய நாட்டுப்

பிரிவு, அர்சியல் அதிகாரிகள், பொருட்களுக்கும், மற்றவற்றுக்கும் விதிக்கப்பட்டிருந்த வரி வகைகள், மக்களின் பழக்க வழக்கங்கள் ஆகியவை பற்றித் தெளிவாக அறிந்து கொள்ள முடிகிறது.

**ஆரியமும், தமிழும் அமைந்த செப்பேடுகள் :**

சமஸ்கிருதத்தில் முற்பகுதியும், தமிழில் பிற்பகுதியும் கலந்து எழுதப் பெற்ற செப்பேடுகள் கி.பி. 5-ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து கிடைக்கின்றன. இவைகளில் மிகவும் பழமையானது சிம்மவர்மன் காலத்திய பள்ளங்கோயில் செப்பேடு 21. இதற்கடுத்து முதலாம் பரமேஸ்வரவர்மனின் கூரம் செப்பேட்டைக் 22. கூற வேண்டும். அடுத்து நந்திவர்மப் பல்லவ மன்னனின் காலத்தில் வெளியிடப்பட்ட காசாக்குடி, 23. புல்லூர், 24.. தண்டந்தோட்டம், 25. கொற்றங்குடி 26. ஆகியவைகளையும், மூன்றாம் நந்திவர்மனின் காலத்தில் வெளியிடப்பட்ட வேலூர்பாளையம் செப்பேட்டையும் 27. கூறலாம். முதலாம் பரமேஸ்வர்வர்மனின் உன்னகுரவயம் செப்பேடும், 28. இரண்டாம் நரசிம்மனின் ரேயூருச் செப்பேடும், 29. நந்திவர்மப் பல்லவ மன்னனின் உதயேந்திரம் செப்பேடும் 30. சமஸ்கிருதத்தில் மட்டும் எழுதப் பெற்றிருந்த போதிலும், அவை மேற்கூறிய மற்ற சமஸ்கிருத-தமிழ்ச் செப்பேடுகளின் காலத்தைச் சார்ந்தவை என்ற காரணத்தினால் அவற்றையும் இங்குக் குறிப்பிட வேண்டியுள்ளது. ஸ்கந்த சிஷ்யனின் ராயக்கோட்டைச் செப்பேடு 31. சமஸ்கிருதம், தமிழ் ஆகிய பகுதிகளைக் கொண்டதாக உள்ளது. இந்த ஸ்கந்தசிஷ்யன் யாரென்று இன்னும் முடிவாகவில்லை. திரு. டி.என். சுப்பிரமணியம் அவர்கள் இவன் சித்ரமாயன் காலத்திலிருந்த வேறொரு பல்லவனாக இருக்கலாம் என்று கூறிப் போந்தார். 32.

புல்லவ செப்பேடும், இலக்கியமும்:

மேற்குறிப்பிட்ட சமஸ்கிருதம் - தமிழ் மொழிகளால் எழுதப் பெற்றுள்ள செப்பேடுகளால்தான் பல்லவர்களின் வரலாற்றைத் தெள்ளத் தெளிவாக அறிய முடிகிறது. சிம்மவர்மன் காலம் முதல் தொடர்ச்சியாகப் பல்லவர்களின் பரம்பரையை நன்றாக அறுதியிட்டுக் கூறக்கூடியச் செய்திகளை இச்செப்பேடுகளின் சமஸ்கிருதப் பகுதி தெரிவிக்கின்றன. மூன்றாம் நந்திவர்மனின் வேலூர்பாளையச செப்பேடு பல்லவ வம்சத்தின் வரன்முறையைக் கூறுகையில் ''அசோகவர்மன் போன்ற மன்னர்களுக்குப் பிறகு அந்த வம்சத்திலே காலபர்த்துரு பிறந்தான். அவன் மகன் சூதபல்லவன், அவனுக்குப் பிறந்தவன் வீரச்கூர்ச்சன். அவன் நாகராஜன் "மகளுடைய கைத்தலத்தோடு அரசையும் பற்றினான்'' 33. என்று தெரிவிக்கிறது. இந்த செய்தியும் தமிழிலக்கியங்களிலே காணப்படும் ''சோழ அரசனான கிள்ளி நாகலோகம் சென்று, நாகக் கன்னிகை ஒருத்தியை மணந்து, சிறிது காலம் அங்கேயே வாழ்ந்தான். அவள் தனக்குப் பிறந்த பிள்ளைக்குத் தொண்டைக் கொடி ஒன்றை அடையாளாமாகக் காட்டி, அவனை, தந்தையான சோழ அரசனிடம் சேர்ப்பிப்பதற்குக் கப்பல் மூலம் அனுப்பி வைத்தாள். நடுக் கடலில் கப்பல் மூழ்கியதால் கரை சேர்ந்த அந்தக் குழந்தையைத் தொண்டைக் கொடியின் அடையாளம் கொண்டு சோழ மன்னன் எடுத்து வளர்த்துத் தன் இராச்சியத்தின் ஒரு பகுதிக்கு அரசனாக மூடி சூட்டி வைத்தான்'' என்ற செய்தியும் ஒத்து வருவதை எடுத்துக் காட்டாகக் கொண்டு பல்லவர்கள் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் என்று ஒருசாரார் கூறுவர். கல்வெட்டுகள் பற்றி விவரிக்கும் இடத்தில் இது பற்றி விரிவாக காணலாம்.

செப்பேடு கிடைத்த பகுதிகள்:

பிராகிருத மொழியில் உள்ள செப்பேடுகள் மூன்றும், மஞ்சிக்கல்லு தூண் கல்வெட்டும் தமிழகத் துக்கு வடக்கேயுள்ள ஆந்திர, கர்நாடகப் பகுதியி லேயே கிடைத்திருக்கின்றன. ஆனால் இந்தச் செப் பேடுகள் அனைத்தும் அரசன் காஞ்சிபுரத்திலிருந்தே ஆணையிட்டான் என்று தெரிவிக்கின்றன. ஆகவே, இச்செப்பேடுகள் ஆந்திர, கர்நாடகப் பகுதியில் கிடைப்பதற்குக் காரணம், அவை, கொடையைப் பெற்றுக் கொண்டோர்கள் வைத்திருந்த செப்பேட்டுப் பிரதிகளாக இருக்கலாம். இதிலிருந்து ஒன்று புரிகிறது. அதாவது சிம்மவர்மன், சிவஸ்கந்தவர்மன் ஆகியவர் களின் ஆட்சிப் பகுதியில் ஆந்திரம், கர்நாடகப் பகுதி களில் சில பகுதிகள் அடங்கியிருந்தன என்பதாகும்.

சமஸ்கிருத மொழியில் கிடைத்துள்ள பெரும்பா லான செப்பேடுகளும் ஆந்திரப் பகுதியிலிருந்தே கண் டெடுக்கப்பட்டுள்ளன. இதன் காரணமாகத் திரு. ஆராவமுதன் என்பவர் காஞ்சிபுரம் என்னும் ஊர், ஆந்திரப் பகுதியில் காணப்படும் ஊராகும் என்றும், அங்குதான் முற்காலப் பல்லவர்கள் தங்கியிருந்து ஆணைகளை வெளியிட்டார்கள் என்றும் கருத்துத் தெரிவித்தார். 34. ஆனால் இக்கருத்து ஏற்புடைய தாக யாரும் ஒப்புக் கொள்ளவில்லை. முற்காலப் பல் லவர்கள் ஆந்திர, கர்நாடகப் பகுதிகளில் தென் பகுதி யையும், தொண்டை மண்டலத்தையும் ஆண்டிருந்த வர்களாகக் கருதப்படல் வேண்டும்.

தமிழ் எழுத்தில் எழுதக் காரணம்:

முற்பகுதியில் சமஸ்கிருதத்திலும், பிற்பகுதியில் தமிழ் மொழியிலும் எழுதப் பெற்ற செப்பேடுகள் அனைத்தும் தமிழகத்திலேயே கிடைத்துள்ளன. பல்ல

வர்களது ஆட்சி எல்லை தமிழகத்தின் தெற்குப் பக்கத்துக்கு விரிவடைய, விரிவடைய செப்புப் பட்டயங்களில் தமிழ் மொழியில் கொடை பற்றிய செய்தியை எழுத வேண்டுவது இன்றியமையாததாயிருக்கும் போன்று தெரிகிறது.

செப்பேடுகளில் சில வேறுபாடுகள்:

தமிழ் நாட்டில் கிடைத்துள்ள பல்லவர் செப்பேடுகளுக்கும், ஆந்திர, கர்நாடகப் பகுதியில் கிடைத்துள்ள செப்பேடுகளுக்கும் சில வகையில் வேறுபாடுகள் காண முடிகின்றன. ஆந்திரப் பகுதியிலே கிடைக்கின்ற சாசனங்கள் கொடை அளித்த மன்னனையும் சேர்த்து நான்கு தலைமுறையினரைத்தான் தெரிவிக்கின்றன. தமிழகத்தில் கிடைத்துள்ள செப்பேடுகளில் கொடையளித்த மன்னனையும், அவனது முன்னோர்களையும், புராண பரம்பரையையும் கூறப்பட்டிருக்கும்.

செப்பேடுகளின் முத்திரைகளிலும் சில வேறுபாடுகளைக் காணக் கூடும். ஆந்திரப் பகுதியில் கிடைத்துள்ள செப்பேடுகளின் முத்திரைகளில் அஷ்ட மங்கலங்களின் உருவங்கள் காணப்படுவதில்லை. நந்தியைத் தவிர பிறைச் சந்திரன் சூரியன் அல்லது நட்சத்திரம், ஸ்ரீவத்ஸம் போன்ற உருவம் பெரும்பாலும் காணப்படும். பெரும்பாலானவற்றில் கொடையளித்த மன்னனின் பெயர் எழுதப்பட்டிராது. அவ்வாறு எழுதப் பெற்றிருந்தாலும், முத்திரையின் நடுவில் ஒரு வரியில் அரசனின் பெயர் மட்டும் பொறிக்கப்பட்டிருக்கும். தமிழகத்தில் கிடைத்துள்ள செப்பேடுகளின் முத்திரைகளில் படுத்திருக்கும் நந்தியின் உருவத்தோடு எண்மங்கலப் பொருட்களின் உருவங்களும், சூரியர், சந்திரர் உருவங்களும் புடைப்புச் சித்திரங்களாகக் காணப்படும். அவ்வுருவங்களைச்

சுற்றி விளிம்பின் உட்புறமாக அரசனின் முத்திரை வாசகம் ஒரு வரியில் எழுதப் பெற்றிருக்கும்.

இவ்வவாறு சில வேறுபாடுகளைக் கண்டுணர்ந்த திரு. டி.என். சுப்பிரமணியம் அவர்கள், ஆந்திரப் பகுதியில் கிடைத்துள்ள செப்பேடுகளைப் பற்றி கீழ் வருமாறு குறித்துள்ளார். ''ஜிதம் பகவதா என்று ஆரம்பித்து, தானத்தை வழங்கிய அரசனுடைய முப்பாட்டன், பாட்டன், தந்தை ஆகிய மூவரையும் சேர்த்து நான்கு தலைமுறைகளைப் பற்றியே கொடுக்கப்பட்டிருக்கும். அவர்களுடைய புகழும், ஒரே முறையில் குறிப்பிட்ட சில சொற்றொடர் கொண்டு அமைந்திருக்கும். கடைசியிலே காணும் பல சுருதி சுலோகங்களைத் தவிர மற்றப் பகுதி உரைநடையாகவே காணப்படும். அதை நோக்கினால், முன்னதாகவே அமைக்கப்பட்ட ஒரு வாசகத்தில் சந்தர்ப்பத்தையொட்டி, அரசனுடைய பெயரையும், அவன் முன்னோர்களுடைய பெயரையும் அந்தந்த இடங்களில் இட்டு நிரப்பி அதைப் பூர்த்தி செய்து எழுதப்பட்டது என்பது தெளிவாக விளங்கும்.'' 35.

*செப்பேடுகள் யார் யாருக்கு அளிக்கப்பட்டன:*

இதுவரையில் கிடைத்துள்ள பல்லவர் செப்பேடுகளில் 20 செப்பேடுகள் பிராமணர்களுக்குப் பிரமதேயமாக நிலம் அளித்த செய்தியையும், இரண்டு செப்பேடுகள் சமணக் கோயில்களுக்குப் பள்ளிச் சந்தமாக நிலக்கொடை அளித்ததையும், இரண்டு செப்பேடுகள் சிவன் கோயில் எடுப்பித்து, தேவதானமாக நிலக்கொடை அளிக்கப் பெற்றதையும், இரண்டு செப்பேடுகள் விஷ்ணு கோயிலுக்குத் தேவபோகமாக நிலக்கொடை அளிக்கப் பெற்ற செய்தியையும், ஒரு செப்பேடு வாகூரில் அமையப் பெற்றிருந்த வித்யா

ஸ்தானத்துக்கு வித்யா போகம் (கல்விக் கொடை) தரப்பெற்ற செய்தியையும் தெரிவிக்கின்றன.

செப்பேடுகள், யாரால், எதற்கு

வெளியிடப்பட்டன?

இச்செப்பேடுகள், அரசர்கள் தம்முடைய ஆயுள், தர்மம், வெற்றி ஆகியவை சிறந்து விளங்க அவர்கள் அளித்த கொடையைப் பற்றியும், 36. அரசர்களின் முக்கிய அதிகாரிகளின் வேண்டுதலுக்கிணங்க, அரசர்கள் அளித்த கொடையைப் பற்றியும் தெரிவிப்பதாகவே உள்ளன. இதிலிருந்து முற்காலத்தில் அரசர்கள் நேரிடையாகத் தங்கள் ஆணையின் மூலம் அளித்த கொடைகளைத்தான் செப்புப் பட்டயங்களில் எழுதினார்கள் போன்று தெரிகிறது. காசாக்குடிச் செப்பேட்டில் தமிழ்ப் பகுதியில் ''கோனோலை'' என்று காணப்படுகிறது. ஆகவே அது அரசன் ஆணையைத் தாங்கிய ஓலையின் பிரதி என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

இதையேதான் விஷ்ணு புராணம் என்னும் நூலும் கூறுவதாகத் தெரிகிறது. அதாவது ''அரசன் பிராமணர்களுக்கு நிலத்தைக் கொடையாக அளிக்க வேண்டும். செப்பேட்டில் அரசனது முத்திரை பதிப்பிக்கப் பெற்றிருக்க வேண்டும். கொடுக்கப்பட்ட நிலத்தின் எல்லைகள், பரப்பு ஆகியவை தரப்பெற்றிருக்க வேண்டும். அரசனது முன்னோர்களைப் பற்றி எழுதப் பெற்றிருக்க வேண்டும்'' 37. என்று கூறுகிறது. தமிழ் நாட்டில் காணக்கூடிய சில கல்வெட்டுக்களில் 'செம்பிலும் சிலையிலும் வெட்டுவித்துக் கொள்க' என்று அரசன் அளித்த கொடையைக் குறிக்குமிடத்தில் காணமுடிகிறது.

கோடை பற்றிக் கூறும் பகுதி:

விஷ்ணு புராணத்தில் கோடிட்டுக் காட்டியுள்ள

யிதிகலைள நன்கு கடைப் பிடித்து எழுதியுள்ள செப் பேடுகள் இந்தியாவிலேயே தமிழகத்தில்தான் அதிக மாகக் கிடைக்கின்றன. தமிழகத்தில் கிடைத்துள்ள பல் லவர்களின் செப்பேடுகளில் சமஸ்கிருதம், தமிழ ஆகிய இரு பகுதிகள் உள்ளன என்று முன்னரே குறிப் பிடப்பட்டது. இருப்பினும், தமிழ்ப் பகுதியில்தான் கொடையைப் பற்றிய செய்தி காணப்படுகிறது. தமிழ்ப் பகுதியை முன்னர் எழுதிக் கொண்டு, பின்: அதையொட்டி சமஸ்கிருதப் பகுதி தனியாக இயற்றப் பட்டிருக்கலாம் போன்று தெரிகிறது. 38.

ஸமஸ்ருதப் பகுதி அமைப்பு முறை:

ஸமஸ்கிருதப் பகுதி கடவுள் வாழ்த்தோடு ஆரம் பித்து கொடை அளிப்பவரின் குலத் தோற்றம், முன் னோர்களின் பட்டியல், அவர்களது வீரச் செயல்கள் ஆகியவற்றைத் தந்து விட்டு, கொடை அளிப்பவனின் சிறப்பு, அவனது இருப்பிடம், ஆட்சியாண்டு, ஆகிய வற்றைக் கூறி, கொடை பெறுபவனின் இருப்பிடம், அவனது குலம், கோத்திரம் ஆகியவை தெரிவித்து கொடையளிக்கப்பட்ட பொருளை விவரிக்கும் தன் மையில் அமைந்திருக்கும். இப்பகுதியின் உதவியால் தான் மன்னனின் பரம்பரையையும், அவர்கள் காலத் தில் ஆண்ட மன்னர்களையும், அவர்கள் புரிந்த போர்ச் செயல்கள், அவர்கள் செய்த அறக்கொடை கள் ஆகியவற்றையும் உணர்ந்து கொள்ள முடிகிறது.

ஸமஸ்கிருதப் பகுதியின் சிறப்பு:

இப்பகுதியில் மன்னர்கள் பல தெய்வங்களோடு ஒப்பிட்டுப் பேசப்படுவர். அவ்வாறு பேசப்படும் போது மன்னர்களுடைய குணநலன்களையும், மன்னர் களின் தேவியர்களையும் தெரிந்து கொள்ள முடிகிறது. தேவிமார்கள் எந்த வம்சத்தைச் சேர்ந்தவர்கள், எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள் என்ற செய்திகளையும்

புரிந்து கொள்ளலாம்.

**தமிழ்ப் பகுதியின் தன்மை:**

தமிழ்ப் பகுதியில் எந்த மன்னன் கொடை அளிக்கிறானோ அவனைக் குறிப்பிட்டு, அவனது இத்தனாவது ஆட்சி ஆண்டில், இந்தப் பகுதியில் அடங்கிய இந்த ஊர், இந்த பகுதியைச் சேர்ந்த இன்னாருக்குக் கொடை அளிக்கப்படுகிறது என்று குறிக்கப்பட்டிருக்கும். அவ்வாறு கொடையளிக்கப் பெற்றது நிலமாக இருப்பின் அரசனுக்குச் செலுத்தப்பட வேண்டிய எல்லாவித வரிகளிலிருந்தும் விலக்குப் பெற்றதாகக் குறிக்கப்பட்டிருக்கும். அத்தோடு அந்நிலத்துக்கு எந்த வாய்க்காலின் மூலம் நீர் பாய்ச்சப் பெறுதல் வேண்டும் என்பதும் தெரிவிக்கப் பெற்றிருக்கும். ஆந்திரப் பகுதியில் கிடைத்துள்ள பல்லவர் செப்பேடுகளில் தமிழ்ப் பகுதி காணப்படவில்லை; ஆதலால் கொடையளிக்கப் பெற்ற நிலத்தின் எல்லை அவைகளில் தரப்படவில்லை.

**காலம் கூறும் முறை:**

ஆந்திரப் பகுதிகளில் கிடைத்துள்ள செப்பேடுகளில் ஆண்டு குறிப்பிட்டவுடன், அச்செப்பேடு எந்த பருவத்தில் வெளியிடப்பட்டது என்பதைத் தெரிவிக்க வேனிற்காலம், மழைக்காலம், பனிக்காலம் ஆகியவற்றுள் ஒரு காலம் தரப்பட்டிருக்கிறது. 39. இத்தகைய முறை தமிழ்ப் பகுதிகளில் கிடைத்துள்ள செப்பேடுகளில் காணமுடியவில்லை.

**செப்பேடுகளில் அதிகக் கவனம்:**

அரசனது ஆணையைத் தாங்கி வெளிவருவதால் செப்பேடுகள் மிகவும் கவனத்துடன் வெளியிடப்பட்டன போன்று தோன்றுகிறது. மயிதவோலு, ஹிரஹடஹல்லி ஆகிய ஊர்களிலிருந்து கிடைக்கப்பெற்ற

செப்பேடுகளான ஆரம்பத்தில் ''த்ருஷ்டம்'' என்று ஒரு சொல் காணப்படுகிறது. இச்சொல்லுக்குச் 'சரி பார்க் கப்பட்டது' என்று பெர்ருள் கொள்கிறனர். அவ்வா றாயின் மன்னன் வெளியிட்ட ஒவ்வொரு செப்பேடும் நன்கு ஒப்பிட்டுச் சரிபார்க்கப்பட்ட பின்னரே வெளி யிடப்பட்டது என்பது தெளிவாகிறது.

செப்பேட்டில் மங்கலச் சொற்கள்:

மயிதவோலு, ஹிரஹடஹல்லி, குணபதேயச் செப் பேடுகள் 'சித்தம்' என்ற மங்கலச் சொல்லைக் குறித்து விட்டு மற்ற செய்தியைத் தெரிவிக்கின்றன. சித்தம் என்றால் ''காரியத்தில் வெற்றி கிட்டட்டும்'' என்று பொருள். இந்தச் சொல் காத்யாயனம் காலத்தில் வழக்கிலிருந்ததாகத் தெரிகிறது. இந்தச் செப்பேடு களுக்குக் காலத்தால் பிந்தியதான சமஸ்கிருதச் செப் பேடுகளில் 'ஜிதம் பகவதா' என்ற சொல்லோடு 'ஸ்வஸ்திஸ்ரீ' என்ற மங்கலச் சொல் காணப்படுகிறது. 'ஸ்வஸ்திஸ்ரீ' என்ற சொல்லுக்கு மங்களம் உண்டாகட் டும் என்று பொருள் கூறப்பட்டு வருகிறது. இதைவிட மிகப் பொருத்தமான சொல் ''அருளிச் செயல்'' என்ற சொல் தமிழ்க் கல்வெட்டுக்களில் காண முடிகிறது. வேலூர்பாளையம் செப்பேட்டின் தமிழ்ப் பகுதியில் 'ஸ்வஸ்திஸ்ரீ நமஸ்ஸிவாய' என்ற மங்கலச் சொல் காணப்படுவது இந்த ஒரு செப்பேட்டில்தானாகும். இச்செப்பேடுகளின் தமிழ்ப் பகுதி பெரும்பாலும் ''கோவிசைய'' என்றே ஆரம்பமாகின்றன. ராயக் கோட்டை, புல்லூர் செப்பேடுகளில் 'ஸ்வஸ்திஸ்ரீ கோவிசைய' என்று ஆரம்பிக்கப்படுகிறது. காசாக் குடிச் செப்பேட்டின் தமிழ்ப் பகுதி 'கோன் ஓலை' என்று ஆரம்பமாகிறது. இம்முறை பிற்காலத்தில் கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் 'சோழகோன் ஓலை' என்று காணப்படுகிறது.

**பாண்டியர் காலச் செப்பேடுகள்:**

இதுவரையில் பாண்டிய மன்னர்களைச் சார்ந்ததாகக் கிடைத்துள்ள செப்பேடுகள் ஆறு ஆகும். இந்த ஆறு செப்பேடுகளும் பாண்டிய நாட்டுப் பகுதியிலேயே கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் மூன்று செப்பேடு (வேள்விக்குடி, 40. சீவாமங்கலம், 41. சின்னமனூர் சிறிய செப்பேடு 42.) ஜடிலவர்மன் பராந்தக நெடுஞ்சடையனுடைய காலத்தையும், ஒன்று (தளவாய்புரம் 43.) பராந்தக வீரநாராயணனுடைய காலத்தையும், ஒன்று (சின்னமனூர் பெரிய செப்பேடு 44.) இராஜசிம்மன் காலத்தையும், ஒன்று (சிவகாசி 45.) வீரபாண்டியனின் காலத்தையும் சேர்ந்ததாகும்.

**ஆரியமும், தமிழும்:**

இச்செப்பேடுகள் அனைத்திலும் முற்பகுதி சமஸ்கிருதத்திலும், பிற்பகுதி தமிழிலும் உள்ளன. சமஸ்கிருதப் பகுதி கிரந்த எழுத்திலும், தமிழ்ப் பகுதி வட்டெழுத்திலும் எழுதப்பட்டுள்ளன. பல்லவர் செப்பேடுகளைப் போலவே சமஸ்கிருதப் பகுதியில் கடவுள் வாழ்த்தும், பாண்டியர் குலம் தோன்றிய முறையும் கொடை அளித்தோனுடைய முன்னோர்களின் வரன் முறையும், கொடை அளித்தவனின் சிறப்பும், கொடையைப் பற்றிய சிறு குறிப்பும் காணப்படும். தமிழ்ப் பகுதியில் பல்லவர் செப்பேடுகளுக்கும், பாண்டியர் செப்பேடுகளுக்கும் வேறுபாடு உணர முடிகிறது.

**தமிழ்ப் பகுதியில் மங்கலச் சொல் காணாமை:**

பாண்டியர் செப்பேடுகளின் தமிழ்ப் பகுதி எந்த வித மங்கலச் சொல்லும் இல்லாமல் தொடங்குகின்றது. இச்செப்பேடுகளின் சமஸ்கிருதப் பகுதியில் கொடை அளிக்கும் முன்னோர்களைக் குறிப்பது

போன்றே தமிழ்ப் பகுதியிலும் குறிக்கப் பெற்றிருப்பது 46. பல்லவர் செப்பேடுகளில் காண முடியாத ஒன்றாகும். பாண்டியர் செப்பேடுகளின் தமிழ்ப் பகுதியில் ஒவ்வொரு மன்னனுடைய வெற்றிச் சிறப்புக்களும் விரிவான முறையில் தரப்பட்டுள்ளன. 47. இவைதான் பிற்காலத்தில் ஆண்ட சோழ மன்னர்களின் மெய்க் கீர்த்திப் பகுதிகளுக்கு உதாரணங்களாக அமைந்திருத்தல் வேண்டும்.

ஆண்டு குறிப்பிடும் முறை:

தமிழ்ப் பகுதியில் கொடை அளிக்கும் மன்னனின் ஆண்டு குறிப்பிடப்படும் முறையும் புதுமையாக உள்ளது. தளவாய்புரச் செப்பேட்டில் ''தன் செங்கோல் யாண்டு நாற்பதின்மேல் மூன்றோடீர் யாண்டில்'' 48. என்று கூறப்பட்டுள்ளது. சின்னமனூர்ப் பெரிய செப்பேடு ''ராஜ்யவர்ஷம் இரண்டாவதனெதிர் பதினான்காம் யாண்டில்''49. என்று குறிக்கிறது.

தமிழ்ப் பகுதி தரும் விளக்கம்:

பாண்டியர் செப்பேடுகளின் தமிழ்ப் பகுதியில் அரசன் அக்கொடையை அளிக்கும் போது எங்கு தங்கியிருந்தான், யார் வேண்ட அக்கொடை அளிக்கப்பட்டது, யார் ஆணத்தியாக இருந்தான், பிடியை நடத்திச் சென்றவர் யார், தமிழ்ப் பகுதியைப் பாடிய கவிஞர் யார், அதைச் செப்பேட்டில் எழுதிய கொல்லன் யார் போன்ற செய்திகள் தெளிவாகத் தரப்பட்டுள்ளன.

கவிதை நடை:

இத்தமிழ்ப் பகுதி பெரும்பாலும் கவிதை நடையிலேயே காணப்படுகிறது. இப்பகுதியைப் பாடிய கவிஞன் நிலக்கொடை போன்றவை அளிக்கப்பட்டு சிறப்பிக்கப்பட்டிருக்கிறான். வேள்விக்குடிச் செப்

பேட்டில் தமிழ்ப் பகுதியைப் பாடியவன் ''இப் ப்ரஸ்ஸ்தி பாடின சேனாதிபதி ஏனாதி ஆஇன சாத்தஞ் சாத்தற்கு'' 50. என வரும் தொடரால் சாத்தஞ்சாத் தன் என்பது அறியப்படுகிறது. அத்தோடு அவனுக்கு ''மூன்று கூற்றாருமாய்த் தங்களோடொத்த நான்கு படாகாரங் கொடுத்தார்'' 51. என்ற செய்தியும் புல னாகிறது. தளவாய்புரச் செப்பேடு ''சீரிய செழும் பணி இதற்குச் செப்பேடு ஆரியம் விராய்த் தமிழ் தொடுத்த மதியோராக'' தேர்மிகுமாக்கடற்றானைத் தென்னவர் கோன் திருவருளாற் சீர்மிகு செப்பேட்டுக் குச் செந்தமிழ்ப் பாத்தொடை செய்தோன் அத்புத மெனும் பாழிக்கண் அவிர்சடைமுடி அரன்வேண்ட நற்பரசு நிர்மித்தவனளிர் சடைமேலலங்கல் பெற்ற மாமுனி மநுவழி வந்தோன் பாமரு பண்டித தாஸன் பொன்வரன்றி மணிவரன்றி அகில்வரன்றிக் கரை பொரு புனற் றென் வையைகை வளநாடன் செழுங்குண் டூர் நகர்த் தோன்றல் பாண்டித் தமிழாபரண னென் னும் பலசிறப்பும் பெயரெய்திய பாண்டி மாராயப் பெருங்கொல்லனாகிய சிரீவல்லவன்'' 52. என்று கூறு கிறது. இவனுக்கு இறையிலியாக நிலம் அளிக்கப் பட்ட செய்தியும் தெரிய வருகிறது. 53.

*பிரஸஸ்தி, பிரஸஸ்தி சேஷம் :*

செப்பேடுகளில் சமஸ்கிருதப் பகுதியின்பிரஸஸ் திக்குத்தான் ''பிரஸஸ்தி'' என்றும், தமிழ்ப் பகுதியின் பிரஸஸ்திக்குப் ''பிரஸஸ்திசேஷம்'' என்றும் பெயர் வழங்கியிருக்கிறது 54. தளவாய்புரச் செப்பேட்டில் பிரஸஸ்தியை இயற்றியவன் ''ஸ்ரீவல்லப மங்கலத்தில் வசிப்பவனும், வாக்காளனுமான மாதவிகவி'' என் றும்; பிரஸஸ்திசேஷத்தை இயற்றியவன் ''பாண்டிய த்ரமிடர்களுக்கு அலங்காரமானவனும், கருமார் கூட் டத்தில் முக்கியனும் சிவபாத தாமரையைத் தியானிப்ப

வனுமான கவி என்றும் கூறப்பட்டுள்ளது. இவனையே தமிழ்ப்பகுதி ''பாண்டித் தமிழாபரணர் என்னும் பல சிறப்பும் பெயரெய்திய பாண்டிமாராய்ப் பெருங் கொல்லனாகிய சிரீவல்லன்'' என்று தெரியப்படுத்து கிறது.

*பிரஸஸ்தி பாடியவர்கள்:*

சின்னமனூர்ப் பெரிய செப்பேட்டின் பிரஸஸ் தியை ''கலைகளனைத்தும் கற்றவனும், அடக்கம், நீதி இவற்றின் பிறப்பிடமுமான விஷ்ணு என்பவரின் முன் தோன்றலும் மதுரகுணனின் நண்பனுமான வாசு தேவன் என்பவன் 55. இயற்றியிருக்கிறான். சிவ காசிச் செப்பேட்டின் பிரஸஸ்தியை ''நல்ல கவிதைக்கு இருப்பிடமானவனும், பிருகஸ்பதி போன்றவனுமான ரவி என்பவனின் பேரனும், சாத்திர ரீதியான புகழ் மிக்க விஷ்ணுத்ராதர் என்பவர் புத்திரனும், அந்தம் என்ற கிராமத்தில் பிறந்தவனும், இந்த அரசனுக்குத் தர்மோபதேசம் செய்யும் குருவுமான பார்த்திவகேஸரி என்ற கவி இயற்றினான் 56. என்று பெறப்படுதிறது.

*செப்பேட்டை எழுதியவர்கள்:*

இச்செப்பேடுகளின் தமிழ்ப் பகுதியில் அவற்றை எழுதிய கொல்லர்களின் பெயரும் காணப்படுகிறது. வேள்விக்குடிச் செப்பேட்டை யுத்தகேசரிப் பெரும் பணைகாரன் என்பவனும் 57. சின்னமனூர்ச் சிறிய செப்பேட்டைப் பாண்டிப் பெரும்பணைகாரன் மகன் அரிகேசரி என்பவனும் 58. தளவாய்புரச் செப் பேட்டை ''இச்சானத்திற்குச் செழுந்தமிழ்ப் பாடினோன் தந்தை நிருபசேகரப் பெருங்கொல்லன் நிறை புகழ் நக்கன்'' 59. என்பானும் எழுதியுள்ளனர். ஸ்ரீவரமங் கலச் செப்பேட்டை எழுதியவனும், சின்னமனூர்ச் சிறிய செப்பேட்டை எழுதியவனும் ஒருவனாகக் காணப்படுவதால் இரண்டு செப்பேடுகளும் பராந்த

நெடுஞ்சடையனைச் சேர்ந்தவை என்பது ஐயமற புல னாகிறது. பெரும்பணைகாரன் என்பதற்குப் பெரிய கொல்லு பட்டறையை உடைய கொல்லன் என்று பொருள் கொள்ளலாம்.

சமஸ்கிருதப் பகுதியில் சில புதுமை:

இச்செப்பேடுகளில் தளவாய்புரச் செப்பேடு, சின் னமனூர் பெரிய செப்பேடு, சிவகாசிச் செப்பேடு ஆகியவற்றில் சமஸ்கிருதப் பகுதியிலும் யாருக்குக் கொடையளிக்கப்பட்டது, கொடையளிக்கப்பட்ட் நிலம் எங்கு அமைந்துள்ளது, யார் யார் அதிகாரி களாக இருந்தார்கள் என்ற செய்திகள் தரப்பட்டுள்ளன. இது பல்லவர் செப்பேடுகளின் சமஸ்கிருதப் பகுதி யில் காணமுடியாதவை. ஏன், பாண்டியன் செப்பேடு களான வேள்விக்குடிச் செப்பேடு, ஸ்ரீவரமங்கலச் செப்பேடு, சின்னமனூர் சிறிய செப்பேடு ஆகியவற் றில் கூட காணமுடியவில்லை. ஆகவே சமஸ்கிருதப் பகுதியில் கொடை அளிக்கப்பட்ட நிலம் பற்றிய செய்தி சேர்க்கப்பட்டது. கி.பி. 9-ஆம் நூற்றாண்டி லிருந்து என்று கொள்ளலாம்.

இலக்கியச் செய்திக்குச் செப்பேட்டுச் சான்று:

இச்செப்பேடுகளின் தமிழ்ப் பகுதியில் சங்ககாலப் பாண்டியர்கள் ஓரிருவர் குறிக்கப்படுகின்றனர். அத் தோடு அவர்களின் சிறப்பும் புகழப்பட்டுள்ளது. ''கொல்யானை பலவோட்டிக் கூடா மன்னர் குழாந் தவிர்த்த பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்ட்யாதிராஜன்'' 60. என்று வேள்விக்குடிச் செப்பேடு பாண்டிய மன்னன் முதுகுடுமிப் பெருவழு தியைக் குறிக்கிறது. சின்னமனூர்ச் சிறிய செப்பேடு பாண்டிய மன்னருள் ஒருவன் ''ஓராயிரம் க்ருது செய் தான்'' என்று தெரிவிக்கிறது. இச்செய்தி பாண்டியன்

முதுகுடுமி வேள்வி செய்ததைத் தெரிவிப்பதாகவே கருத வேண்டியுள்ளது. சங்க இலக்கியங்களுள் ஒன்றான மதுரைக்காஞ்சி முதுகுடுமி பெருவழுதியை ''பல்சாலை முதுகுடுமி'' என்று பகர்கிறது 61. சாலை என்பது வேள்விச்சாலை ஆகும். எனவே, இலக்கியம் வாயிலாகக் கேள்விப்பட்ட செய்தி செப்பேட்டு வாயிலாகவும், உறுதிப்படுத்தப்படுகிறது. அத்தோடு செப்பேடும் உண்மையான நிகழ்ச்சியைத் தெளிவுறுத்துகிறது என்பது தீர்மானிக்கப்படுகிறது.

ஆலங்கானத்து அமர்:

பாண்டியர்களின் முன்னோர் சிறப்புக்களைக் கூறுமிடத்தில் ''ஆலங்கானத் தமர்வென்று ஞாலங் காவல் நன்கெய்தியும்'' 62. என்று தளவாய்புரச் செப்பேடும், ''தலை ஆலங்கானத்திற் றன்னொக்கு மிரு வேந்தரைக் கொலை வாளிற் றலைதுமித்துக் குறைத் தலையின் கூத்தொழித்தும்'' 63. என்று சின்னமனூர் பெரிய செப்பேடும் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பற்றி பேசுகின்றன.

அருந்தமிழ் நற்சங்கம்:

மதுரை மாநகர் ஏற்படுத்தப்பட்டதும் அங்கு சங்கம் அமைக்கப் பெற்றிருந்ததும், அச்சங்கத்தில் மாபாரதம் தமிழ்ப்படுத்தப்பட்டதும் ''தென்மதுராபுரஞ்செய்தும் அங்கதனில் லருந்தமிழ் நற்சங்கம் இரீஇத் தமிழ் வளர்த்தும்'' 64. என்று தள்வாய்புரச் செப்பேடும்; ''மஹா பாரதத் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்'' 65. என்று சின்னமனூர் பெரிய செப்பேடும் புலப்படுத்துகின்றன மதுரையில் சங்கம் அமைக்கப் பட்டிருந்தது என்று கூறப்பட்டு வந்த இலக்கியச் செய்திகள் நிரூபிக்கப்படுகின்றன.

மதுரைக் காஞ்சியும், தளவாய்புரச் செப்பேடும்:

தளவாய்புரச் செப்பேட்டின் தமிழ்ப் பகுதியைப் பாடிய, "பாண்டித் தமிழாபரண னென்னும் பல சிறப்புப் பெயரெய்திய பாண்டிமாராயப் பெருங் கொல்லனாகிய சிரீவல்லவன்" பத்துப்பாட்டுள் ஒன்றாகிய மதுரைக் காஞ்சியைச் சுவைத்துச் சுவைத்துப் படித்திருப்பான் போல் தோன்றுகிறது. தமிழ்ப் பகுதியின் தொடக்கமே மதுரைக் காஞ்சியின் தொடக்க வரியாகிய "ஓங்குதிரை வியன் பரப்பில்" 66. என்று ஆரம்பமாகிறது. இப்பகுதியின் இறுதி வரிகளிலும், மதுரைக் காஞ்சியின் முத்திரையை உணர முடிகிறது.

பகல் செய்யும் வெண்ஞாயிறும்,

இரவுச்-செய்யும் வெண் திங்களும்:

கொடை அளிக்கின்றவன், தான் அளிக்கின்ற அக் கொடை 'சந்திராதித்ய வரை' நிலை பெற்றிருக்கும் என்று கூறி அளிப்பதுதான் வழக்கமாகக் கல்வெட்டுக் களில் காண முடிகிறது. அதையே கூறவந்த இக்கவிஞன் 'சந்திராதித்யவரை' என்ற அச் சொல்லுக்கு பதிலாகத் தம் மனத்தில் அலை மோதிக் கொண்டிருந்த மதுரைக் காஞ்சியின் வரிகளாகிய 'பகற் செய்யும் வெண்ஞாயிறும் இரவுச் செய்யும் வெண்திங்களும்' 67. என்ற பகுதியை அப்படியே "பகல்செய்யும் பருதி ஞாயிறும் இரவுச் செய்யும் பனிமதிஉம் ஞாலமும் உளவளவும்" 68. என்று தந்திருக்கிறான். எனவே அவன் தன்னைத் 'தமிழாபரணன்' என்று கூறிக் கொள்வது பொருத்த முடையதுதான் என்பதைச் சொல்லாமல் சொல்லி விடுகிறான்.

ஆரியம் விராய்த் தமிழ்:

இத்தமிழ்ப் பகுதியில் ஆங்காங்கே வடமொழிச்

சொற்கள் வருமிடங்களிலெல்லாம் கிரந்த எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இதைத் தளவாய்புரச் செப்பேடு ''ஆரியம் விராய்த் தமிழ்'' என்று கூறிச் செல்கிறது 69. இவ்வாறு எழுதுவது மிகவும் சிறந்தது என்று கருதப்பட்டது போன்று காணப்படுகிறது. இம்முறைதான் பிற்காலத்தில் (விஜயநகர் காலத்தில்) மணிப்பிரவாள நடை என்று வழங்கி வந்தது போலும்!

***பல்லவர் செப்பேடுகளில் தமிழ்ப் பகுதியில் பிரஸஸ்தி பகுதி இருந்திருந்தால்:***

பாண்டியர் செப்பேடுகளில் காணப்படுவது போன்று பல்லவர் செப்பேடுகளிலும் 'ப்ரஸஸ்தி ஸேஷம்' பகுதி (தமிழ்ப் ப்ரஸஸ்தி) இருந்திருந்தால் பல்லவர்களைப் பற்றிய தெளிந்த வரலாறு கிடைத்திருக்கும். பல்லவர் செப்பேடுகளின் தமிழ்ப் பகுதி தேர்ச்சி பெற்ற புலவர்களால் இயற்றப்படவில்லை. காரணம், புலவர்கள் எழுதுமளவுக்கு செய்திகள் தமிழ்ப் பகுதியில் சேர்க்கப்படவில்லை. தமிழ்ப் பகுதி சாதாரணமாகக் கொடை அளிக்கப்பட்ட நிலத்தையும், அதன் எல்லைகளையும், யார் யாருக்கு எவ்வளவு பங்கு என்ற விவரத்தையும் தெரிவிப்பனவாகவே காணப்படுகிறது. அதே நேரத்தில் அவர்கள் செப்பேடுகளின் சமஸ்கிருதப் பகுதி சிறந்த கவிஞர்களால் இயற்றப்பட்டிருக்கிறது. ஆகவேதான் அப் பகுதியில் பல்லவர்களின் பரம்பரையை ஓரளவு தெரிந்து கொள்ள ஏதுவாகிறது. பல்லவர் செப்பேடுகளின் தமிழ்ப் பகுதியில், பாண்டியர் செபபேடுகளில் காணப்படுவது போன்ற தமிழ்ப் பிரஸஸ்தி பகுதி சேர்க்கப்பட்டிருந்தால், பல்லவர்கள் யார், அவர்களுக்கும், தமிழ் நாட்டுக்கும் உள்ள உறவு என்ன, இலக்கியங்களில் கூறப்படும் கதைகளுக்கும், அவர்களுக்

கும் உண்மையிலே தொடர்பு உண்டா என்ற கேள்வி களுக்குச் சிறந்த விளக்கம் கிடைத்திருக்கும்.

## சோழர் காலச் செப்புப் பட்டயங்கள்

சோழர் காலச் செப்புப் பட்டயங்கள் இதுவரை 17 கிடைத்துள்ளன. இவற்றில் காலத்தில் மிகவும் பழமையானது உதயேந்திரத்தில் கிடைத்துள்ள முதலாம் பராந்தகனின் செப்பேடாகும். 1. இச்செப்பேட்டை அண்மைக்காலம் வரை கங்க மன்னன் இரண்டாம் பிருதிவிபதியனுடையது என்றே குறித்து வந்தனர். ஆனால் தற்பொழுது இது முதலாம் பராந்தகனுடையதுதான் என்பது உறுதியாகி விட்டது. 2. இச்செப்பேடு பராந்தகச் சோழனின் 15-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டிருக்கிறது. இச்செப்பேட்டை அடுத்து இதே மன்னனின் வேலஞ்சேரி செப்பேட்டைக் குறிப்பிடுதல் வேண்டும். 3. இது பராந்தகச் சோழனின் 25-ஆம் ஆட்சி ஆண்டில் எழுதப்பட்டிருக்கிறது. இதனையடுத்த சுந்தர சோழன் காலத்திய அன்பில் செப்பேட்டைக் குறிப்பிடுதல் வேண்டும். 4. இச்செப்புப் பட்டயம் சுந்தர சோழனின் நான்காம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்டிருக்கிறது. இம்மன்னன் முதலாம் இராஜராஜனின் தந்தையாவான். அடுத்து வரிசையில் வைத்து எண்ணத்தக்கது பள்ளன்கோயில் செப்புப் பட்டயமாகும். 5. இது சுந்தர சோழன் காலத்தியதாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. தற்பொழுது இச்செப்புப் பட்டயம் தமிழ்நாடு அரசு, தொல்பொருள் ஆய்வுத் துறையில் உள்ளது. இது

முழுமையாக இல்லை. பதின்மூன்றாம் ஏட்டின் முதல் பக்கத்திலிருந்து இருபத்து மூன்றாம் பக்கத்தின் இரண் டாம் பக்கம் வரை உள்ளன. சென்னை அருங்காட்சிய கத்தில் உத்தம சோழன் காலத்திய செப்புப் பட்டயம் உள்ளது. 6.

முதலாம் இராஜராஜன் காலத்தைச் சார்ந்த பெரிய லெயிடன் செப்பேடு என்னும் ஆனைமங்கலச் செப்பேட்டை அடுத்ததாகக் குறிப்பிடுதல் வேண்டும். 7. இச்செப்பேடு ஹாலந்து நாட்டில் உள்ள லெயிடன் பல்கலைக்கழக அருங்காட்சியகத்தில் வைத்துப் பாது காக்கப்பட்டு வரப்படுகிறது. மொத்தம் இருபத்தொரு ஏடுகளைக் கொண்டதாக இது விளங்குகிறது. முத லாம் இராஜராஜனின் 21-ஆம் ஆட்சியாண்டில் எழுதப்பட்டுள்ளது.

இதனையடுத்து முதலாம் இராஜேந்திரன் காலத் திய திருவாலங்காட்டுச் செப்பேட்டைக் 8. குறிப்பிட லாம். முதலாம் இராஜேந்திர சோழனுடைய ஆறாம் ஆட்சியாண்டில் வெளியிடப்பட்டுள்ளது. இச்செப் பேட்டுக்கு அடுத்து வரிசை முறையில் வைத்துக் கருதத் தக்கது கரந்தைத் தமிழ்ச் சங்கச் செப்பேடு ஆகும். 9. இதுவும் முதலாம் இராஜேந்திரன் காலத் தில் வெளியிடப்பட்டது. இப்பட்டயம் ஐம்பத்தேழு ஏடுகளைக் கொண்டது. இவ்வேடுகள் மூன்று பிரிவு களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. முதல் மூன்று ஏடுகள் சமஸ்கிருதப் பகுதியையும், அடுத்த இருபத்திரண்டு ஏடுகள் அளிக்கப்பெறும் கொடையைப் பற்றிக் குறிப் பிடும் தமிழ்ப் பகுதியையும், அடுத்த முப்பத்திரண்டு ஏடுகளில் கொடையைப் பெறும் பிராமணர்கள், கோயில்கள், வழிபாடுகள் ஆகியவைகளைத் தெரிவிக் கும் பகுதியையும் காண முடிகிறது. இம்மூன்று பகுதி களுமே தனித்தனியாக எண்கள் இடம் பெற்றுள்ளன.

இச்செப்பேட்டில் காணப் பெறும் ஒரு சிறப்பு அம்சம் தமிழ் எழுத்தில் காணப்பெறும் இரண்டாம் மற்றும் மூன்றாம் பகுதியில் உள்ள ஏடுகளில் முதற் பக்கத்தில் 'த்ருபு' அல்லது 'திரிபு' என்று எழுதப் பெற்றிருப்ப தாகும். இச்சொல் திரிபுவனச் சதுர்வேதிமங்கலம் என்னும் ஊர் ஏற்படுத்தப்படுவதற்காக இச்செப்பேடு வெளியிடப்படுகிறது என்பதைத் தெரிவிப்பதாகும். அடுத்துக் கருதத்தக்கது இம்மன்னனது திருக்களர்ச் செப்பேடாகும். 10. முதலாம் இராஜாதிராஜன் காலத்திய திருக்களர் செப்பேடு அடுத்து இடம் பெறு கிறது. 11.

வீரராஜேந்திரன் காலத்தில் வெளியிடப்பெற்ற சராலா செப்புப் பட்டயத்தை 12. இதற்கு அடுத்ததா கக் கூறலாம். இதனையடுத்து வருவது, முதலாம் குலோத்துங்கன் காலத்தில் எழுதப்பெற்ற சிறிய லெயிடன் செப்பேடு. 13. இம்மன்னன் காலத்திய மற் றொரு செப்பேடு திருக்களர்ச் செப்பேடாகும். 14. காலக் கணக்கில் இச்செப்பேட்டை அடுத்ததாகத் திரி புவனச் சக்கரவர்த்திகள் இராஜராஜதேவன் காலத்தில் வெளியிடப்பெற்ற திருக்களர்ச் செப்பேட்டைக் கூற லாம். 15. இதற்கு அடுத்து மூன்றாம் குலோத்துங்கன் காலத்தைச் சார்ந்த திருக்களர்ச் செப்பேட்டையும் 16, இதனையடுத்து இராஜகேஸரிவர்மன் காலத்தைச் சேர்ந்த இரண்டு செப்பேடுகளையும் 17. கூறலாம். கடைசியாகக் கூறப்பெற்ற இரு செப்பேடுகளும் திருச் செங்கோட்டிலிருந்து கிடைக்கப் பெற்றவையாகும். ஆக மொத்தம் பதினேழு செப்பேடுகள், சோழர் காலத்தைச் சார்ந்ததாக இதுவரை கிடைத்துள்ளன.

உதயேந்திரம் செப்பேடு: (முதலாம் பராந்தகன் காலம்)

இச்செப்பேட்டில் சமஸ்கிருதம், தமிழ் ஆகிய இரு பகுதிகள் உள்ளன. சமஸ்கிருதப் பகுதி முதல் ஐந்து ஏடுகளிலும், தமிழ்ப் பகுதி இரு ஏடுகளிலும் எழுதப் பெற்றுள்ளன. சமஸ்கிருதப் பகுதி கிரந்த எழுத்திலும், தமிழ்ப் பகுதி தமிழ் எழுத்திலும் காணப்படுகின்றன. இச்செப்பேட்டின் சமஸ்கிருதப் பகுதியில் புராண காலத்துச் சோழ முன்னோர்களைப் பற்றியும், சங்க காலத்துச் சோழ மன்னர்கள் பற்றியும், பின்னர், பராந்தகச் சோழனின் பாட்டன், தந்தை ஆகி யோரைப் பற்றியும் காண முடிகிறது. பிரமன், மரீசி, காஸ்யப, சூரியன், ருத்ரஜித், சந்த்ரஜித், சிபி ஆகி யோர் புராண காலச் சோழ முன்னோர்களாகக் குறிக் கப்படுகின்றனர். கோக்கிள்ளி சோழன், கரிகாலன், கோச்செங்கன் ஆகியோர் சங்க காலச் சோழர்களாக வும், விஜயாலயன், ஆதித்தன் ஆகியோர் பராந்தகச் சோழனின் பாட்டன், தந்தை ஆகியவர்களாகவும் பேசப்படுகின்றனர்.

அதற்குப் பின்னர் பராந்தகனின் சிற்றரசனான கங்க மன்னன் இரண்டாம் பிருதிவிபதியின் முன் னோர் வரிசை குறிக்கப்படுகிறது.

தமிழ்ப் பகுதி ''மதிரை கொண்ட கோப்பரகேசரி வர்மர்க்கு யாண்டு பதினைந்தாவதற்கு என்று தொடங்குகிறது. செம்பியன் மாவலிவாணராயர் விண்ணப்பத்தால் பெருமானடிகள் (முதலாம பராந் தகன்) தம் பெயரால் பிரமதேயம் ஏற்படுத்தியதைக் குறிக்கிறது. படுவூர்க் கோட்டத்து மேலடையாறு நாட்டுக் கடைக் கோட்டூரை உதயச் சந்திரமங் கலத்தோடு இணைத்து வீரநாராயணச்சேரி என்று பிரமதேயமாக்கி, அதன் எல்லை விவரங்களையும் தெரிவித்து எழுதப்பட்டிருப்பதை இச்செப்பேடு புலப்படுத்துகிறது.

**வேலஞ்சேரி செப்புப் பட்டயம்: (முதலாம் பராந்தகன் காலம்)**

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையால் 1977-ஆம் ஆண்டு, வேலஞ்சேரியில், முதலாம் பராந்தகன் காலத்தியச் செப்பேடு கண்டுபிடிக்கப் பட்டது. இச்செப்பேட்டோடு, பல்லவ மன்னன் அபராஜிதன் காலத்தைச் சார்ந்த மற்றொரு செப்பேடும் கண்டறியப்பட்டது. 18. இரண்டு செப்பேடுகளுமே முறையே சோழர், பல்லவர் வரலாற்றில் பல புத்தொளியைப் பாய்ச்சியுள்ளன. குறிப்பாகப் பராந்தகன் காலத்திய செப்பேட்டின் மூலம் பல புதிய செய்திகளைப் பெற முடிகிறது.

சங்க காலச் சோழன் கரிகாலன் இமயத்தில் புலிச் சின்னம் பொறித்ததையும், காஞ்சி மாநகரை வென்றதையும், அங்கே பல வியத்தகு அரண்மனைகள் அமைத்ததையும், கோச்செங்கண்ண மன்னர் சிலந்தி கதையையும் தெரிவிக்கிறது. இதுவரை எந்த செப்பேடும் கூறாத மற்றொரு புதிய செய்தியையும் இது குறிக்கிறது. அதாவது விஜயாலயச் சோழனின் தந்தையாக ஒற்றியூரன் என்னும் அரசனைக் குறிப்பிடுவதாகும். அஃதன்றி இச்செப்பேட்டை வெளியிட்ட பராந்தகச் சோழன் கன்னியாகுமரி, இராமேஸ்வரம் மற்றும் ஸ்ரீரங்கம் ஆகிய இடங்களில் துலாபாரம் செய்ததாகவும் விவரிக்கிறது.

வழக்கம் போலவே இச்செப்பேடும் சமஸ்கிருதம், தமிழ் என்ற இரு பகுதிகளைக் கொண்டு விளங்குகிறது. இரு பகுதிகளுமே பொதுவாகப் பராந்தகன் அளித்த கொடையைத் தெரிவிக்கின்றன. தமிழ்ப் பகுதி இக்கொடையை விரிவாகக் குறிப்பிடுகிறது. தாலைவேடு, மயங்காடு, கிலகல் ஆகிய கிராமங்களைப் பிரமதேயமாக, மேலிருஞ்செறுவில் உள்ள வேத வேதாந்தங்

களில் தேர்ந்தவர்களான பிராமணர்களுக்கு வழங்கியதைத் தெரிவிக்கிறது.

*அன்பில் செப்பேடு : (சுந்தர சோழன் காலம்)*

வேலஞ்சேரி செப்புப் பட்டயம் கிடைக்கும் வரையிலும், உதயேந்திரம் செப்புப் பட்டயத்தைப் பராந்தகன் செப்புப் பட்டயம் என்று எற்றுக் கொள்ளமுற்பட்டதற்கு முன்பு வரையிலும், அன்பில் செப்பேடுதான் சோழர்கள் காலத்திய செப்பேடுகளில் பழமையானது என்று கருதப்பட்டு வந்தது. அன்பிலைச் சேர்ந்த நாராயண அநிருத்த பிரம்மாதிராஜர் என்பவருக்கு, திருவழுந்தூர் நாட்டில் உள்ள நன்முழான்குடி என்னும் ஊரைச் சேர்ந்த நிலங்களை ஏகபோக பிரமதேயமாக இராஜகேசரி சுந்தர சோழன் அளித்ததை இச்செப்பேடு தெரிவிக்கிறது. ஏகபோக பிரமதேயமாக அளிக்கப்பட்டது என்பதிலிருந்து பிராமணர்களின் சுய அனுபவத்துக்கே வழங்கப்பட்டது என்றும், அரசுக்கு எவ்வித இறையும் அளிக்க வேண்டாம் என்றும் உணரப்படுகிறது. இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் ''சர்வ பரிஹாரம்'' (வரி 181) என்னும்சொல் செப்பேட்டில் பயன்படுத்தப்பட்டிருப்பது கருத்தில் கொள்ளத் தக்கதாகும்.

*திருச்செங்கோடு செப்பேடுகள் :*

*(சுந்தர சோழன் காலம்)*

திருச்செங்கோட்டிலிருந்து இரண்டு செப்புப் பட்டயங்கள் கிடைத்திருக்கின்றன. முதல் பட்டயம் இரு பகுதிகளாக உள்ளன. இரு பகுதிகளும் முதல் ஏட்டின் இரண்டு பக்கங்களிலும் எழுதப்பட்டிருக்கின்றன. இப்பட்டயம் கோவி ராஜகேசரிவர்மனின் 10-ஆம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது.

மழவரையன் சுந்தர சோழன் என்பான் தூசியூர்

நகரத்தாரிடமிருந்து முழு மனைக்கு கால் (காசும்), அரை மனைக்கு அரைக்கால் (காசும்) இறை வசூலிப் பது என்றும், இறை கொடுக்க மறுத்தவர்கள் மீது நந்திபுரத்தில் வழக்கில் உள்ளவாறு தண்டம் வசூலிக் கப்படும் என்றும் தெரிவிக்கிறது.

இப்பட்டயத்தில் குறிக்கப் பெறும் இராஜகேசரி முதலாம் இராஜராஜனாக இருக்கலாம் என்று கூறப் பட்டுள்ளது. ஆனால் எழுத்தமைதியைக் கொண்டும், மழவரையன் சுந்தர சோழன் என்ற பெயரில் அதிகாரி ஒருவன் குறிக்கப்படுவதாலும் இம்மன்னன் சுந்தர சோழன் என்று கொள்வதே சரியானதாகத் தோன்று கிறது. இப்பட்டயத்தின் இரண்டாம் பகுதி, கொல்லி மழவன் பிரதிகண்டன் சுந்தர சோழன் தம் தந்தை ஈழத்தில் இறந்து விடவே அவர் (ஸ்ரீமதாஹத்துக்கு) நீர் வேட்கையைத் தணிப்பதற்குத் தூசியூர் திருக்கற்றளி பரமேஸ்வரர்க்கு நிலக்கொடை அளித்ததைக் குறிக் கிறது.

இரண்டாம் பட்டயம் மூன்று ஏடுகளில் எழுதப் பட்டுள்ளன. கோவிராஜகேஸரிவர்மரின் 5-ஆம் ஆட்சி ஆண்டில் எழுதப்பட்டிருக்கிறது. கொல்லி மழவன் ஒற்றியூரன் பிரதிகண்டவர்மன் என்பார், தூசி யூர்த் திருக்கற்றளி திருமூலஸ்தானமுடைய பரமேஸ் வரர்க்கு உதகபூர்வஞ்செய்து கொடுத்த நிலத்தின் எல் லைகளை விவரிக்கிறது இப்பட்டயம்.

முன்பு எழுதப் பெற்றிருந்த சாசனத்தை அழித்து அதே செப்புத் தகடுகளில் இப்பட்டயத்தை எழுதியி ருக்கலாம் என்று இப்பட்டயத்தைப் பதிப்பித்தவர்கள் சந்தேகிக்கின்றனர். 19. அச்சந்தேகம் நியாயத்தின் பாற்பட்டதாகவே தெரிகிறது.

முதல் செப்புப் பட்டயத்தின் முதல் மற்றும் இரண் டாம் பகுதியில் கொல்லிமழவன் பிரதிகண்டன் சுந்தர

சோழன் தூசியூர் நகரத்தாரிடம் இறை வசூலித்தது பற்றியும், தூசியூர் திருக்கற்றளி பரமேஸ்வரர்க்கு நிலக்கொடை அளித்ததைப் பற்றியும் குறிப்பிடப்படுகிறது.

இந்த இரண்டாம் பட்டயத்தில் கொல்லிமழவன் ஒற்றியூரன் பிரதிகண்டவர்மன் நிலக்கொடை அளித்தது குறிக்கப்பட்டுள்ளது. கொல்லிமழவன் ஒற்றியூரன் பிரதிகண்டன் தந்தையாகவும், கொல்லிமழவன் பிரதி கண்டன் சுந்தர சோழன் மகனாகவும் இருக்கலாம் என்று ஊகிக்கலாம். ஆதலால்தான் இரண்டாம் பட்டயம் மன்னனின் 5-ஆம் ஆட்சியாண்டில் வெளியிடப்பட்டிருக்கிறது. 5-ஆம் ஆட்சி ஆண்டில் உயிரோடிருந்த் கொல்லிமழவன் ஒற்றியூரன் பிரதிகண்டன் 10-ஆம் ஆட்சி ஆண்டில் இறந்து விட்டான் போன்று தெரிகிறது. ஆதலால் 10-ஆம் ஆட்சி ஆண்டில் அவன் மகன் கொல்லிமழவன் பிரதிகண்டன் சுந்தர சோழன் குறிக்கப்படுகிறான். அதுமட்டுமல்லாமல் ஈழத்தில் இறந்துபட்ட தன் தந்தை என்று பிரதிகண்டன் சுந்தர சோழன் குறிப்பிடுவது ஒற்றியூரன் பிரதிகண்டனையேயாகும் என்று ஊகிக்கலாம். அவ்வாறெனில் சுந்தர சோழனின் 10-ஆம் ஆட்சி ஆண்டுக்குள் ஈழத்துப் போர் நிகழ்ந்திருக்கிறது என்று கணிக்கவும் வாய்ப்பேற்படுகிறது. சுந்தர சோழனின் 9-ஆம் ஆட்சி ஆண்டு கல்வெட்டு 20. கொடும்பாளூர் சிறிய வேளார் ஈழத்துக்குப் படை நடத்திச் சென்று, அங்கு போரிட்டு அப்போரில் இறந்து விட்டதைத் தெரிவிப்பது நாம் மேலே கொண்ட கருத்தை உறுதிப்படுத்துகிறது.

***பள்ளன் கோயில் செப்பேடு :***

***(சுந்தர சோழன் காலம்)***

இச்செப்புப் பட்டயம் முழுமையாக இல்லாதது.

மற்ற சோழர் காலச் செப்புப் பட்டையங்களைப் போலவே இதிலும் சமஸ்கிருதம், தமிழ் என்று இரு பகுதிகள் இருந்திருக்க வேண்டும். ஆனால் தற்பொழுது கிடைத்துள்ளவற்றில் சமஸ்கிருதப் பகுதியும், தமிழ்ப் பகுதியின் தொடக்கப் பகுதியும் காணப் பெற வில்லை. இச்செப்பேடுகளை நாம் கண்டு பிடித்தல் வேண்டும். இது குறைந்த பகுதியையே உடைய செப் புப் பட்டயம் என்றாலும் ஓரளவுக்குச் செய்தியைத் தரக் கூடியதாக இருக்கிறது.

உம்பள நாட்டில் உள்ள இருமுடி சோழபுரத்து நகரத்தாரிடமிருந்து செலேட்டி குடியன் என்னும் வியாபாரி நிலம் வாங்கி, அதில் சுந்தர சோழப் பெரும் பள்ளி அமைத்து, அப்பள்ளிக்கு இறையிலிப் பள்ளிச் சந்தமாக நிலம் தானம் அளிக்கப் பெற்ற நிலம் இரு வேறிடங்களில் அமைந்திருந்ததாகத் தெரிகிறது. புறங் கரம்பை நாட்டில் உள்ள தனமலிப் பூண்டியைச் சார்ந்த முப்பது வேலி நிலமும், உம்பள நாட்டைச் சேர்ந்த ஊரைச் சார்ந்த நிலம், மிகுதி நிலமாகவும் குறிக்கப் பட்டுள்ளது. உம்பள நாட்டில் எந்த ஊரைச் சார்ந்தது என்பதை அறிய இயலவில்லை.

*சென்னை அருங்காட்சியகச் செப்பேடு :*

*(உத்தம சோழன் காலம்)*

இப்பட்டயம் ஐந்து ஏடுகளைக் கொண்டதாக உள்ளது. மற்ற செப்பேடுகளைப் போலவே இதுவும் சமஸ்கிருதம் தமிழ் என்ற இரு பகுதிகளைக் கொண்ட தாக அமைந்திருக்கிறது. கச்சிப் பேட்டிலிருந்து (காஞ்சிபுரம்) கோப்பர கேசரி வர்மன் உத்தம சோழன், தம் அமைச்சரின் வேண்டுகோளுக்கிணங்க, கச்சிப்பேட்டு விஷ்ணு கோயிலுக்கு முன்பு அளிக்கப் பட்டிருந்த பல கொடைகளைத் தம் ஆட்சியிலும்

உறுதிப்படுத்தி ஆணை வெளியிடப்பட்டதை இச்செப்புப் பட்டயம் புலப்படுத்துகிறது. கூரம் மற்றும் ஆரிய பெரும்பாக்கம் கிராமங்கள் கச்சிப்பேட்டுக் கோயிலிலிருந்து 250 கழஞ்சு கடன் பெற்றதற்கு வட்டியாக ஆண்டு ஒன்றுக்கு 500 காடி நெல் அளிக்க வேண்டும் என்றும், காஞ்சிபுரத்துக்கு அருகிலுள்ள கிராமத்தினர் கோயிலிலிருந்து தாங்கள் வாங்கியிருந்த கடனுக்கு வட்டியாக ஆண்டு ஒன்றுக்கு 5 சதவிகிதம் செலுத்த வேண்டும் என்று தெரிவிக்கிறது.

பெரிய லெய்டன் செப்பேடு:

(முதலாம் இராஜராஜன் காலம்)

இது வரை கூறப் பெற்ற செப்பேடுகளைக் காட்டிலும், இப் பட்டயத்தில் சோழர் குலத்தைப் பற்றியும், கொடை பற்றியும் அதிகமான செய்தியைக் காண முடிகிறது.

சமஸ்கிருதப் பகுதியில், வழக்கம் போலவே சோழர் குலம் எவ்வாறு தோற்றம் பெற்றது என்றும், யார் யார் புராண காலச் சோழ மன்னர்களாகவும், சங்க காலச் சோழ மன்னர்களாகவும் விளங்கினார்கள் என்றும், வரலாற்றுக் காலச் சோழ மன்னர்களின் பரம்பரையில் யார் மகன் யார் என்றும், அவர்களது வீரமிகு செயல்கள் யாவை என்றும் அறிய முடிகிறது. புராணக் காலச் சோழ மன்னர்கள் மனு தொடங்கி, இக்ஷ்வாகு, மசுகுந்தா, வளபா, சிபி சோழன், இராஜ கேசரி, பரகேசரி, சுரகுரு, வியாகரகேது, பஞ்சப என்று புராண காலச் சோழர்களைக் கூறி விட்டு, சங்க கால மன்னர்களான கரிகாலன், கோச்செங்கண்ணான், கோக்கிளியின் வழியில் வந்தவன் விஜயாலயன் என்றும், அவனது மகன் ஆதித்யன் என்றும், அவன் மகன் பராந்தகன் என்றும், அவன் மகன்கள் இராஜாதித்யன், கண்டராதித்யன் மற்றும் அரிஞ்சயன்

என்றும், அரிஞ்சயன் மகன் இரண்டாம் பராந்தகன் என்றும், அவன் மகன் இரண்டாம் ஆதித்யன் என்றும். இவனுக்கு அடுத்து கண்டராதித்தன் மகன் மதுராந்தகன் ஆண்டான் என்றும், அவனையடுத்து இரண்டாம் பராந்தகனின் மகன் முதலாம் இராஜ ராஜன் ஆட்சிக்கு வந்தான் என்றும் தெரிவிக்கிறது.

கரிகாற் சோழனைப் பற்றிக் குறிப்பிடும்போது இச்செப்பேடும் அவன் காவிரிக்குக் கரை அமைத்த தைத் தெரிவிக்கிறது. கோச்செங்கண்ணானைப் பற்றித் தெரிவிக்கையில் சம்புவின் காலடியில் சுற்றும் வண்டு என்று அம்மன்னனை வருணிக்கிறது. கோச்செங்கண் ணானுக்குப் பின் ஆட்சி செய்த கோக்கிள்ளி, அவன் வழியில் வந்த விஜயாலயன், ஆதித்யன் ஆகியோரைப் பற்றி வேறெந்த செய்தியும் கூறப்படவில்லை.

பராந்தகச் சோழனைப் பற்றிக் குறிப்பிடுகையில் (1) பெரிய நகரங்களை உருவாக்கினான் என்றும், (2) சில வெற்றிகளைப் பெற்றான் என்றும் (3) வியாக்ராக்ரஹாராவில் உள்ள சிவன் கோயிலுக் குப் பொன் வேய்ந்தான் என்றும் தெரிவிக்கிறது.

இராட்டிரகூட மன்னன் மூன்றாம் கிருஷ்ண னோடு போரிடுகையில் பராந்தகனின் மைந்தன் இராஜாதித்யன் இறந்து விட்டான் என்று குறிப்பிடு கிறது. கண்டராதித்த சோழன் காவிரியின் வடகரை யில் தம் பெயரால் ஒரு நகரம் அமைத்தான் என்றும் மதுராந்தகன் என்னும் குழந்தை பிறந்த பிறகு கண்ட ராதித்தன் இயற்கை எய்தினான் என்றும் தெரிவிக் கிறது. திருச்சி மாவட்டத்திலுள்ள கண்டராதித்தம் என்னும் ஊரே அவன் காலத்தில் அமைக்கப்பட்ட நகரமாக இருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

அரிஞ்சயனின் வீர சாகசங்கள் யாதும் குறிப்பிடப் படாமல், அவனது மகனான இரண்டாம் பராந்தகனின்

சேவூர்ப் போரும், அவனது மகன் இரண்டாம் ஆதித்யன் இளம் வயதினனாக இருக்கும் போதே வீரபாண்டியனை எதிர்த்துப் போரிட்டான் என்றும் குறிக்கப் படுகிறது. மதுராந்தகனைப் பற்றியும் ஒன்றும் சிறப்பாகக் கூறவில்லை. அவனுக்கு அடுத்துப் பட்டம் எய்திய முதலாம் இராஜராஜன் பாண்டிய, கேரள, துளு நாடுகளை வென்றான் என்றும், சிம்ஹனேந்திரனையும் சத்யாஸ்ரயனையும் தோற்கடித்தான் என்றும் விவரிக்கிறது.

தமிழ்ப் பகுதியில், இராஜராஜனின் 21-ஆம் ஆட்சி ஆண்டில், 92-ஆம் நாளில், தஞ்சாவூரில் இராஜாஸ்ரயன் என்னும் தம் அரண்மனையின் தென் பகுதியில் உள்ள மண்டபத்தில் தாம் அமர்ந்திருக்கையில், கடாரத்தரையன் சூளாமணிமணிபன்மன், க்ஷத்ரிய சிகாமணி வளநாட்டுப் பட்டனக் கூற்றத்து நாகப் பட்டணத்தில் எடுப்பித்திருக்கின்ற சூடாமணி விகாரத்துப் பள்ளிக்கு வேண்டும் நிவந்தங்களுக்காக, க்ஷத்ரியசிகாமணி வளநாட்டுப் பட்டனக் கூற்றத்து ஆனைமங்கலத்தைப் பள்ளிச் சந்தமாக அளித்ததைக் குறிக்கிறது.

திருவாலங்காடு செப்பேடு

(முதலாம் இராசேந்திரன் காலம்)

இப்பட்டயம் 31 ஏடுகளை உடையதாகவும், ஏடுகளில் இரு பக்கங்களிலும் எழுதப் பெற்றுள்ளதாகவும் காணப்படுகிறது. இவ்வேடுகள் அனைத்தும் ஒரே வளையத்தில் கோர்க்கப்பட்டு வளையத்தின் மீது சோழர் சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது.

சமஸ்கிருதம், தமிழ் என இரு பகுதிகளைக் கொண்டுள்ளது. கிரந்த எழுத்தில் எழுதப் பெற்றுள்ள வட மொழிப் பகுதி 271 வரிகளையுடையது. தமிழ் எழுத்

தில் உள்ள தமிழ்ப் பகுதி 524 வரிகளைக் கொண்டது.

வடமொழிப் பகுதியில், சோழ மன்னன் விசயாலயன் தஞ்சாவூரை வென்று, தஞ்சையை தலைநகராக்கியதோடு, நிசும்பசூதனிக்கு கோயில் எடுப்பித்தது, ஆதித்த சோழன் அபராஜிதப் பல்லவனை வென்றது, அவன் மகன் முதலாம் பராந்தகன் மதுரையையும், ஈழத்தையும் வென்றது, தில்லைச் சிற்றம்பலத்துக்குப் பொன் வேய்ந்தது, பராந்தகன் மகன் முதலாம் இராஜாதித்தன் ராட்டிரகூட மன்னன் மூன்றாம் கிருஷ்ணனைத் தோற்கடித்தது, இரண்டாம் பராந்தகனான சுந்தர சோழன் இறந்துபட, அவன் பட்டத்தரசி வானவன் மாதேவி உடன்கட்டை ஏறியது, முதலாம் இராஜராஜன் பாண்டிய மன்னன் அமரபுயங்கனை வென்றது, அவன் மைந்தன் முதலாம் இராஜேந்திரன் பாண்டியனை வென்று, பாண்டி நாட்டில் தம் மகனைச் சோழ பாண்டியன் என்று பட்டம் சூட்டி தம் பிரதிநிதியாக ஆக்கியது, இராஜேந்திரன் ஆணையை ஏற்று அவன் படைத் தலைவன் கங்கைவரை படை நடத்திச் சென்று அங்குள்ள மன்னர்களை வென்று கங்கை நீரைக் கொணர்ந்து, கங்கைகொண்டசோழபுரத்தில் சோழ கங்கம் என்ற ஜலஸ்தம்பத்தை உருவாக்கியது ஆகியவை அழகாக வருணிக்கப்பட்டுள்ளன.

தமிழ்ப் பகுதி, கோநேரின்மை கொண்டான் என்று தொடங்குகிறது. இப்பகுதி இரு பிரிவாகக் காணப்படுகிறது. முதல் பிரிவு சயங்கொண்ட சோழ மண்டலத்து மணவிற்கோட்டத்துப் பழையனூர் நாட்டுப் பழையனூர் உடையார் திருவாலங்காடு உடையார் கோயில் அம்மை நாச்சியார்க்குத் தேவதானமாக 251/2 வேலி நிலம் வழங்கப் பெற்றிருப்பதைத் தெரிவிக்கிறது. இரண்டாம் பிரிவு திருவாலங்காடுடைய மாதேவர்க்கு வழங்கப் பெற்ற கொடையைப் பற்றிக் குறிக்கிறது.

இராஜேந்திர சோழன், முடிகொண்ட சோழபுரத்து வீட்டின் உள்ளால் உள்ள கருமாளிகை மதுராந்தக தேவனில் தெற்கில் மறைவிடத்தில் எழுந்தருளி இருந்த போது இவ்வாணை வழங்கப்பட்டிருக்கிறது.

நடுவின்மலை பெருமூர் நாட்டுச் சிங்களாந்தகச் சருப்பேதி மங்கலத்துச் சபையார்க்கு பிரம்மதேயமாய் இருந்து வந்த மேல்மலைப் பழையனூர் நாட்டுப் பழையனூரை பிரம்மதேயத்தினின்று தவிர்த்து வெள்ளான் வகையில் மாற்றிப் பழையனூர் திருவாலங்காடு உடைய மகாதேவர்க்குக் கொடையாக வழங்கப் பெற்றது. இம்மாற்றத்தினால் திருவாலங்காடு மாதேவர்க்கு ஆண்டுதோறும் 3288 கலம் 7 குறுணி, 5 நாழி நெல்லும், 193 கழஞ்சு, 1 மஞ்சாடி, 1 மா பொன்னும் வருவாய் கிடைக்குமாறு ஏற்பாடு செய்யப்பட்டது.

கொடையாக வழங்கப்பட்ட ஊரின் அனைத்து வகையான நிலப் பகுதிகளும் அதில் அடங்கும் என்பதை "இவ்விசைத்த பெருநான்கெல்லையுள்ளும் அகப்பட்ட நீர்நிலனும் புன்செய்யும், ஊரும் ஊரிருக்கையும், மனையும் மனைப் படைப்பையும், மன்றும் குன்றும், குளமும் கொட்டகாரமும், புற்றும் தெற்றியும், காடும் பீடிலிகையும், களரும் உவரும், ஓடையும் உடைப்பும், ஆறும் ஆறிடுபடுகையும், மீன்பயில் பள்ளமும் தேன்பயில் பொதும்பும், மேனோக்கிய மரமும் கீழ்நோக்கிய கிணறும், கிடங்கும் கேணியும், ஏரியும் ஏரிநீர்க்கோப்பும் உள்ளிட்டு நீர் பூசி நெடும்பரம்பு எறிந்து உடும்போடி ஆமை தவழ்ந்த எவ்வகைப்பட்டதும் உண்ணிலம் ஒழிவின்றி" என்று தெரிவிக்கிறது.

கரந்தைச் செப்பேடு (முதலாம்

இராசேந்திரன் காலம்)

நராக்கன் மாராயன் என்னும் இராஜேந்திர சோழ

பிரமாதிராஜனது வேண்டுகோளுக்கிணங்க, முதலாம் இராஜேந்திரன், தமது தாயின் பெயரில் திரிபுவன மாதேவிச் சதுர்வேதிமங்கலம் என்னும் அக்ர ஹாரத்தை அமைத்துத் தந்ததை இச்செப்பேடு குறிக் கிறது. மன்னனின் எட்டாம் ஆட்சியாண்டில் வெளி யிடப்பட்டது.

சமஸ்கிருதப் பகுதியில் முதல் பாடலிலிருந்து பன் னிரண்டாம் பாடல்வரை வழக்கம் போலவே சோழர் வம்சத்தின் புராண அரசர்களைப் பற்றி தெரிவிக் கிறது. பதின்மூன்றாம் பாடல் தொடங்கி வரலாற்றுக் கால மன்னர்களைப் பற்றி குறிப்பிடுகிறது. சங்க காலச் சோழர் கரிகாலன் காவிரிக்குக் கரை அமைத்த தைக் கூறுகிறது. அதற்கு அடுத்து பல மன்னர்களுக் குப் பிறகு அக்குலத்தில் விஜயாலயன் தோன்றினான் என்று குறிப்பிடுகிறது. அடுத்து ஆதித்யனைப் பற்றி விமர்ச்சிக்கிறது. ஆதித்யனான சூரியன் எவ்வாறு இருளைப் போக்கியதோ அது போன்று தம் எதிரிகளை அழித்தான் என்று புலப்படுத்துகிறது. ஆதித்யனின் மகனான பராந்தகன் இலங்கை வேந்தனையும், பாண் டிய, கேரள, பல்லவ மன்னர்களையும் வென்றதாக குறிப்பிடுகிறது. தாம் வென்ற நாடுகளிலிருந்து கொண்டு வந்த தூய்மையான தங்கத்தால் வியாக்ராக்ர ஹாரா (சிதம்பரம்)வில் உள்ள சிவன் கோயிலுக்குப் பொன் வேய்ந்ததைத் தெரிவிக்கிறது. மேலும் பராந்த கன் தம் பெயரால் வீரநாராயண அக்ரஹாரம் என்னும் ஊரை ஏற்படுத்தியதையும், ஆயிரக்கணக்கான கால் வாய்கள் அமைத்துச் சோழ நாட்டை வளப்படுத்திய தையும் விவரிக்கிறது.

பராந்தகனுக்குப் பிறகு அரிஞ்சயன் ஆட்சி செய்த தையும், அவனது மகன் இரண்டாம் பராந்தகன் தம் எதிரிகளோடு சேவூரில் போரிட்டதையும், வீரபாண்டி




யனை வென்றதையும் புகலுகிறது. இதனை அடுத்து இரண்டாம் பராந்தகனின் மகனான முதலாம் இரா ஜராஜனைப் பற்றி விரிவாக விளக்குகிறது. இராஜ ராஜனின் தோற்றத்தைக் குறிப்பிட்டுவிட்டு, அவன் சிங்கள, பாண்டிய, கேரள, கொங்க, மாளவ, ஆந்திர அரசர்களை வென்றதும், அவர்களது நாடுகளிலிருந்து மிகுந்த செல்வங்களைக் கொண்டு வந்ததையும் தெரி விக்கிறது.

முதலாம் இராஜராஜனுக்கு மகனாக மதுராந்தகன் பிறந்தான் என்று குறிப்பிடுகிறது. கலியை அழிக்க ஹரி பிறந்ததைப் போன்று பிறந்தான் என்று ஒப்பிடு கிறது. மதுராந்தகன் இளமைப் பருவத்திலேயே தன் குடும்பத்தாருக்கு புகழைச் சேர்ப்பவனாகவும், எதிரி களுக்கு அச்சத்தைத் தோற்றுவிப்பவனாகவும், எல்லா வித போர்ப் பயிற்சிகளிலும் தேர்ச்சி பெற்றவனாகவும் விளங்கினான் என்றும் கூறுகிறது.

இராஜேந்திரனது நட்பைப் பெறுவதற்காகவும், அதன் மூலம் தம் ஆட்சியைப் பாதுகாத்துக் கொள்வ தற்காக்வும், காம்போஜ நாட்டு மன்னன் இராஜேந்திர சோழனுக்கு ஒரு தேரை அனுப்பி வைத்ததாகவும், அதன் துணை கொண்டு இராஜேந்திரன் தம் எதிரி களின் படைகளைத் தோற்கடித்தான் என்றும் கூறு கிறது. சக்கரக் கோட்டத்து மன்னனும் தம் ஆட்சியைப் பாதுகாத்துக் கொள்வதற்காகப் பல யானைகளைப் பரிசாக இராஜேந்திரனுக்கு அனுப்பி வைத்ததாகத் தெரிவிக்கிறது.

மான்யகேட்டாவைக் கைப்பற்றும்வரை தமக்கு ஓய்வு, உறக்கம் ஏதும் இல்லை என்று முதலாம் இராஜ ராஜன் சூளுரைத்ததையும், அதை அவன் நிறைவேற்ற முடியாமலேயே இறந்து விட்டதையும், அவன் மக னான இராஜேந்திரன்தாம் தம் தலைநகரத்தில் இருந்து

கொண்டே மான்யகேட்டாவைத் தம் படை வலிமையால் தீயிட்டுக் கொளுத்தினான் என்றும், அரச குலப் பெண்களெல்லாம் மேக மூட்டங்களுக்கு இடையே எழும் மின்னலைப் போன்று தீயில் எரியும் அரண்மனையிலிருந்து எழும் புகைக் கூட்டத்திற்கு இடையே அச்சத்தினால் திகைத்து அங்குமிங்கும் ஓடினார்கள் என்றும் மிக அழகாக விவரிக்கிறது. அடுத்து இராஜேந்திரன் சிங்களத்திற்குச் சென்று இலங்கை வேந்தனையும், அவனது பெண்டிர் பண்டாரத்தையும் சிறைப் பிடித்ததையும், பாண்டியனது முடியைக் கைப்பற்றியதையும் புலனாக்குகிறது. இறுதியாக இராஜேந்திரன் கீழ்த்திசை நாடான கடாரத்தை வென்றதையும் தெரிவிக்கிறது.

செப்பேட்டின் தமிழ்ப் பகுதியானது, "நமக்கு (இராஜேந்திர சோழருக்கு) யாண்டு எட்டாவது, நாள் நூறேழிநால் நாம் பெரும்பற்றப் புலியூர் விட்ட வீட்டின் உள்ளால் மாளிகையின் கீழை மண்டபம் இராஜேந்திர சோழ ப்ரமாதிராஜனில் நாம் உண்ணாவிருந்த" பொழுது இப்பரிசு அளிக்கப்பட்டதை புலப்படுத்துகிறது. ஐம்பத்தொரு ஊர்கள் ஒன்றாகச் சேர்க்கப்பட்டு த்ரிபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலம் என்று ஒரு அக்ரஹாரம் ஏற்படுத்தி 1080 சதுர்வேதி பட்டர்களுக்குப் பங்காக அளிக்கப்பட்டதைக் கூறுகிறது. ஊர்களின் பெயர்கள், அவைகளின் எல்லைகள், பட்டர்களின் பெயர்கள், அவர்களது ஊர்கள் ஆகியவை தரப்பட்டுள்ளன.

### திருக்களர்ச் செப்பேடு
### (முதலாம் இராசேந்திரன் காலம்)

தஞ்சாவூர் மாவட்டம், திருக்களர் என்னும் ஊரைச் சார்ந்த பாரிஜாதவனேஸ்வரர் கோயிலைச் சேர்ந்தது இச்செப்பேடு. இச்செப்பேடு பற்றி முதன் முதலில்

1902-03 ஆம் ஆண்டு, கல்வெட்டு ஆண்டறிக்கையில் சிறு குறிப்பு வெளி வந்தது. ஐந்து செப்புப் பட்டயங் கள் ஒரு வளையத்தில் கோர்த்துக் காணப்பட்டன. ஐந்து பட்டயமும், ஐந்து சோழ மன்னர்களின் காலத் தைச் சேர்ந்தவை. இவற்றில் முதலாம் செப்புப் பட்ட யம் முதலாம் இராஜேந்திர சோழனின் காலத்தில் வெளியிடப்பட்டது. இப்பட்டயம் ஒரு செப்புத் தகட் டில் இரு பக்கங்களிலும் எழுதப்பட்டுள்ளது.

வழக்கமாகக் காணப்படுவதற்கு மாறாக இதில் தமிழ்ப் பகுதி மட்டுமே காணப்படுகிறது. 'திருமன்னி வளர' என்றே கல்வெட்டு வாசகம் தொடங்குகிறது. இப்பட்டயம் மன்னனின் 18-ஆம் ஆட்சி ஆண்டில் எழுதப்பட்டிருக்கிறது. திருக்களர் மஹாதேவர் கோயிலுக்கு அளிக்கப்பட்ட தேவதான நிலத்தைப் பற்றித் தெரிவிக்கிறது. திருக்களர் என்னும் ஊர், அரு மொழி தேவ வளநாட்டில் உள்ள புறங்கரம்பை நாட் டில் அடங்கிய பகுதி என்று தெரிவிக்கிறது.

திருக்களர்ச் செப்பேடு

*(முதலாம் இராசாதிர்ராசன் காலம்)*

இச்செப்புப் பட்டயம் ஒரே தகட்டில் ஆறு வரி களில் எழுதப்பட்டுள்ளன. இராஜகேஸரியான முத லாம் இராஜாதிராஜனின் 31-ஆம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்டிருக்கிறது. திருக்களர் உடையார்க்கு முன்பு ஆராதனை செய்து வந்த பிராமணனுடன் மற்றும் ஒரு பிராமணனை நியமித்து இருவருக்கும் ஒரு நாளைக்கு தூணிகுருணி நெல் என்னும் விகிதத்தில் 365 நாளைக்கு 157 கலன் நெல்லை நிவந்தமாக அரை யன் நாகரையநான மஹிபாலக்குலகாலப்பேரரைய நான திருமணப்பிச்சன் அளித்ததைத் தெரிவிக்கிறது.

சாராலா செப்பேடு *(வீரராசேந்திரன் காலம்)*

இச்செப்பேடு, 1931-ஆம் ஆண்டு, சித்தூர் மாவட்டத்தில் உள்ள பங்கனூர் வட்டத்தைச் சேர்ந்த சராலா என்னும் ஊரில், நரசா ரெட்டி என்பவர் தம் எருக்குழியிலிருந்த மண்ணை அகற்றுகையில் கண்டெடுக்கப் பட்டது. தற்போது கல்கத்தாவிலுள்ள இந்திய அருங்காட்சியகத்தில் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இப்பட்டயம் ஏழு ஏடுகளைக் கொண்டதாகவும், மொத்தம் 211 வரிகளையுடையதாகவும் விளங்குகிறது. அனைத்தும் ஒரு செப்பு வளையத்தில் கோர்க்கப்பட்டு வளையத்தின் மீது சோழ அரசு முத்திரை இடப்பட்டிருக்கிறது.

வழக்கம் போலவே இப்பட்டயமும் சமஸ்கிருதம், தமிழ் என இரு பகுதிகளைக் கொண்டுள்ளது. சமஸ்கிருதப் பகுதியில் மன்னனின் வழிமுறை விரித்துக் கூறப்பட்டிருக்கிறது.

சோழ மன்னன் இராஜகேசரி வீரராஜேந்திரனின் 7-ஆம் ஆட்சி ஆண்டில் இப்பட்டயம் எழதப்பட்டுள்ளது. சக ஆண்டு 991 என்றும் குறிக்கப்பட்டுள்ளது. தமிழ் ஆண்டு 'சௌமியா' என்றும் தரப்பட்டுள்ளது.

உத்தராயண சங்கராந்தியன்று புலி நாட்டைச் சார்ந்த சேராம் என்னும் மதுராந்தகச்-சதுர்வேதிமங்கலம் என்ற ஊரை மூன்று பிராமணர்களுக்குத் தானமாக வழங்கியதை இச்செப்பேடு குறிக்கிறது.

இப்பட்டயத்தில் குறிக்கப்பட்டுள்ள சோழ மன்னர் வரிசை மிகவும் முக்கியமானதாகும். இம்மன்னன் காலத்திய மிக முக்கியக் கல்வெட்டான கன்னியாகுமரிக் கல்வெட்டில் அழிந்து காணப்படும் பல பகுதிகளைப் பூர்த்தி செய்வதற்கு இச்செப்பேட்டு வாசகங்கள் உதவுகின்றன. இச்செப்புப் பட்டயத்தில் காணப் பெறும் சமஸ்கிருத சுலோகங்கள் கன்னியாகுமரிக்

கல்வெட்டில் காணப் பெறும் சமஸ்கிருத சுலோகங்க ளோடு வரிக்கு வரி ஒற்றுமையுடையனவாகக் காணப்படுகின்றன.

வீரராஜேந்திரன், ஜெயங்கொண்ட சோழ மண் டலத்து எயிற்கோட்டத்து நகரம் காஞ்சிபுரத்துத் திரு வேகம்பமுடையார் கோயில் திருக்காவணத்துத் திரு வோலக்க மண்டபம் ராஜராஜனில் எழுந்தருளியிருந்த போது இப்பட்டயம் வெளியிடப்பட்டதாகக் குறிப் பிடப்படுகிறது.

சிறிய லெயிடன் செப்பேடு

(முதலாம் குலோத்துங்கன் காலம்)

இப்பட்டயம் மூன்று ஏடுகளில் எழுதப்பட்டுள்ளது. மூன்று ஏடுகளையும் ஒரு வளையத்தில் கோர்த்து முத் திரை வைக்கப்பட்டிருக்கிறது. இப்பட்டயம் தற் பொழுது ஹாலந்து நாட்டில் உள்ள லெயிடன் பல் கலைக் கழக அருங்காட்சியகத்தில் வைத்துப் பாது காக்கப்பட்டு வருகிறது.

இச்செப்பேடு முழுதும் தமிழ் எழுத்திலேயே எழு தப்பட்டிருக்கிறது. முதலாம் குலோத்துங்கச் சோழனின் வழக்கமான மெய்க்கீர்த்தியாகிய ''புகழ் மாது விளங்க'' என்னும் தொடரோடேயே தொடங்கு கிறது. மன்னனின் 20-ஆம் ஆட்சி ஆண்டில் எழுதப் பட்டுள்ளது.

ஆயிரத்தளியான ஆஹவமல்லகுலகாலப்புரத்து கோயிலுள்ளால் (அரண்மனை) திருமஞ்ஞன சாலை யில் பள்ளிப் பீடம் காலிங்கத்தரையனில் மன்னன் அமர்ந்திருக்கையில்; கடாரத்தவரயன், ஜெய மாணிக்க வளநாட்டுப் பட்டணக் கூற்றத்து சோழ குலவல்லி பட்டனத்து எடுப்பித்த இராஜேந்திர சோழப் பெரும் பள்ளிக்கும், இராஜராஜ பெரும்

பள்ளிக்கும், பள்ளிச் சந்தமான ஊர்களில் வரிகள் எல்லாவற்றையும் தவிர்த்தமைக்கும்; முன்பு பள்ளிச் சந்தங்கள் காணியுடைய காணியாளரை நீக்கி பள்ளிச் சங்கத்தார்க்கே காணியாக விட்டமைக்கும் இப்பட்டயம் வெளியிடப்பட்டிருக்கிறது.

திருக்களர்ச் செப்பேடு

(முதலாம் குலோத்துங்கன் காலம்)

இப்பட்டயம் மூன்றாம் ஏட்டில் முதல் பக்கத்தில் எழுதப்பட்டிருக்கிறது. 19 வரிகளையுடையது. குலோத்துங்கச் சோழனின் 28-ஆம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்டிருக்கிறது.

இராஜேந்திர சோழ வளநாட்டு, புறங்கரம்பை நாட்டு ·திருக்களருடைய மாதேவர்க்கு, அமாவாசை தோறும் அரவாபரணதேவர் திருவிழா நடத்துவதற்காகவும், அந்நாளில் பெருந்திருவமுது படைக்கவும், பிள்ளையார்க்குத் திருவமுது படைக்கவும், ஸ்ரீமுலத்தானமுடையார்க்கு அமுது செய்தருளவும், தேவர் அடியார்களுக்கு அமுது செய்தருளவும், நென்மலி நாட்டு, தண்ணீர்க்குன்றமுடையான் சிவன் தில்லை நாயகனான சிறுத்தொண்ட நம்பி செய்த உபயத்தைத் தெரிவிக்கிறது இச்செப்புப் பட்டயம்.

இச்செப்பேட்டை வெளியிட்ட குலோத்துங்கச் சோழன் முதலாம் குலோத்துங்கச் சோழன்தான் என்பது இரண்டாம் இராஜராஜனின் திருக்களர்ச் செப்பேட்டின் மூலம் புலனாகிறது.

திருக்களர்ச் செப்பேடு

(இரண்டாம் இராசராசன் காலம்)

இப்பட்டயம் மூன்றாம் ஏட்டின் இரண்டாம் பக்கத்தில் எழுதப்பட்டிருக்கிறது. 17 வரிகளைக் கொண்

டது. இராஜர்ராஜதேவரின் 18-ஆம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்டிருக்கிறது.

சுங்கந்தவிர்த்தருளின குலோத்துங்க சோழ தேவர் காலத்தில் சிவன் தில்லை நாயகன் பக்கல் உபையம் பெற்று திருவமுது செய்து வருகிற ஆண்டார்களில் ஆண் வழி அற்றுப் பெண் வழியான கொத்துக்கு (குடும்பத்துக்கு) யார் இவ்வுபையத்தைத் தொடர்ந்து செய்து வருதல் வேண்டும் என்பதைக் கனகராயரும், ஸ்ரீமாகேசுவரரும் நிச்சயித்ததை இப்பட்டயம் தெரிவிக்கிறது.

திருக்களர்ச் செப்பேடு

*(மூன்றாம் குலோத்துங்கன் காலம்)*

இப்பட்டயம் நான்காவது ஏட்டின் இரு பக்கங்களிலும், ஐந்தாம் ஏட்டின் உட்பக்கத்திலும் எழுதப் பட்டிருக்கிறது. மன்னனின் 29-ஆம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது. ''திரிபுவனச் சக்கரவர்த்திகள் மதுரையும் ஈழமுங் கருவூரும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளிய ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு'' என்று பட்டயம் தொடங்குகிறது.

திருக்களர் நாயனார் கோயில் ஆபரணங்கலளயும், அவைகளின் எடைகளையும் விவரிக்கிறது இச்செப்பேடு. குடிஞைக் கல்லால் எடை நிறுக்கப்பட்டது என்பதையும் தெரிவிக்கிறது. திருக்கொள்கை 1, திருவுதரமாலை பொற்பூ 16, திருவுத்தரியம் 1, திருப்பிறை 1, கன்ன புஷ்பம் 3, திருப்பட்டிகைப் பலகை 1, திருப்பட்டம் 1, திருப்பள்ளியறை நாச்சியார் சிறுதாலி 1, மணி 1, காறை 1, திருமங்கல நாண் 1, தாலி 1, கொக்குவாய் படுகன் 9, திருவாசிகை 1, அரவாபரண தேவர் அபிஷேகம் 1, திருவாரம் 1, திருத்தோடு 2, நாச்சியார் அபிஷேகம் 1, நாச்சியார்

திருவாரம் 1, நாச்சியார் திருத்தோடு 2, திருவட்ட மணி 24, திருவட்டமணிவடம் 3, திருச்சிலம்பு 2, நிறைதவஞ்செய்நாச்சியார் அபிஷேகம் 1, திருநெற் றித் திறநை 1,· திருமங்கலநாண் 1, திருத்தாவடம் 1, திருகைச்சரி 44, வெள்ளி மணி 35, வெள்ளிக்காறை 1, திருத்தோடு 2, திவாரம் 1, சிரச்சக்கரம் 1, திருக் கண்டவாளி 2, திருவுத்தரியம் 1, திருவாசிகைப் புரி மத்தில் பாம்பு 1 ஆகிய ஆபரணங்கள் குறிக்கப் பட்டுள்ளன.



# PULANKURICCI INSCRIPTION
## - a relook

The outstanding Pulankuricci inscription, which was recopied recently by the Tamilnadu State Department of Archaeology helps us gather information to add to what we already know. The epigraph was first discovered and copied by the Department in 1979 (1) A research paper was presented at the Vth International Tamil Conference-Seminar by Dr. R. Nagaswamy (2) He drew the attention of scholars to its importance. He was able to bring out only a few points on the socio-economic and administrative aspects of the inscription as at that time it had not been completely deciphered. In the concluding portion of his paper discussed the date of the inscription and said categorically that it was dated in 192 of the Saka era, corresponding to 270 A.D.

The year 192 mentioned in the inscription appears as the regnal year of Koccendan Kurran. The herostone inscriptions of the following centuries i.e. 5th-6th century A.D. give only the regnal year (3) But the cavern epigraphs belonging to the first three centuries of the christian era do not mention any year (4) So the practice in Tamilnadu till 6th century A.D. was to mention only the regnal year. The 192 found in this

epigraph cannot be taken as the regnal year as in the other cases, since it is too long for an individual. Therefore it must be an era which was not indigenous. It might be an era instituted by the Kalabhra dynasty, as Koccendan Kurran is believed to have been a Kalabhra king (5)

The Kalabhra inroads into Tamilnadu are generally believed to have taken place in the 3rd century A.D. Adding 192 years to 250 A.D. (the probable date of the Kalabhra inroad) makes 442 A.D. as the date of this inscription (6) The palaeography of this record supports this date (7) The Saka date suggested by Dr. R. Nagaswamy is doubted by Thiru N. Sethuraman on the basis of the astronomical details given in this epigraph. According to him, the Saka year is a solar year which begins on Chittirai 1st and ends on the last day of Panguni. Since the 36th day of the year 192, given in this record, falls in the Tamil month of Thai, the year must have started either from Karthigai or Margali. He decides that this inscription quotes a local era which was prevalent at that time.

Dr. Y. Subbarayalu, who examined this inscription *in situ* has pointed out that there are two inscriptions, one starts 'with..ndarku' and another starts with 'Koccendan Kurrarku' (8) This roused the interest of the Department of Archaeology and induced it to copy this epigraph again. Its team of epigraphists (9) have prepared the transcripts which throw more light on the cultural aspects of the period to which these inscriptions belong.

First, there are three inscriptions engraved from north to south on the slope of the hill. The first one, on the northern end was written during the period

of one.,.Cendan whose identity is still in doubt, but may probably be the father of the Cendan Kurran whose inscription is found at the southern end. The second is completely worn out. The third starts with Koccendan Kurrarku yandu nurruttonnurrirandu'. The first, and third are complete, though there is some negligible damage in the first record.

The first inscription records the gift of some land which was purchased from a certain Pulattavan by Kadalakapperumpadaittalaivan, the son of a feudatory. A piece of land called 'Kadayavayal of Chirraiyur', a brahmadaya of Kudalurnadu and another of Vellerranmangalam were the gifts. This consisted of wet and dry lands. The donor also gave his share of taxes collected on Karanmai, Kalakilmai and Melanmai from Pandinadu and Konganadu. It seems that he had also donated his cattle (Kalasam,) his relatives (tamar), and his servant (Kudikal). This reminds us of the Kudininga devadanam of the later cola records. The inscription states specifically who were the administrators of the grant. They were...Udaiyar, Brahmadayamudaiyar, Nadukappar, Purankappar and Uppurkappar. If this grant was misused or was not properly maintained the Neriyaram Ceytar and the Tattamar would enquire and individually punish the defaulter by imposing a fine of one thousand six hundred kanam. The point of interest here is that this appears to be the earliest example of the later practice of enquiring by Dharmasana and awarding punishment during the Pallava and Chola periods.

The executors of this grant were Ulaviyapperuntinai Nallankilan Inanguman, Ulaviyapperuntinai Nallankilan....lankurran and Ulaviyapperuntinai Alatturkilan who seem to have been transit revenue officials. Since this

grant was concerned with a land gift, the revenue officers seemed to have performed the execution of it. Ulaviyapperuntinai Nallankilan Inanguman and Ulaviyapperuntinai Nallankilan...lankurran appear to have been brothers, having had Nallankilan as their father.

The second is completely mutilated. The third which is fortunately well preserved deserves attention. This is the most interesting record. It refers to the establishment of two Devakulams and a Palli at three different places by the donor Kadalakapperumpadaittalaivan, who figures in the first record. A Devakulam was established on the Paccericcin hill of Velkuru village in Ollaiyurkkurram, while the other was at Vilamaru village in Muthurrukkurram. The palli and a shrine (Kottam) of Vasidevanar were established to the north of the Ulaviyattan tank of Matirai. The donor entrusted these to the Attikosattar (the elephant corps of merchant guild), Ulmanaiyar (Manaipperunjanam of the Perungathai and the Akapparivaram of the later Chola period), and Narpartinai (probably the four kinds of army).

These temples seem to have been maintained by Pandakar (Treasurer), Cevukar (Meykaval), Marumaccarikal (may be equalled with the pariccarahar of later period) Dharmikal (Devakanmikal) and Kavalkondaru. The Executors of this grant are Ulaviyapperuntinai Nallankilan Inankuman, Ulaviyapperuntinai...Arukilan Kiran Kari and Ulaviyapperuntinai Ambar Kilan Kumarampondai. The scribe who wrote on palm leaf is mentioned as Kiran Kari and the name of the engraver on the stone is found as "Naraiyankari of Vennadu".

**Territorial Divisions**

In the Sangam age Tamilakam was broadly divided into Chera, Chola and Pandi nadus. They were in turn divided into nadus or kurrams and urs for administrative reasons. The present inscriptions mention some nadus, kurrams, mangalams and urs. Pandi and Konganadus are mentioned as the bigger divisions. Kudalur nadu, Vennadu, Ollaiyurkkurram and Muthurrukurram are found the next small divisions and the Brahmadeya villages and urs seem to have been the smallest units in those days.

References to Konganadu are rare in Sangam works. It seems that it gained popularity during the 4th-5th century, since it is found in this epigraph as one of the biggest divisions. An interesting feature is mention of a brahmadaya village Cirraiyur of Kudalur nadu, which seems to have continuously been a brahmadeya village in Kudalurnadu even during the 12th-13th century A.D. according to a late inscription (10) As per medieval chola records, (11) this Kudalur nadu and Ollaiyur kurram cover the area of present Tirumayam Taluk in Pudukkottai district. Kudalur nadu seems to have been named after a village called Kudalur which is about 15 km: north of Pulankuricci. Kudalur is mentioned in inscription of a later period as Sundaracholapurattu kudal (12) Mutturrukkurram covers the area of the present Arantangi and Tiruvadanai taluks (Pudukkottai district) while Vennadu represents Mayiladuthurai and Nannilam taluks (Thanjavur district) (13)

**Devakulams, Palli and Kottam**

The words, 'Il' and 'Perumpadai' occur in 'Tolkappiyam' in connection with hero worship. They may be the initial form of the temple. In 'Silappatikaram', we get references to Koyil, Kottam, Niyamam and Nagaram for different deities. An earlier reference to a Devakulam occurs in an inscription of Mahendravarman I, at Vallam in Cengalpattu District (14) This Devakulam was established by an individual named Kandasenan, the son of Vayantapiriarasar during the period of Mahendravarman, the Pallava king. It is a cave temple enshrining Siva. Therefore the Devakulams in the Pulankurichi inscription may represent the temple either of Siva or Vishnu.

'Maduraikkanji' refers to a number of Jain and Buddhist monasteries at Madurai. Kadalakapperumpadaittalaivan seems to have added a palli at north of the Ulaviyattan tank at Madurai. The tank cannot be identified now.

## Some ancient terms

A number of interesting ancient names occur in these two epigraphs for various kinds of social, religious, commercial organisations. Three kinds of people are referred to as the custodians of the temples and palli, namely Attikosattar, Ulmanaiyar and Narparthinai. The term 'Attikosam' has been elaborately discussed by Thiru. Poongunran in his article, identifying it as a group of soldiers (elephant corps) employed by the merchant guilds (15) Ulmanaiyar is identified with Manaiperunjanam mentioned in 'Perungathai' (16) This may also be identified with Akapparivaram of the Medieval Chola period. These were guarding the palaces. The proper meaning of Narparthinaikal is not understood, but it may probably be the

guardians of four kinds of land.

The persons who were entrusted with administering the endowment are called Pandakar, Sevukar, Virumaccarikal, Dharumikal and Uru Kavalkondar. Pandakar may be the same as Pandarakar, the treasurer. Sevukar may be equivalent to the Meykaval of the later period. The meaning of Virumaccarikal is not clear but probably the paricarakar of Chola period. Dharumikal are the Devakanmikal and Uru Kavalkondar are the village police. It seems that Velkuru was the ancient name of the present Pulankuricci which had a Kudumbu to govern the activities of the village. The first mention of Kudumbu occurs in a Brahmi inscription at Tirupparankunram (17)

**Executive Officers**

As executive staff, five officers are mentioned in both the inscriptions. All have the title Ulaviyapperuntinai indicating that they were the transit revenue staff.

The following are the texts of the first and the third inscriptions:

பூலாங்குறிச்சி மதகுமலைச் சரிவின்

வடபுறம் உள்ள கல்வெட்டு

1. .....ந்தற்கு யாண்டு நூற்றுத்..........
2. ............நூ...............
3. ............ நா....லுள்ள .... தா....ம....
4. ......... மருகண் மகன் [க்]டலகப் பெ......
5. ......ல் ......ன்[ஒ)ல்லையூருக்கூற்[ற]

